# 1 நாட்டுப்புறக் கதைகள்

## வியாபாரியின் கோபம்

வியாபாரி ஒருவர் பலசரக்குக் கடை ஒன்று நடத்தி வந்தார். அதில் லாபம் சம்பாதித்து, லட்சக்கணக்கான பணமும் சேர்த்து விட்டார். அவருடைய சொத்தில், நூற்றில் ஒரு மடங்குதான் வியாபாரத்தில் லாபம் மூலம் சம்பாதித்தது; தொண்ணூற்றொன்பது பங்கு சிக்கனத்தின் மூலம் சேர்த்தது.

அந்த வியாபாரி மத்தியானச் சாப்பாட்டுக்காக, பலசரக்குக் கடையிலிருந்து வீட்டுக்கு வந்தார்; அவருடைய மகன் அவருக்குப் பின்னாடியே வந்துவிட்டான். இருவரும் சாப்பிட்டுவிட்டு எழுந்தனர். மகன் தன் சுயபுராணத்தை விரிக்க சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். வியாபாரி திண்ணையில் வந்து உட்கார்ந்ததும் மகன் ஆரம்பித்தான்.

''அப்பா, இன்று காலையில் நான், நம் கடையில் மிளகு மூட்டையை அவிழ்க்க வேண்டியிருந்தது. அப்போது மூட்டைக்குள் கையை விட்டுத் துழாவி மிளகை எடுத்து, வந்தவர்களுக்கு விற்றேன். பிறகு மிளகு மூட்டைக்குள் விட்ட கையைத் தரையில் கழுவிக் கொட்டினால் நஷ்டம் என்று, ஒரு பாத்திரத்தில் ஐந்து விரல்களையும் உள்ளங்கையையும் நன்றாகக் கழுவினேன். அப்படிக் கழுவின தண்ணீரைக் கொண்டு வந்து ரசம் வைப்பதற்காக வீட்டில் கொடுத்தேன். நாம் இப்போது சாதத்துக்கு விட்டுச் சாப்பிட்ட மிளகு ரசம், அந்தத் தண்ணீரைக் கொண்டு தயார் செய்ததுதான். இப்படிச் சிக்கனமாக இல்லாவிட்டால் பிழைக்க முடியுமா, அப்பா?''

மகன் சரியாகப் பேசி முடிக்குமுன்பே, வியாபாரி துள்ளி எழுந்தார். மகன் எதிர்பார்த்தது போல் அவர் மகனுடைய முதுகைத் தட்டிக் கொடுக்கவில்லை. அதற்குப் பதிலாக அவருக்கு மகன்மீது மட்டுக்கு மிஞ்சிய கோபம் பிறந்துவிட்டது. மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க, ''அடே, என்

சொத்தை இப்படி நாசமாக்குவதற்கா உன்னைப் பெற்றெடுத்தேன்? ஒரு முழுக் கையையும் கழுவிய தண்ணீரை இன்று ரசம் வைத்துச் சாப்பிட்டு விட்டோமே! இப்படிச் செலவு செய்தால் கட்டுமா? இன்றைக்கு ஒரு விரலை மட்டும் கழுவி, அதைக் கொண்டு ரசம் வைக்கச் சொல்லியிருக்கக் கூடாதா? ஐந்து விரல் தண்ணீரும் ஐந்து நாளைக்கு வருமே! இப்போது எல்லாம் வீணாகி விட்டதே! போ! என் முகத்தில் விழிக்காதே!'' என்று சீறி விழுந்தார் வியாபாரி.



# இரண்டு தம்பிகள்

ஒரு ஊரில் ஒரு பெரியவர் இருந்தார். அவருக்கு மிகவும் வயதாகிவிட்ட படியால், எந்த ஒரு காரியத்தை முன்னிட்டும் அவர் வெளியூர்களுக்குப் போவதில்லை. அவருக்குப் பதிலாக அவருடைய இரண்டு குமாரர்களும் போய் வருவார்கள்.

மூத்தவன் கடந்த பத்து வருஷகாலமாக கல்யாணங்களுக்கு மட்டும் போய் வந்து கொண்டிருந்தான். அதனால் அவனுக்குக் கல்யாண வீட்டுத் தம்பி என்று பெயர்.

இளையவன் கடந்த பத்து வருஷகாலமாக இழவுகளுக்கு மட்டும் போய் வந்துகொண்டிருந்தான். அதனால் அவனுக்கு இழவு வீட்டுத் தம்பி என்று பெயர்.

மூத்தவன் இழவு வீட்டைப் பார்த்ததுகூட இல்லை; இளையவன் கல்யாண வீட்டைக் கனவில் கூடப் பார்த்ததில்லை.

ஒரு நாள் இரண்டு பேரும் வழக்கத்தை மாற்ற முற்பட்டார்கள். மூத்தவன் இழவு வீடு எப்படி இருக்கிறது என்று பார்க்க ஆசைப்பட்டான். அப்படியே, தம்பிக்கும் கல்யாண வீட்டைப் பார்க்க ஒரே ஆவல்.

ஏக காலத்தில் இரண்டு கடிதங்கள் வெவ்வேறு ஊர்களிலிருந்து வந்தன. ஒன்று கல்யாணப் பத்திரிகை; மற்றொன்று இழவோலை. புது ஏற்பாட்டின்படி அண்ணன் இழவு வீட்டுக்குப் போனான்; தம்பி கல்யாண வீட்டுக்குப் போனான்.

இழவு வீட்டில் நுழைந்த அண்ணன், ''என்ன இப்படி அழுகையும் புலம்பலுமாய்க் கிடக்கிறீர்கள்! சீ, நல்ல நாளில் இது என்ன வழக்கம்! சந்தோஷமாக வந்து உட்காருங்கள். இன்று யாருடைய சதிர் நடக்கப் போகிறது? எந்த ஊர் மேளம்? பட்டணப் பிரவேசம்...'' என்று சொல்லி முடிக்குமுன்பே, அங்கிருந்தவர்கள், அடித்து உதைத்து அண்ணனை வெளியே தள்ளிவிட்டார்கள். ஒன்றும் புரியாமல் அண்ணன் 'தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று ஊர் வந்து சேர்ந்தான்.



கல்யாண வீட்டுக்குப் போன தம்பி, போகும்போதே முக்காடு போட்டுக் கொண்டு போனான். அப்போது அங்கு நாட்டியக் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. மாப்பிள்ளையும் பெண்ணும் பூமாலைகளைச் சுமந்து கொண்டு, நாட்டியம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். உள்ளே போன தம்பி, ''ஐயோ! இப்படி அநியாயச் சாவு வருமா உனக்கு? என்ன ஐயா, எல்லோரும் சிரித்துக் கும்மாளம் போடுகிறீர்கள்? நேரமோ இரவு. காலாகாலத்தில் மயானத்துக்குப் போக வேண்டாமா? அவனை (மாப்பிள்ளையை) உட்கார்த்தி வைத்து வேடிக்கை பார்க்கிறீர்களா?'' என்று அலறினான்.

அண்ணனுக்குக் கிடைத்த மரியாதைக்கு இரட்டிப்பு மரியாதை தம்பிக்குக் கிடைத்தது. அவனும் ஊருக்கு வந்து சேர்ந்தான்.

தகப்பனார் விபரம் அறிந்து, ''தெரியாத காரியத்தில் தலையிட்டால் இந்த அபாயம் தானப்பா. இனிமேல் அவரவர்களுக்கு எதில் பழக்கமும் திறமையும் உண்டோ அதை மட்டும் செய்யுங்கள்'' என்று தம் குமாரர்களுக்குப் புத்திமதி சொன்னார்.

அது முதல் அண்ணன் கல்யாண வீட்டுக்கே போனான்; தம்பி கல்யாண வீட்டுக்குப் போகிறவர்களைப்போல அத்தனை குஷியோடு இழவு வீடுகளுக்குப் போய் வந்தான்.

- ***கு. அழகிரிசாமி***
'சக்தி களஞ்சியம்'

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| சுயபுராணம் | - | சொந்தக் கதை |
| சாதம் | - | சோறு |
| மட்டுக்கு மிஞ்சிய | - | அளவுக்கு அதிகமான |
| சதிர் | - | கிராமிய ஆடற் கலைகளில் ஒன்று |
| இழவு | - | சாவு |
| இழவோலை | - | சாவை அறிவிக்கும் கடிதம் |

## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. வியாபாரியின் மகன் தனது சாமர்த்தியத்தை வெளிப்படுத்தும் விதமாகச் செய்த செயல் என்ன?
2. வியாபாரி தனது மகன்மீது ஏன் கோபமடைந்தார்?
3. வியாபாரியின் குணப்பண்புகளாக நீர் இனங்காண்பவற்றினைத் தருக.
4. மூத்தவன் 'கல்யாண வீட்டுத் தம்பி' என, பிறரால் அழைக்கப்படக் காரணம் என்ன?
5. 'இரண்டு தம்பிகள்' என்னும் கதை மூலம் நீர் பெற்ற படிப்பினை யாது?
6. 'இரண்டு தம்பிகள்' என்னும் கதைக்கு அதன் தலைப்பு பொருந்து மாற்றைக் கூறுக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

'வியாபாரியின் கோபம்' என்ற கதையினை உமது நண்பர்களுடன் சேர்ந்து நாடகமாக பிரதிஆக்கம் செய்து நடித்துக் காட்டுங்கள்.

# எழுத்து

தரம் 6,7 ஆகிய வகுப்புகளில் கற்றுள்ள எழுத்துகள் தொடர்பான விடயங்களை நினைவுபடுத்திக்கொள்வோம்.




## ஆய்த எழுத்து (ஃ)

★ ஆய்த எழுத்து என்பது முப்புள்ளி வடிவில் அமைந்ததாகும்.

★ இந்த எழுத்து இன்று மிகக் குறைந்தளவிலேயே பயன்படுத்தப்படுகிறது.

உதாரணம் - மஃமூத், அஃறிணை, இஃது

## கிரந்த எழுத்துகள்

★ வடமொழிக்கலப்பினால் தமிழில் புகுந்து, நெடுங்காலமாக வழங்கி வரும் எழுத்துகள்.

ஜ, ஸ, ஷ, ஸ்ரீ, க்ஷ, ஹ




1. பின்வரும் பாடலில் இடம்பெற்றுள்ள உயிர் எழுத்துகள், மெய் எழுத்துகளை இனங்கண்டு எழுதுக.

**ஏறாத மேடுகள் ஏறி வந்தேன் - பல**
**ஏரி குளங்கள் நிரப்பி வந்தேன்**
**ஊறாத ஊற்றிலும் உட்புகுந்தேன் - மணல்**
**ஓடைகள் பொங்கிட ஓடி வந்தேன்.**

2. நீங்கள் இனங்கண்டு எழுதிய உயிர் எழுத்துகளை, குறில், நெடில் என்ற அடிப்படையில் வேறுபடுத்திக் காட்டுக.

3. நீங்கள் இனங்கண்டு எழுதிய மெய் எழுத்துகளை வல்லினம், இடையினம், மெல்லினம் என்ற அடிப்படையில் வேறுபடுத்திக் காட்டுக.

4. மேற்படி பாடலில் நீங்கள் இனங்கண்டு எழுதிய உயிர் எழுத்துகளையும் மெய் எழுத்துகளையும் பயன்படுத்தி இருபது உயிர்மெய் எழுத்துகளை ஆக்குக.

5. ஆய்த எழுத்து இடம்பெற்றுள்ள சொற்கள் இரண்டினை எழுதுக.

6. பின்வரும் சொற்களில் அமைந்துள்ள கிரந்த எழுத்துகளை எழுதுக.
நஷ்டம், வருஷம், ஜனாதிபதி,

# ஒத்த கருத்துச் சொற்கள்

| | | |
|---|---|---|
| அசதி | - | அயர்ச்சி |
| ஆசிரியன் | - | உபாத்தியாயன் |
| ஆரணியம் | - | காடு |
| ஈதல் | - | கொடுத்தல் |
| இடும்பை | - | துன்பம் |
| உகத்தல் | - | விரும்புதல் |
| ஊசல் | - | ஊஞ்சல் |
| எழில் | - | அழகு |
| ஏகம் | - | ஒன்று |
| ஐசுவரியம் | - | செல்வம் |
| ஐயை | - | தலைவி |
| ஒடுக்குதல் | - | அடக்குதல் |
| ஓம்பல் | - | பாதுகாத்தல் |

## பயிற்சி

**1.** பின்வரும் சொற்களில் பொருள் வேறுபாடு கொண்ட சொல்லினைத் தெரிவு செய்க.

1. அந்தி, சாயங்காலம், மாலை, அடுக்கல், வைகறை, சாய்பொழுது
2. அறம், தருமம், கொடை, வண்மை, மறம், ஈகை
3. ஒலி, சத்தம், அரவம், பாம்பு, ஓசை, கம்பலை
4. கடல், வேலை, சக்கரம், சமுத்திரம், ஆழி, அளக்கர்

**2.** கீழே தரப்பட்ட வாக்கியங்களில் தடித்த எழுத்துக்களில் தரப்பட்டுள்ள சொற்களுக்குப் பொருத்தமான ஒத்தகருத்துள்ள சொல்லை அடைப்புக் குறிக்குள் இருந்து தெரிவுசெய்க.

1. வீட்டின் முற்றத்தில் அழகிய **விருட்சம்** நின்றது (வேம்பு, மரம், ஆரணியம்)
2. இராமன் **கன்னல்** சாப்பிட்டான். (கலாபம், கரும்பு, கதம்பம்)
3. அவனை **அரவம்** தீண்டியதால் மரணித்தான். (சத்தம், பாம்பு, அணங்கு)
4. **பனை** கற்பகதரு என அழைக்கப்படும். (தாலம், தாளம், தாழம்)
5. புலவனிடம் கூடப் பிறந்தது **வறுமை.** ( இன்னல், நலிவு, நல்குரவு)

# 2 கூண்டிற் கிளி

## பவளம்

பச்சைக் கிளி நீ பாடாயோ
பவளம் என்றும் கூறாயோ
கொச்சி மிளகாய் தருகின்றேன்
கொய்யாப்பழமும் தருகின்றேன்.

வண்ணக் கூண்டில் இருக்கின்றாய்
வளையத்தின் மேல் நடிக்கின்றாய்
கண்ணில் நீரை நிறைக்கின்றாய்
கவலை உனக்கும் வேறுண்டோ.

பூனை வந்து பிடிக்காமல்
பூட்டி உன்னைக் காத்திடுவேன்
தேனைப் போன்ற மாங்கனிகள்
தேடித் தின்னத் தந்திடுவேன்.



# கிளி

பச்சைக் கிளியும் நானேதான்
பவளக் கொடியும் நீயேதான்
கொச்சி மிளகாய் தின்றென்ன
கொய்யாப்பழமும் தின்றென்ன.

கூட்டில் என்னை அடைத்துநீ
குழந்தை மொழிகள் சொல்கின்றாய்
வீட்டில் உன்னை அடைக்கநீ
விரும்பும் இன்பம் கொள்வாயோ.

காலைத் தூக்கி நடிக்கின்றாய்
கையைக் காட்டி அழைக்கின்றாய்
கோலப் பந்தை அடிக்கின்றாய்
கூந்தல் பின்னி முடிக்கின்றாய்.

பள்ளிக்கூடம் போகின்றாய்
படமும் பார்க்கப் போகின்றாய்
வெள்ளம் பெருகும் ஆற்றிலே
வீழ்ந்து நீந்திக் குளிக்கின்றாய்.

கல்லைத் தூக்கி எறிகின்றாய்
கனிகள் வீழ்த்தித் தருகின்றாய்
நல்லம்மாவுன் தோழியுடன்
நாளுங் கூடித் திரிகின்றாய்.

சிறகை விரித்துப் பறக்கவோ
தேடிப் பழத்தைப் புசிக்கவோ
பறவை இனத்தைக் கலக்கவோ
பாவி எனக்கு விதியில்லை.

பச்சைச் சிறகை விரித்து நான்
பறந்து வானிற் பாடுவேன்
உச்சிக் கொம்பிற் சேருவேன்
உன்னை அங்கு கூவுவேன்.

சோலைதோறும் சென்று சென்று
    தோழி மாரைக் கூடுவேன்
மாலை தோறும் வந்துனது
    மாம ரத்திற் பாடுவேன்.

தோழிக்கிளிகள் சூழ வந்து
    தோழி யுன்னைப் போற்றுவேன்
வாழி பவளம் என்னைநீ
    வைத்த சிறையில் நீக்குவாய்.

அடிமைவாழ்வு ஒழிக வென்றே
    அன்புக் காந்தி சொல்லவும்
கொடிய சிறையில் வைத்தென்னைக்
    கொல்லுகின்றாய் நல்லதோ.

## பவளம்

நல்ல மொழிகள் கூறியே
    நாண வைத்தாய் என்னை நீ
செல்லக் கிளியென் தோழியே
    சிறையை நீக்கி விடுகின்றேன்.

கூட்டில் உங்கள் குலத்தினைக்
    கொண்டடைத்தல் கொடியது
காட்டில் வானிற் பறந்து நீர்
    காணும் இன்பம் பெரியது.

பவளம் கூட்டைத் திறந்தனள்
    பச்சைக் கிளியும் பறந்தது
அவளும் வானைப் பார்த்தனள்
    அன்புக் குரலுங் கேட்டது.

- **வித்துவான் க. வேந்தனார்**
*'கவிதைப் பூம்பொழில்'*

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| புசிக்கவோ | - | உண்ணவோ |
| கொம்பு | - | கிளை |
| நாணவைத்தல் | - | வெட்கப்பட வைத்தல் |



### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கூண்டில் அடைத்து வைத்த கிளிக்கு பவளம் எவற்றைச் செய்யப் போவதாகக் கூறுகிறாள்?
2. இப்பாடலில் வரும் உவமை அணி ஒன்றினை எடுத்துக் கூறுக.
3. பவளம் நாணங்கொள்ளும்படியாக கிளி என்ன கூறியது?
4. கிளி, ''உம்மைக் கூண்டில் அடைத்து வைத்தால் யாது செய்வீர்?'' என்று ஏன் கேட்டது?
5. பவளம் உயிர்களிடத்தில் அன்புள்ளம் கொண்டவள் என்ற கூற்றை நீர் ஏற்றுக்கொள்கின்றீரா? அவ்வாறாயின் காரணம் தருக?
6. கிளி உண்மையில் விரும்பும் வாழ்வு எத்தகையது?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

குழுக்களாக இணைந்து பாடல்களை ஓசை இயைபுபடுமாறு பாடுங்கள்.

# பெயர்ச்சொற்கள் I

**கற்பாறை மலை**யிலிருந்து விழுந்தது.

மேலேயுள்ள வாக்கியத்தில் இடம்பெற்றுள்ள 'கற்பாறை', 'மலை' ஆகிய சொற்களைக் கவனிப்போம்.

கற்பாறை, மலை ஆகிய சொற்கள் ஏதோ ஒரு பொருளை உணர்த்தி வரும் சொற்கள் ஆகும்.

நாம் வாழும் உலகத்தில் உயிருள்ளவை, உயிரற்றவை, கண்ணுக்குப் புலனாகின்றவை, கண்ணுக்கு புலனாகாதவை என எண்ணற்ற பொருள்கள் உள்ளன. இப்பொருள்களை உணர்த்தவல்ல சொற்களை பெயர்ச்சொற்கள் என்பர். பெயர்ச்சொற்கள் **பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர்** என ஆறுவகைப்படும்.

**பொருட்பெயர்** : மரம், மனிதன், புத்தகம்
**இடப்பெயர்** : கொழும்பு, முற்றம், பாடசாலை
**காலப்பெயர்** : நாள், வாரம், கார்த்திகை
**சினைப்பெயர்** : பூ, இலை, தலை
**குணப்பெயர்** : செம்மை, இனிமை, அகலம்
**தொழிற்பெயர்** : நடத்தல், விளையாடுதல், சேரல்




நீங்கள் அறிந்த சொற்களை வைத்து பின்வரும் அட்டவணையை நிரப்புக.

| பொருட்பெயர் | இடப்பெயர் | காலப்பெயர் | சினைப்பெயர் | குணப்பெயர் | தொழிற்பெயர் |
|---|---|---|---|---|---|
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |

# ஒலி வேறுபாட்டுச் சொற்கள் I

தமிழ் மொழியிலே லகர, ளகர, ழகர எழுத்துக்களும் ரகர, றகர எழுத்துக்களும் னகர, ணகர எழுத்துக்களும் ஒலிப்பிலும் பொருளிலும் வேறுபாடுடையன. இவற்றைத் திருத்தமாக உச்சரிக்கத் தெரியாதவர்கள் எழுதும்போதும் பிழைபட எழுதுவார்கள். ஒலி வேறுபாடுகளை உணர்ந்து உச்சரிப்பதும் எழுதுவதும் அவசியமாகிறது.

## லகர, ளகர, ழகர சொற்கள்

| | |
|---|---|
| அலை | : அலையில்லாத கடலில்லை. |
| அழை | : ஆசிரியர் மாணவனை அழைத்தார். |
| அளை | : சிறுவர்கள் சேற்றினை அளைந்தனர். |
| உலவு | : நான் வீதியில் உலாவினேன். |
| உழவு | : உழவுத் தொழிலுக்கு வந்தனை செய்வோம். |
| உளவு | : அரசன் பகை நாட்டினை உளவு பார்த்தான். |

## லகர, ளகர, ழகரச் சொற்களும் பொருளும்

உலை - கம்மாலன் உலை, உலைதல்
உளை - சேறு, வருத்து
உழை - இடம், மான், உழைத்தல்

சூல் - கரு, பிடுங்கு
சூள் - ஆணை, சபதம், தீவர்த்தி
சூழ் - சூழ்ந்துகொள், சுற்று, சூழ்ச்சி,

## பயிற்சி

கீழ்வரும் பழமொழிகளிலுள்ள எழுத்துப் பிழைகளைத் திருத்தி எழுதுக.

1. அகத்தின் அலகு முகத்தில் தெரியும்
2. எட்டி பளுத்தென்ன? ஈயாதார் வாள்ந்தென்ன?
3. ஏளையழுத கண்ணீர் கூரிய வாலொாக்கும்
4. கேல்விச் செவியன் குடியைக் கெடுத்தான்
5. விலையும் பயிரை முளையிலே தெறியும்
6. துல்லிய மாடு பொதி சுமக்கும்
7. ஆலமறியாது காளை விடாதே
8. இலமையில் கல்வி சிளையில் எழுத்து
9. எலி வலையானாலும் தனி வலை வேண்டும்
10. பல்லுப் போனால் சொள்ளுப் போச்சு

# 3 ஒரு பாட்டுடையான்

கம்பனுடைய பெருங்காப்பியத்தில் அளவால் பெருமை பெற்றவர்களும் இயல்பால் பெருமை பெற்றவர்களும் பலர் உளர். இராமனையே தலைவனாகக் கொண்டு காப்பியம் தோன்றினாலும், இராமனைவிட அதிக பாடல்களைப் பெற்று விளங்குகின்றான் அரக்கர் கோமான். எனவே, அதிகமான பாடல்களைப் பெற்றிருக்கின்ற காரணத்தால் ஒரு பாத்திரத்தை அதிக சிறப்புடையதென்று கூறுவதற்கும் இல்லை. இன்னும் சில பாத்திரங்கள் அதிகமான பாடல்களைப் பெறவில்லையானாலும் கம்பநாடனுடைய முழுப் பரிவிற்கும் பாத்திரமாகி நிற்கின்றனர். அனுமன், பரதன் போன்றவர்கள் இலக்கிய உலகிலேயே தலைசிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்கவேண்டுமென்ற நோக்கத்துடனேயே படைக்கப்பட்டதாகத் தோன்றுகிறது.

அதிகமான பாடல்களைப் பெற்றுள்ளவன் அரக்கர் கோமான் என்றால், இதற்கு நேர் முரணாக ஒரே பாடலைப் பெற்று விளங்குகிறான் தசரதனுடைய கடைசி மைந்தன். பல சமயங்களில் தான் பெற்ற பிள்ளைகள் நால்வர் என்ற எண்ணமும், தனக்கு சத்துருக்கன் என்ற நாலாவது பிள்ளை ஒருவன் உண்டென்ற எண்ணமும் தசரதனுக்கு இருந்ததாகவே அறியமுடியவில்லை. அவன் காதல் மைந்தனாகிய இராமன்தான் வாழ்நாள் முழுவதும் அயோத்தி வேந்தன் மன அரங்கில் விளையாடுகின்றான். இறுதிக் காலத்தில் தசரதன் மனம் முழுவதிலும் பரதன் நிரம்பி இருக்கிறான். ஆனால், இந்த இரண்டிற்கும் பெரிய வேறுபாடு உண்டு. இராமன் நிறைந்திருக்கும் பொழுது தசரதன் மனம் ஆனந்தக் கடலில் துளையமாடுகின்றது. பரதன் நினைவு வந்தவுடனேயே எல்லையற்ற வெறுப்புக்கொண்டு, தன்னையும் வருத்திக் கொண்டு பிறரையும் வருத்துகிறான் கைகேயியின் கணவன். இரண்டு புதல்வர்கள் இப்படியிருக்க, மூன்றாவது புதல்வனாகிய இலக்குவன் இராமனுடைய நிழலாகவே கடைசி வரை இருந்து கற்போர் மனத்தில் நீங்கா இடம் பெற்றுவிடுகிறான். இராமனுடன் செல்லும் அவன், 'தம்பி யென்னும் படிக்கு அல்லாமல் அடியரின் ஏவல்'

செய்கின்றான். அடியனைப் போல ஏவல் செய்பவனேயாயினும், பல சமயங்களில் அவனுடைய கோபம் கட்டுக்கடங்காத நிலையில் செல்லவே நம்மை வியப்பிலாழ்த்தி விடுகின்றான். இராமனே கூறுகின்றபடி, ‘உலகம் ஏழினோடு ஏழையும் கலக்குவன்’ என்று இலக்குவன் கருதுகிறான். எனவே, இந்த மைந்தனையும் மறத்தல் இயலாத காரியம். மூன்று மைந்தர்கள் நம்மிடையே உழன்று நம் கவனம் முழுவதையும் எடுத்துக் கொள்வதால் நான்காவது மைந்தனைப் பற்றி நாம் கவலை கொள்வது இல்லை. நாம் மட்டுமென்ன? பெற்ற தந்தையே கவலை கொள்வதாகவும் தெரியவில்லை. இந்த இரண்டையும் கருதிப் போலும் கம்பநாடனும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஆகவே, பத்தாயிரம் பாடல் பாடிய அவனும் நான்காவது தம்பிக்கு ஒரு பாடலே தந்துள்ளான். ஒருவேளை பத்தாயிரத்துள் ஒருவனாக நான்காவது தம்பியைக் கருதவேண்டுமென்று கவிஞன் எண்ணினான் போலும்.

காப்பியமே முடிகின்ற தருணத்தில், மீட்சிப் படலத்தில் நான்காவது தம்பியின் உண்மை உள்ளத்தைக் காண்கின்றோம். இராமன் சொன்ன நாட்கள் முடிந்துவிட்டன. கணிதப் புலவர்கள்கூட ‘ஆண் தகைக்கு இன்று அவதி’ அதாவது ‘இன்றே அவன் வரவேண்டிய நாள்’ என்று கூறிவிட்டார்கள். இந்நிலையில் வாய்மை காக்கின்ற பரதன், ‘நினைத்து இருந்து நெடும் துயர் மூழ்கிலேன்; மனத்து மாசு என் உயிரொடும் வாங்குவேன்’ என்ற முடிவுக்கு வந்து, நாலாவது தம்பியை அழைத்து வருமாறு ஏவுகின்றான்.

கண்ணீர் ஆறாகப் பெருக பரதன் நிற்கின்ற கோலத்தில், பக்கத்தில் சென்று, தொழுது நிற்கின்றான் மூவருக்கும் பின் உள்ளவனாகிய நாலாமவன். உடனே தன்னுடைய மார்போடு சேர்த்து இறுகத் தழுவிக் கொண்டான் பரதன். எதற்காகத் தன்னை அழைத்தான் அண்ணன் என்பதை அறியாமல் தவித்துக் கொண்டு நிற்கின்ற தம்பியிடம் அறத்தின் ஆணி வேராகிய பரதன் பேசத் தொடங்குகிறான். ‘‘ஐய, வேண்டுவது உண்டு, அவ்வரம் தரற்பாற்று’’ என்கின்றான். அதாவது ‘‘உன்னிடம் ஒரு வரம் வேண்டி இருக்கிறேன்; அதனைத் தந்தே ஆக வேண்டும் என்று கூறி அது என்ன வரம் என்று தம்பி கேட்கும் முன்னரே தானே சொல்லத் தொடங்குகிறான். அவ்வரம் எது என்று கேட்பாயேயானால், ‘‘சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்; மின்னு தீயிடை யான் இனி

வீழுவன்; மன்னன் ஆதி; என் சொல்லை மறாதி'' என்றானாம். அதாவது, ''இராகவன் சொன்ன நாளில் வரவில்லையாதலால், யான் நெருப்பில் வீழ்ந்து உயிரை விடப் போகிறேன். ஆனால் மன்னன் இல்லாமல் நாடு இருக்கக்கூடாது; ஆதலால் நீ மன்னனாக ஆவாயாக'' என்று கூறி முடித்தான் பரதன். ஆனால் தசரதன் புத்திரர்கள் யாருமே ஒருவர் கூறினார் என்பதற்காகத் தம் கடமையை விட்டுக் கொடுப்பதில்லை. இதை நன்றாக அறிந்த பரதன், இதோடு நிறுத்திவிட்டால் சத்துருக்கன் ஒருநாளும் இதற்கு உட்பட மாட்டான் என்பதை உணர்ந்து, ஓர் அறக்கட்டளையிடுகின்றான். தான் மன்னன் என்ற முறையிலும் அண்ணன் என்ற முறையிலும் சொல்லுகின்றவற்றை இளையவனும், குடிமக்களுள் ஒருவனுமாகிய சத்துருக்கன் தட்டக்கூடாது என்பதை நினைவுறுத்துவது போல ''என் சொல்லை மறுக்கக் கூடா''தென ஆணையிடுகின்றான். என்றாலும் என்ன?



இதைக் கேட்டான் நான்காவது தம்பி. காதுகளைப் பொத்திக்கொண்டான். விஷத்தை உண்டவனைப் போலக் கண்ணும் மனமும் நடுங்கின. விம்மி அழுதான். ஆனால், இந்த உணர்ச்சிகள் எல்லாம் ஒருசில வினாடி நேரம்தான் நின்றதாகத் தெரிகிறது. இவற்றையெல்லாம் வென்று, கோபமாகிய ஓர் உணர்ச்சி எல்லை மீறிக் கிளம்புகின்றது. அதனைக் கூறவந்த கவிஞன், 'கொழுந்துவிட்டு நிமிர்கின்ற கோபத்தான்' என்று கூறுகிறான்.

எனவே, தன்னை மீறி வருகின்ற சினத்தால் ஆட்கொள்ளப்பட்ட இளையவன் அண்ணனை நோக்கி, ''அழுந்து துன்பத்தினாய்! நான் உனக்கு என் பிழைத்து உளேன்?'' என்று கேட்கிறான். இந்தக் கோப உணர்ச்சி ஓரளவு அதிக நேரம் இருந்து அதனோடு வெறுப்பு, நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம் ஆகிய எட்டுச் சுவைகளும் ஒன்றாகக் கலந்து ஒருங்கே காட்சியளிக்கின்ற ஒரே பாட்டில் பேசுகின்றான் அந்த அற்புதமான தம்பி.

***'கான்ஆள நிலமகளைக் கைவிட்டுப்***
***போனானைக் காத்து, பின்பு***
***போனானும் ஒருதம்பி; போனவன் தான்***
***வரும்அவதி போயிற்று என்னா,***
***ஆனாத உயிர்விட என்று அமைவானும்***
***ஒருதம்பி; அயலே நாணாது,***
***யானாம்இவ் அரசுஆள்வென்? என்னே, இவ்***
***அரசாட்சி! இனிதே அம்மா!'***

''காட்டை ஆள்வதற்காக - அரச பாரத்தைக் கைவிட்டுச் சென்றவனாகிய இராமனைக் காப்பாற்றுவதற்காக - ஒரு தம்பி பின்னேயே போய்விட்டான். அப்படிப் போனவன் வரவேண்டிய நாள் கடந்துவிட்டது என்று சொல்லிக்கொண்டு மிகச் சிறந்த உயிரைவிட முடிவு செய்துவிட்டான் மற்றொரு தம்பி. இவர்கள் இருவரும் ஒருபுறம் நிற்க, ஒரு சிறிதும் வெட்கம் இல்லாது நான் இந்த அரசாட்சியை ஆள வேண்டுமா? எவ்வளவு இனிய அரசாட்சி இது!'' என்பதே இப்பாடலின் பொருள்.

நாலாவது தம்பியின் மனநிலை முழுவதையும் இந்த ஒரு பாடல் காட்டி நிற்கின்றது. பரதன் கூறிய இந்தச் செய்தியை நினைக்கவும் முடியாமல் அஞ்சுகிறான் சத்துருக்கன். அந்த 'அச்சத்தின்' பின்னே இத்தகைய ஒரு பைத்தியக்காரத்தனம் நடைபெறுமா என்று நினைத்தவுடன் 'மருட்கை' தோன்றுகிறது. இந்த அரசாட்சியின் நிலையை நினைக்கும்பொழுது 'எள்ளல்' தோன்றுகிறது. தன் மனநிலை தெரியாமல் பேசிய பரதன் உரைகளைக் கேட்டுக் 'கோபம்' ஒருபுறமும், இவ்வளவு தவறாகத் தன்னை நினைந்து விட்டானே என்று நினைக்கும்பொழுது 'அழுகையும்', தான் இராமன் தம்பி அல்லையோ என்று நினைக்கும்பொழுது 'இளிவரலும்' ஒருங்கே தோன்றுகின்றன. 'பல சொல்லக் காமுறுவர் மன்ற, மாசற்ற சில

சொல்லல் தேற்றாதவர்' என்றும், 'சொல்லுக சொல்லில் பயனுடைய' என்றும், 'பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லும்திறன் இன்மை அறிந்து சொல்க' என்றும் எழுந்த பொதுமறைக்கோர் எடுத்துக்காட்டாய், 'உருள் பெருந்தேர்க்கு அச்சாணியாய்' விளங்குகிறான் ஒரு பாட்டு உடையவனாகிய சத்துருக்கன். எனவே, ஏனைய பாத்திரங்களின் பல்வேறு உணர்ச்சி நிலைகளைப் பற்பல சந்தர்ப்பங்களில் பலப்பல பாடல்கள் மூலம் கவிஞன் நமக்கு அறிவிக்கின்றான் எனினும், நாலாவது தம்பியைப் பற்றி முழுவதும் அறிந்துகொள்ளுமாறு நாலே வரிகளில் கூறியுள்ளான் கம்பநாடன். சிறந்த கலைஞன் மிகச் சிறிய அளவிலும்கூட மிகப் பெரிய படைப்பைப் படைத்துக் காட்டக்கூடும் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு அன்றோ!

- **அ.ச.ஞானசம்பந்தன்**
'கம்பன் கலை'

## அருஞ்சொற்பதங்கள்

| | | |
|---|---|---|
| வாய்மை | - | உண்மை |
| இளிவரல் | - | அருவருப்பு |
| மருட்கை | - | வியப்பு |
| எள்ளல் | - | இகழ்ச்சி |
| பொதுமறை | - | திருக்குறள் |
| அச்சாணி | - | கடையாணி |
| துளையமாடுதல் | - | உள்நுழைந்து நீராடுதல் |
| அவதி | - | துன்பம் |
| காமுறுதல் | - | விரும்புதல் |



## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கம்பன் காப்பியத்தில், அதிக பாடல்களில் பாடப்பட்டவர் யார்? ஒரு பாடலில் பாடப்பட்டவர் யார்?
2. ''ஐய, வேண்டுவது உண்டு, அவ்வரம் தரப்பாற்று'' என்ற கூற்று யாரால், யாருக்கு, எச்சந்தர்ப்பத்தில், கூறப்பட்டதாகும்?
3. சத்துருக்கனை நோக்கி ''என் சொல்லை மறுக்கக் கூடா''தென பரதன் கூறியமைக்கான காரணமாக கட்டுரையாசிரியர் எதனைக் குறிப்பிடுகிறார்?
4. பரதனின் ஆணையைக் கேட்ட சத்துருக்கனின் நிலை, கட்டுரையில் எவ்வாறு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது?
5. கட்டுரையின் மூலம் ஆசிரியர் எமக்கு எடுத்துரைக்கும் கருத்து யாது?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

''ஒரு பாட்டுடையான்'' என்ற கட்டுரையை ஆதாரமாகக் கொண்டு அண்ணன், தம்பி உறவு தொடர்பாக இருவர் இருவராக உரையாடுங்கள்.

# பெயர்ச்சொற்கள் II

## இடுகுறிப்பெயர், காரணப்பெயர், காரண இடுகுறிப்பெயர்

*மரம், பறவை, நாற்காலி* ஆகிய சொற்களைக் கவனிப்போம். இந்தப் பெயர்ச்சொற்கள் அப்பெயர் பெறுவதற்குக் காரணமிருக்கிறதா?

மரம் அவ்வாறு அழைக்கப்படுவதற்கு காரணம் எதுவுமில்லை.

பறவை பறக்கும் காரணத்தினாலேயே அப்பெயர் பெற்றது.

நாற்காலி நான்கு கால்களை உடையதால் அப்பெயர் பெற்றாலும் நான்கு கால்களையுடைய எல்லாப் பொருள்களும் நாற்காலி என அழைக்கப்படுவதில்லை. நான்கு கால்களை உடையவற்றுள் கதிரை மட்டும் நாற்காலி என அழைக்கப்படுவதற்கு விசேட காரணம் எதுவுமில்லை.

இவ்வாறு பெயர்ச்சொற்கள் பெயரிடப்பட்ட அடிப்படையில் *இடுகுறிப்பெயர், காரணப்பெயர், காரண இடுகுறிப்பெயர்* என பாகுபடுத்தப்படுகின்றன.

### இடுகுறிப்பெயர்

*மரம், மலை, நிலம்* முதலான பெயர்ச்சொற்கள் பண்டைய காலம் முதல் இன்று வரை ஒரு காரணமும் கருதாது பொருளை உணர்த்தி நிற்கின்றன. ஆதலால் இவ்வகையான பெயர்களை இடுகுறிப்பெயர் என்போம்.

### காரணப்பெயர்

*பறவை, வளையம், அணி, கணக்காளன்* முதலான சொற்கள், காரணம் கருதி வழங்கப்பட்டு வரும் பெயர்கள் ஆகும். ஆகையால் இவ்வகையான பெயர்களை *காரணப்பெயர்* என்போம்.

### காரண இடுகுறிப்பெயர்

*நாற்காலி, வளையல், முள்ளி* முதலான சொற்கள், காரணம் கருதிய கூட்டத்துள் காரணம் எதுவுமின்றி குறித்ததொரு வகையை மட்டும் சுட்டி வருகின்றன. இத்தகைய பெயர்களை *காரண இடுகுறிப்பெயர்* என்போம்.

## பயிற்சி

பின்வரும் சொற்களிலிருந்து இடுகுறிப்பெயர், காரணப்பெயர், காரண இடுகுறிப்பெயர் என்பவற்றை இனங்கண்டு வேறுபிரித்து எழுதுக.

1. முக்கண்ணன்
2. மீன்கொத்தி
3. கொடி
4. கடல்
5. காற்சங்கிலி
6. வானொலி
7. தளபாடம்
8. ஒலிவாங்கி
9. முக்காலி
10. தென்னை

## கட்டுரை எழுதுதல்

கட்டுரை என்றால் என்ன?

மாணவர்களே, இதுவரை காலத்திலும் நாம் சிறிய சிறிய கட்டுரைகளை எழுதியிருக்கிறோமல்லவா? அந்த அனுபவத்தினைக் கொண்டு கட்டுரை என்றால் என்ன? எனக் கூறுங்கள் பார்க்கலாம்.

ஆம்;
ஒரு விடயம் தொடர்பான கருத்துக்களை விரித்து, ஒழுங்கு முறையிலும் தெளிவாகவும் விளக்கமாகவும் உறுதியாகவும் கட்டுக்கோப்பாகவும் எழுதப்படுவதே கட்டுரை ஆகும்.

கட்டுரை உள்ளதை உள்ளவாறாகக் காட்டி எழுதப்படுவதாகவும் இருக்கலாம்; இல்லாதனவற்றைப் புனைந்துரைப்பதாகவும் இருக்கலாம்; அனுபவங்கள், உணர்ச்சிகள் என்பவற்றைப் பகிர்ந்து கொள்வதாகவும் இருக்கலாம்; கற்பனைக் கெட்டும் விடயங்களைச் சித்திரிப்பதாகவும் இருக்கலாம். எவ்வாறு அமையவேண்டும் என்பது கட்டுரையின் வகையையும் அது எழுதப்படும் நோக்கத்தையும் பொறுத்ததாகும்.

## கட்டுரையின் வகைகள்

கட்டுரைகள் பல்வேறு நோக்கங்களுக்காக பல வகைகளில் எழுதப் படுகின்றன. அவற்றுள் சில வருமாறு.

### 1. **விளக்கக் கட்டுரை**

ஒரு பொருள் தொடர்பான விடயங்களை காரண காரியத் தொடர்பு காட்டி, உதாரணங்களைக் குறிப்பிட்டு விளக்கி எழுதுவதாகும்.

உதாரணம் - விஞ்ஞானத்தின் விந்தை
- காடழித்தலினால் ஏற்படும் விளைவுகள்

### 2. **வர்ணனைக் கட்டுரை**

இடங்கள், காட்சிகள் முதலியவற்றை வர்ணித்து அலங்காரமாக எழுதுவதாகும். படிப்போரின் உள்ளத்தில் உண்மைக் காட்சிகளைப் புலப்படுத்துமாறு எழுதுதல் வேண்டும்.

உதாரணம் - காண்போரைக் கவரும் சீகிரியா
- காலைநேரக் கடற்கரைக் காட்சி

### 3. **கற்பனைக் கட்டுரை**

புதிய புதிய விடயங்களைக் கற்பனையில் உருவாக்கி எழுதுவதாகும். இல்லாத விடயங்களை முற்று முழுதாக கற்பனையாகவும் எழுதலாம்; இருக்கின்ற விடயங்களை அடிப்படையாகக் கொண்டு எதிர்காலத்தில் அதன்நிலையை கற்பனையாக ஊகித்தும் எழுதலாம்.

உதாரணம் - நீதிமன்றிற்கு நீதிகோரி வந்த, விபத்தில் காலொன்றை இழந்த நாய்.
- வாடகைக் காரினைச் செலுத்தும் பணியில் இயந்திர மனிதர்களை ஈடுபடுத்தினால்...
- தேடுவாரற்றுக் கிடக்கும் பாடசாலை நூல்நிலையத்தின் சுயசரிதை

## கட்டுரையின் அமைப்பு

கட்டுரையானது பிரதானமாகப் பின்வரும் மூன்று பகுதிகளைக் கொண்டதாகும். எனினும் எல்லாவகைக் கட்டுரைகளிலும் மேற்படி பகுதிகள் கட்டாயமாக இடம்பெறவேண்டும் என எதிர்பார்க்க முடியாது. (உதாரணமாக வர்ணனைக் கட்டுரைகளில் முகவுரை, முடிவுரை என்பன அவசியமில்லை)

1. **முகவுரை** - அறிமுகம், கட்டுரைத் தலைப்பின் விளக்கம், நோக்கம் முதலியவற்றை உள்ளடக்கியதாக இருக்கும். வாசிப்போரை ஈர்த்து, கட்டுரையை வாசிக்கத் தூண்டுவதாக முகவுரை அமைவது சிறப்பானதாகும்.

2. **தொடருரை (உடல்)** - கட்டுரையின் உள்ளடக்கப்பகுதி இதுவாகும். பொருத்தமான விடயங்களைப் பந்திகளில் தொடருரை கொண்டிருக்கும்.

3. **முடிவுரை** - கட்டுரை விளக்கிய விடயத்தின் தொகுப்பாக அல்லது சாரமாக முடிவுரை அமைந்திருக்கும். வலியுறுத்த வேண்டிய விடயங்களை வலியுறுத்தும் பகுதியாகவும் கட்டுரை யாசிரியர் தனது கருத்துக்களை முன்வைக்கும் பகுதியாகவும் முடிவுரை அமையும்.

## கவனிக்க வேண்டியவை

கட்டுரையானது பந்திகளால் ஆனதாகும். பந்தியொன்று ஒரு விடயத்தினை விளக்குவதாக இருக்கும். ஒரு பந்தியில் கூறிய விடயத்தினை அடுத்த பந்தியிலும் விவரிக்கக் கூடாது. ஆனால் பந்திகள் ஒன்றிற்கொன்று தொடர்புடையதாய் அமைத்தல் வேண்டும்.

பந்தியில் ஒரு தலைமை வாக்கியம் அமையவேண்டும். அதனை உதாரணங்கள், மேற்கோள்கள், பழமொழிகள் என்பவற்றின் மூலமாக விரித்து விளக்குதல் வேண்டும்.

பந்திகள், வரிகளின் தொடக்கத்திலில்லாமல் சற்று வலந்தள்ளித் தொடங்க வேண்டும். இரண்டு பந்திகளுக்கிடையில் வரியினை விட்டு எழுதுதல் தவறாகும்.

## பயிற்சி

பின்வரும் தலைப்புக்களுள் ஒன்றினைத் தெரிவு செய்து 200 சொற்களில் கட்டுரை எழுதுக.

- ★ வாசிப்பு மனிதனைப் பூரணமாக்கும்
- ★ கண்டோர் வியக்கும் மலையகம்
- ★ தனது கவலையைக் கூறிய செல்லப்பிராணி
- ★ உடைந்த கைத்தொலைபேசியின் சுயசரிதை
- ★ நாட்டார் பாடல்கள்

# 4 பறவைகளின் இசைவாக்கம்

விமான ஓட்டிகள் விமானத்தின் முன் அறைக்குள் இருப்பார்கள்; விமானத்தை ஓட்டுவார்கள். அந்த அறைக்குள்ளே போய்ப் பார்க்க வேண்டும். எத்தனையோ இயக்கிகள்; கட்டுப்பாட்டுப் பொறிகள்; மினுக்கு மினுக்கு என விட்டுவிட்டு எரியும் விளக்குகள்; ஒளிக்குறிகள்; மாற்றிகள்; ஒலி வாங்கி; வானொலிச் செய்திகளைப் பரிமாறும் கருவி; வகை வகையான மானிகள்; திசையறிகருவி; இப்படியாக அறையின் சுவர்கள் எங்கும் எண்ணிறந்த பொறிகள் நிறைந்திருக்கும்.

விமானத்தை ஓட்டத் தொடங்கும்போது 200-300 பொறிகள், குறிகள், மிதிகள், ஒலிக்குறிகள் முதலியவற்றை விமான ஓட்டி இயக்குவார். இறக்கைக்கு ஒன்று; சுக்கானுக்கு ஒன்று; தாழப் பறக்க ஒன்று; உயரப் பறக்க ஒன்று; வேகம் கூட்ட ஒன்று; நிலையான வேகத்துக்கு மற்றொன்று; சாய ஒன்று; நிமிர மற்றொன்று; இறங்கும்பொழுது சில்லுகளை இறக்க ஒன்று; இறங்கி விட்டனவா எனப் பார்க்க மற்றொன்று என அவர் இயக்கும் பொறிகள் பல.

விமானத்தின் பாதுகாப்பு, ஓட்டத்தின் பாதுகாப்பு, தானியங்கிகளின் செயற்பாடு என்பவற்றை உறுதிப்படுத்தும் நூற்றுக்கணக்கான பொறிகளின் இயக்கமே விமானத்தின் ஓட்டம்; விமானத்தின் பறப்பு.

பறவைகளின் தலைக்குள்ளும் இத்தகைய வேலைகள் நடைபெறுகின்றன. பறவைகளின் உணர்வு அறியும் தொகுதியும் நரம்புத் தொகுதியும் புதுமை யானவை; பறப்பதற்குரிய இசைவாக்கம் பெற்றவை. இறக்கைகளை இணைக்கும் இயக்கம்; ஏற்றம், இறக்கம், சாய்வு, வேகம் ஆகியவற்றைக் கணித்தல்; திசையறிதல், தொலைநோக்கல்; ஒலி கேட்டல்; தட்பவெப்ப வேறுபாடுகளை அறிதல்; அமுக்க வேறுபாடுகள், பறக்கும் உயரம், காற்றின் திசை, காற்றின் வேகம், காற்றின் சுழிகள், மழை மூட்டம், இடி,

மின்னல், உணவின் மணம், நீரின் மணம், அலையின் ஓசை, கடற்கரை, எரிமலை, புவிநடுக்கம் முதலியவற்றை உணர்தல்; அப்பப்பா ஒன்றா, இரண்டா, நூறா, இருநூறா, ஆயிரக்கணக்கிற் பொறி உணர்வுகள்? இவை அனைத்தும் பறவைகளின் நரம்புத் தொகுதிக்குள் அடக்கம்.

இருபத்தொரு நாள்கள் முட்டைகளைக் கோழி அடைகாக்கும். முட்டையிலிருந்து குஞ்சு வெளிவரும். சின்னஞ்சிறு குஞ்சுகள் நிலத்தில் உலவும். தாயோ புழுப் பொறுக்கும். உண்ணாது; பிய்க்கும்,கரகரக்கும், குஞ்சுகளை அழைக்கும், ஊட்டும்; தன்னை மறந்து குஞ்சுகளின் ஊட்டத்தில் ஈடுபடும்.

வானத்தில் 400-600 மீற்றர் உயரத்திற் பருந்து வட்டமிடும். கோழியையுங் குஞ்சுகளையும் பார்க்கும். கோழிக்குஞ்சு மிகச் சிறியது. பருந்து பறக்கும் இடமோ மிகத் தொலைவில் உள்ளது. இடையே மரங்களின் கொப்புகள், கிளைகள், இலைகள் ஆகியன பார்வைக்கு இடைஞ்சல்கள். வேலிகளுங் கூரைத் தொங்கல்களுங் குறுக்கீடுகள். ஆனாலும் பருந்து கண்டுவிடும்; குஞ்சுகளைக் கண்டுவிடும். அவற்றின் ''கீச் - கீச்'' ஒலியைக் கேட்டு விடும்; தாய்க்கோழியின் கரகரப்பைக் கேட்டு விடும். தாயுங் குஞ்சுகளுந் தம்மை மறந்து உணவு உண்ணும்வேளை குஞ்சைக் கவ்வ வாய்ப்புப் பார்த்துப் பருந்து வானத்தில் வட்டமிடும்.



குஞ்சுகளின் புழு ஊட்டமும் பருந்துக்குத் தெரியும். சரியான நேரம். வேகமான இறக்கம். இலாவகமான இறாஞ்சல் உராய்வு; பருந்தின் கால்களுட் கோழிக்குஞ்சு. மீண்டும் வேகமான ஏற்றம். வானத்திற் பருந்து பறக்கும். கோழிக்குஞ்சு பருந்தின் கால்களுக்குள் இருந்து கொண்டு ''கீச்... கீச்...'' எனக் கத்தும். ''டேய், பிராந்தடா'' வீட்டுக்காரியின் ஒலி. நேரம் பிந்திய கூச்சல்.

தாய்க்கோழி கரகரக்கும்; பரபரக்கும்; கூச்சலிடும்; கோபத்துடன் செட்டையை அடிக்கும்; அடுத்த தாக்குதலை எதிர்பார்க்கும்; சிறகுக் குள்ளே குஞ்சுகளைக் காத்துக்கொள்ளும். உடன்பிறப்பு ஒன்றை இழந்த துக்கத்துடன் குஞ்சுகள் சிறகுக்குள் அணையும்.

500 மீற்றர் உயரம்; அங்கிருந்து கொண்டு 10-15 சென்றி மீற்றர் நீளமுள்ள குஞ்சுகளை மரங்களுக்கிடையே கண்டு பிடித்தல், குறிவைத்தல், பறத்தல், பாய்தல், உராய்தல், கவ்வுதல், மீளல் ஆகிய இவற்றை ஒருங்கிணைக்க எத்தனை எத்தனை உணர்வுகளின் இணைப்பு அவசியம்! தொலைநோக்கியின் உதவியின்றி இதே உயரத்தில் இருந்துகொண்டே பறவைகள் சின்னஞ்சிறு பொருள்களைக் காணக்கூடியன; நிறங்களை வேறுபடுத்தி அறியக்கூடியன. இதுவே பறவைகள் பெற்றுள்ள உயர்வான இசைவாக்கம்.

பருந்துக்கு இரண்டு கண்கள் உண்டு. பறவைகள் யாவும் இரண்டு கண்களை உடையன. எமக்கும் இரண்டு கண்கள் உள்ளன. நாம் இரண்டு கண்களாற் பார்த்தாலும் ஒரு பொருளே பார்வைக்குத் தெரியும். பறவைகளோவெனின் நேரே முன்னுக்குப் பார்த்தால் மட்டுமே இரண்டு கண்களும் ஒரே பொருளைப் பார்க்கின்றன; பக்கவாட்டிற் பார்க்கும் பொழுது தனித்தனியாகப் பார்க்கின்றன. கண்கள் இரண்டையும் முகத்தில் முன் பக்கமாக வைத்திருக்கும் ஆந்தை மட்டுமே இரு கண்களையும் பயன்படுத்தி ஒரே பொருளைக் காண்கின்றது.

தனித்தனிப் பார்வையில் தன்மைகள் உண்டு. நெடுந்தொலைவுக்குப் பார்க்கலாம்; மிக அண்மையிலும் பார்க்கலாம். கண்களைத் தொலை நோக்கியும் ஆக்கலாம்; நுணுக்குக் காட்டியும் ஆக்கலாம். விரிந்த வட்டத்தில் பர்வையைச் செலுத்தலாம்; தலையைத் திருப்பாமலே

பின்பக்கமும் பார்க்கலாம். பறவைகள் இரவில் ஆகக் குறைந்த வெளிச்சத்திலும் பொருள்களை நன்றாகப் பார்க்கக்கூடியன. கழுகுகள், பருந்துகள் போன்றவை மனிதனின் பார்வையிலும் எட்டு மடங்கு பார்வை ஆற்றல் உடையன. ஆந்தை இருட்டில் மனிதனின் பார்வையிலும் பத்து மடங்கு பார்வை ஆற்றல் உடையது.

ஓடும் பொருள்கள், அசையும் பொருள்கள், பறக்கும் பூச்சிகள், நீந்தும் மீன்கள் போன்ற இரைகளைத் தலை ஆட்டாமற் பறவைகள் கண்களாலே தொடரக்கூடியன. அசைவுள்ள பொருள்களைத் தொடர ஒரு மையமும் அசைவற்ற பொருள்களைப் பார்க்க ஒரு மையமும் என இரண்டு மையங்கள் பறவைகளின் கண்களில் உண்டு.

உடலெங்கும் பல நிறங்களை உடைய பறவைகள் வண்ணங்களை வேறுபடுத்திக் காண்கின்றன. எனினும், அவை நீல நிறத்தைத் தெளிவாக அறிவதில்லை என்ற கருத்துப் பறவையியலாளர்களிடையே நிலவுகின்றது. சிவப்பு என்றால் பறவைகளுக்கு விருப்பு; இளமஞ்சள், செம்மஞ்சள், மஞ்சள் என்பனவும் பறவைகள் விரும்பும் வண்ணங்கள். பறவையியலாளரின் பரிசோதனை முடிபுகள் இவை.

ஒளிக் கதிரின் நிறமாலையிற் செந்நிறக் கீழ்க் கதிர்களைக் காணக் கூடிய இயல்பு பறவைகளுக்கு உண்டு எனக் கூறுவர். செந்நிறக் கீழ்க் கதிர்கள் நீரில் மினுங்குகையில் பறவைகள் அவற்றைப் பிரித்தறியும்.

சத்திமுற்றப் புலவர் அறிவியற் புலவர். ''நாராய் நாராய்'' எனத் தொடங்கும் பாடலிற் பறவைகளின் இந்தப் பார்வை இயல்பை அவர் தெளிவாகக் கூறுகின்றார். தென் திசைக் குமரி ஆடி வட திசை ஏகும் நாரைகள்'' தம் மனைவியிடஞ் செய்தி சொல்ல வேண்டும் என அவர் கேட்கிறார்; தம் வீட்டு அடையாளங்களை நாரைக்குக் கூறுகின்றார்.

ஓட்டைகள் நிறைந்த கூரை. ஓட்டை வழியே ஒழுக்கு ஒழுகியதனால் நனைந்த சுவர். வானத்தில் 500 - 600 மீற்றர் உயரத்திலிருந்து நாரைகள் பார்க்கையிலே தெரியக்கூடிய கூரைதான். நாரைகளின் கண்ணுக்குக் கூரையில் ஓட்டையும் தெரியுமாம். ஒழுக்கினால் ஏற்பட்ட நனைவுகளும் தெரியுமாம். இவற்றைக் கண்டு, வீட்டை அடையாளங் காணுமாம். ஏக்கம்

நிறைந்த முகத்துடன் இருக்கும் மனைவியை, அவளின் ஏக்கம் நிறைந்த முகத்தை, நாரைகள் தரம் பிரித்துக் காணுமாம்.

புலவரின் கற்பனை மிகையன்று. சத்திமுற்ற ஏரிக்குப் பக்கத்தில் ஏராளமான வீடுகள் உண்டு. ஆயின், ஏழையின் வீடு ஒன்றுதான் உண்டு. ஓட்டைக் கூரை ஒன்று மட்டுமே உண்டு. சின்னஞ்சிறிய ஓட்டை. ஆயினும், தொலைவில் உள்ள நாரைகள் காணக்கூடிய ஓட்டை. அறிவியற் கருத்துக்களின் சாயல் முழுமைபெறக் கற்பனை மெருகு ஊட்டினார் அப்புலவர். அவ்வளவுதான்.

**– க. சச்சிதானந்தன்**
'பறவைகள்'

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| பொறிகள் | - | இயந்திரங்கள் |
| சுக்கான் | - | விமானத்தை ஓட்டும் கருவி |
| இடைஞ்சல் | - | தடை |
| கவ்வுதல் | - | பிடித்தல் |

## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. விமானத்தின் முன்னறைக்கும் பறவைகளின் தலைக்கும் எவ்வாறு எழுத்தாளர் ஒற்றுமை காட்டுகின்றார்?

2. வானத்தில் வட்டமிடும் பருந்து, நிலத்திலே தாயுடன் இரை தேடலில் ஈடுபட்டிருக்கும் கோழிக் குஞ்சுகளுள் ஒன்றை இறங்கிப் பற்றிக் கொண்டு மேலெழுந்து செல்லும் செயற்பாட்டிலே, பருந்துகளிடம் நிகழும் பிரதானமான உணர்வுகளின் இணைப்பைச் சுருக்கமாக விளக்குக.

3. கட்புலனைப் பொறுத்தவரையிற் பறவைகள் பெற்றுள்ள உயர்வான இசைவாக்கம் எத்தகையது?

4. மக்களின் கண்ணமைப்புக்கும் பறவைகளின் கண்ணமைப்புக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் குறிப்பிடுக.

5. நாரைகள் ஏழையின் வீட்டை எவ்வாறு அடையாளம் காணும் எனக் கட்டுரையில் கூறப்பட்டுள்ளது?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

''நான் ஒரு பறவையானால்...'' என்ற தலைப்பில் 150 சொற்களில் கற்பனைக் கட்டுரை ஒன்று எழுதுங்கள்.

## வேற்றுமை I

வேற்றுமை தொடர்பில் 7ஆம் தரத்தில் கற்ற விடயங்களை நினைவுபடுத்திக் கொள்வோம்.

எட்டாம் தரத்தில் 4ஆம், 5ஆம், 6ஆம் வேற்றுமைகள் தொடர்பில் கற்றுக் கொள்வோம்.

### நான்காம் வேற்றுமை

அதிபர் மாணவருக்குப் பரிசில்கள் வழங்கினார்.

மேற்படி வாக்கியத்தில் மாணவர் என்ற பெயர்ச்சொல் '**கு**' எனும் உருபை ஏற்றுள்ளது.

'**கு**' உருபு நான்காம் வேற்றுமைக்குரியதாகும்.

மேலுள்ள வாக்கியத்தில் '**கு**' உருபு கொடைப் பொருளை உணர்த்தி வந்துள்ளது.

கொடைப் பொருளோடு பகை, நட்பு, உறவு, தகுதி, முதற்காரணம், நிமித்த காரணம் ஆகிய பொருள்களையும் நான்காம் வேற்றுமை உணர்த்தும்.

| | |
|---|---|
| **கொடை** | : புலவருக்குப் பொன் கொடுத்தான். |
| **பகை** | : கீரிக்குப் பகை பாம்பு |
| **நட்பு** | : கன்னனுக்கு நண்பன் துரியோதனன் |
| **உறவு** | : கண்ணம்மைக்கு மகன் விபுலாநந்தர் |
| **தகுதி** | : மாணவருக்கு உரியது அடக்கம் |
| **முதற்காரணம்** | : மேசைக்குப் பலகை வாங்கினேன் |
| **நிமித்தகாரணம்** | : கூலிக்கு வேலை செய்தான் |

நான்காம் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகள்

நான்காம் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகளாக **பொருட்டு, ஆக, நிமித்தம்,** என்பன காணப்படுகின்றன.

**உதாரணம் :** கூலியின் பொருட்டு வேலை செய்தான்
கூலிக்காக வேலை செய்தான்
கூலி நிமித்தம் வேலை செய்தான்

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களில் காணப்படும் நான்காம் வேற்றுமை உருபை அல்லது சொல்லுருபை ஏற்றுள்ள சொற்கள் உணர்த்தும் பொருள்களை இனங்கண்டு எழுதுக.

1. மருத்துவத் தாதியருக்குப் பொறுமை அவசியமாகும்.
2. அரசாங்கம், பாதிப்புற்ற மக்களுக்கு நிவாரணம் வழங்கியது.
3. தருமனுக்கு அர்ச்சுனன் தம்பியாவான்.
4. இன்று பலரும் புகழுக்காக சமூகப் பணிகளில் ஈடுபடுகின்றனர்.
5. கமலனுக்கு செந்தூரனைக் கண்டால் பிடிப்பதில்லை.
6. அக்கா படிப்பிற்கு ஏற்ற வேலை தேடுகிறாள்.
7. அம்மா ரொட்டிக்காக மாக் குழைத்தார்.
8. தம்பிக்கு அப்பா புதிய ஆடை வாங்கிக் கொடுத்தார்.
9. எனக்கு அன்வர் நெருங்கிய நண்பனாவான்.
10. மாணவர்கள் பரிசிற்காகப் போட்டியிடுகின்றனர்.

## கலைச்சொற்கள்

துறைசார்ந்த தேவைகளுக்காக பயன்படுத்தப்படும் சிறப்புச் சொற்கள் கலைச்சொற்கள் எனப்படுகின்றன. தரம் 7 இல் சில கலைச் சொற்களைக் கற்றுள்ளோம். இங்கு பறவைகளின் இசைவாக்கம் என்ற பாடத்தோடு தொடர்புடைய சில கலைச்சொற்களை அறிந்துகொள்வோம்.

| | | |
|---|---|---|
| Aeroplane | - | விமானம் |
| Adaptation | - | இசைவாக்கம் |
| Airhostess | - | விமானப் பணிப்பெண் |
| Airport | - | விமான நிலையம் |
| Aviation | - | வான்வழிப் போக்குவரத்து |
| Birds Sanctuary | - | பறவைகள் சரணாலயம் |

| | | |
|---|---|---|
| Compass | - | திசையறிகருவி |
| Experiment | - | பரிசோதனை |
| Microphone | - | ஒலிவாங்கி |
| Microscope | - | நுணுக்குக் காட்டி |
| Nervous System | - | நரம்புத்தொகுதி |
| Automatic | - | தானியங்கி |
| Pilot | - | விமானி (விமானமோட்டி) |
| Spectrum | - | நிறமாலை |
| Telescope | - | தொலைநோக்கி |

## பயிற்சி

பின்வரும் பந்தியில் தடித்த எழுத்துக்களில் இடம்பெற்றுள்ள ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை தேடியறிந்து எழுதுக.

காசிம் தனது அலுவலகத்திற்கு '**ஈமெயில்**' ஒன்றை அவசரமாக அனுப்புவதற்கு முயன்று கொண்டிருந்தான். எனினும் அவனது '**கம்பியூட்டரில்**' '**இன்ரநெற்**' இணைப்பு சரியாகக் கிடைக்கவில்லை. தனது தம்பியின் '**லப் டொப்பைப்**' பயன்படுத்தலாம் என்றால் அவன் அதில் '**ஃபேஸ்புக்**' (Facebook) பார்த்துக்கொண்டிருந்தான். '**ரெலிபோன்**' மூலமாகவேனும் உடனடியாகத் தகவலைத் தெரியப்படுத்துவது நல்லது எனக் கருதிய காசிம் தனது '**செல்போனை**' எடுத்துத் தகவலைத் தெரிவித்தான்.

# 5 முயற்சி திருவினையாக்கும்

ஏறக்குறைய அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்கொட்லாந்து தேசத்து மக்கள், தங்கள் நாட்டில் ஆங்கில அரசாட்சி தொடரக்கூடாது என்று முடிவு செய்தார்கள். தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள வேண்டும் என்று விரும்பினார்கள். எனவே அந்த இரண்டு தேசங்களுக்கும் இடையே போர் மூண்டது.

ஆங்கிலேயர்சேனை ஸ்கொட்லாந்து போர் வீரர்களை மீண்டும் மீண்டும் பல முறை முறியடித்தது. அதன் பிறகு இராபர்ட் புரூஸ் ஸ்கொட்லாந்துப் படைக்குத் தலைவராக வந்தார். அவர் ஆறு முறை ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகப் படை எடுத்து, ஆறு முறையும் தோல்வியடைந்தார். அதன் பேரில் அவருடைய படை உடைந்து சிதறிப் போயிற்று. அவரது உயிருக்கே ஆபத்து வந்து விட்டது. உயிர் தப்பிப் பிழைக்க அவர் மறைவாகத் திரிந்தார்.

சில சமயங்களில் காடுகளில் மறைந்திருப்பார்; சில வேளைகளில் மலைப் புறங்களில் மறைந்திருப்பார்; இன்னும் சில நேரங்களில் ஏழைக் குடியானவர்களுடைய எளிய குடிசைகளில் மறைந்திருப்பார்; ஆங்கிலப் படை வீரர்கள் அவரைப் பிடிக்கப் பெரு முயற்சி செய்தார்கள். அவர் இடம் விட்டு இடம் பெயர்ந்து தப்பிப் பிழைத்தோட வேண்டியதாயிற்று.

சில நாட்கள் சென்ற பிறகு இப்படி ஓடிக்கொண்டே இருப்பதில் ஒரு பயனும் இல்லை என்று அவர் நினைத்தார். இனிமேல் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை என்ற முடிவிற்கு வந்தார். அன்றிரவு குடிசைக்குள்ளே வைக்கோல் பரப்பி படுக்கையில் படுத்திருந்தார். அவருக்குத் தூக்கம் வரவில்லை. தம் தோல்வியைப் பற்றியே சிந்தித்துச் சிந்தித்து மனம் வருந்திக்கொண்டிருந்தார். நெஞ்சில் நின்ற தைரியமும் ஊக்கமும் குறைந்துகொண்டே வந்தன. ‘‘இந்த நாட்டுக்கு விடுதலை கிடைக்குமா?’’ என்கிற ஐயப்பாடு அவர் உள்ளத்தில் எழுந்தது.

இரவு மெதுவாகக் கழிந்து, பொழுது விடிந்தது. ஒரு சிலந்திப் பூச்சி அவர் கண்பார்வையில் பட்டது. அது கூடு கட்டுவதற்காகக் கூரையில் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குத் தாவிற்று. இரு விட்டங்களுக்கு இடையே வலையைப் பின்ன, ஒரு விட்டத்தைவிட்டு மற்றொரு விட்டத்தைப் பிடிக்க முயன்றது. அப்படிப் பிடிக்க முடியாமல் தவறி விழுந்து, வாய் நூலில் தொங்கி, ஆடிக் கொண்டிருந்தது. பின்னர் முன்னிருந்த இடத்திற்கே திரும்பி வந்தது. மறுபடியும் முயன்றது. இப்பொழுதும் தவறிப்போயிற்று. மூன்றாம் முறையும் முயன்று பார்த்தது; பலனில்லை. எனினும் சிலந்திப்பூச்சி தன் முயற்சியைக் கைவிடவில்லை. நான்காம் முறையும் ஐந்தாம் முறையும் முயன்றது. காரியம் ஈடேறவில்லை. மறுபடியும் முயன்றது; மீண்டும் தோல்வியுற்றுக் கீழே விழுந்தது.

ஏழாவது முறையும் சிலந்தி முயன்றது; தன் முழுப் பலத்துடனும் வாய் நூலில் ஊசல் ஆடிற்று. இப்பொழுதும் அதற்குத் தோல்விதான் கிடைக்குமா? இல்லை; அதற்கு வெற்றி கிட்டிவிட்டது! அடுத்த விட்டத்தை அது எட்டிப் பிடித்துக் கொண்டு விட்டது.



புரூஸ் தம்மை நினைத்து வெட்கப்பட்டார். ஓர் அற்பமான சிலந்திப்பூச்சி விடாமுயற்சியைக் கைக்கொண்டு தன் காரியத்தை வெற்றியாக முடிக்குமாயின் நான் ஏன் இன்னும் முயன்று நம் காரியத்தில் வெற்றி காணக்கூடாது என்று எண்ணினார். மீண்டும் ஒரு முறை முயலத்தான் வேண்டும். இந்த முயற்சி, சிலந்தியைப் போல, அவருக்கு ஏழாவது முயற்சி. சிலந்திப்பூச்சியை நினைத்துக் கொண்டே ஊக்கத்தோடும் உறுதியோடும் மறைவிடத்திலிருந்து வெளியே வந்தார். தம் நண்பர்களை ஒருங்கு கூட்டிச் சந்தித்தார்; அவர்களுடன் கலந்தாலோசித்தார். படைகளை ஒன்று திரட்டினார். தம் திட்டத்தைப் போர் வீரர்களுக்குத் தெரிவித்தார். அவர் தீட்டிய திட்டத்தை அனைவரும் ஏற்றுக்கொண்டனர். போர் முழக்கத்துடன் அவர்கள் புறப்பட்டார்கள். இன்னும் எத்தனையோ படை வீரர்கள் அவரிடம் வந்து அவருடைய சேனையில் சேர்ந்து கொண்டனர். ஒரு பெரும் போர் மூண்டது. இந்தத் தடவை ஆங்கிலப் படை முழுத் தோல்வி கண்டு சிதறி ஓடிற்று. இராபர்ட் புரூஸ் போரில் வென்றார். ஸ்கொட்லாந்து விடுதலை பெற்றது. அதன் மக்கள் அனைவரும் வெற்றி விழாக் கொண்டாடினர். இராபர்ட் புரூஸ் ஸ்கொட்லாந்துக்கு மன்னரானார்.

## அரும்பதங்கள்

சேனை - படை
விரோதமாக - எதிராக
குடியானவர் - மக்கள்
ஐயப்பாடு - சந்தேகம்
ஈடேற - நிறைவேற
முறியடித்தல் - தோற்கடித்தல்



## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஸ்கொட்லாந்து நாட்டவருக்கும் ஆங்கிலேயருக்கும் இடையில் போர் மூளக் காரணம் யாது?

2. இராபர்ட் புரூஸிற்கு ஏற்பட்ட ஐயப்பாடு யாது? அவ் ஐயப்பாடு ஏற்படக் காரணம் என்ன?

3. இராபர்ட் புரூஸ் ஏன் மறைந்து திரிந்தார்? எங்கெங்கு மறைந்திருந்தார்?

4. இராபர்ட் புரூஸ் சிலந்திப் பூச்சியிடம் பெற்றுக்கொண்ட படிப்பினை யாது?

5. இக்கதையூடாக ஆசிரியர் வலியுறுத்த விரும்பும் கருத்து யாது?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

இராபர்ட் புரூசும் சிலந்திப் பூச்சியும் எனும் கதையை முன்மாதிரியாகக் கொண்டு, சூழலில் நீங்கள் அவதானித்த பிராணியை மையப்படுத்தி கதை ஒன்று ஆக்குங்கள்.

# வேற்றுமை II

## ஐந்தாம் வேற்றுமை

விமலனில் ரூபன் கெட்டித்தனம் மிக்கவன்

இங்கு விமலன் என்ற பெயர்ச்சொல் '**இல்**' எனும் உருபை ஏற்று வந்துள்ளது.

'**இல்**', என்பது ஐந்தாம் வேற்றுமைக்குரிய உருபாகும். அத்துடன் '**இன்**' எனும் உருபும் ஐந்தாம் வேற்றுமையை உணர்த்தி வரும்.

மேலுள்ள வாக்கியத்தில் '**இல்**' உருபு ஒப்புப் பொருளில் வந்துள்ளது.

ஒப்புப் பொருளோடு நீங்கல், எல்லை, ஏது என்ற பொருள்களும் ஐந்தாம் வேற்றுமையால் உணர்த்தப்படுவனவாகும்.

**நீங்கல்** : மலையில் வீழ் அருவி

**எல்லை** : இலங்கையின் வடக்கு இந்தியா

**ஒப்பு** : இராமனில் பரதன் சிறந்தவன்

**ஏது** : பாட்டில் சிறந்தவன் பாரதி

ஐந்தாம் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகள் :-
**இருந்து, நின்று, காட்டிலும், பார்க்கிலும், விட** ஆகிய சொல்லுருபுகள் ஐந்தாம் வேற்றுமையை உணர்த்தி நிற்கும்.

**உதாரணம் :** மரத்திலிருந்து விழுந்த கனி
அவனைக் காட்டிலும் இவன் பெரியன்.
கமலாவைப் பார்க்கிலும் சீதா புத்திசாலி
அன்வரைவிட சலீம் நல்லவன்



## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களில் ஐந்தாம் வேற்றுமை உருபை அல்லது சொல்லுருபை ஏற்றுள்ள சொற்கள் உணர்த்தும் பொருள்களை எழுதுக.

1. நெடுமாறன் ஓவியத்தில் முத்திரை பதித்தவனாவான்.
2. என்னைவிட எனது தம்பி நன்றாகப் பாடுவான்.
3. பாத்திமாவினது வீட்டின் பின்னால் ஆறு ஓடுகின்றது.

4. ஆசிரியர் வகுப்பிலிருந்து வெளியேறினார்.
5. விளையாட்டில் சிறந்து விளங்குவது எமது பாடசாலையாகும்.
6. இடியப்பத்தைவிட தோசையையே அதிகம் விரும்புகின்றேன்.
7. புற்றிலிருந்து பாம்பு வெளியே வந்துவிட்டது.
8. பாடசாலையின் வடக்குப் புறத்தில் கோயில் கட்டப்படுகிறது.
9. ரோஜாப் பூக்களைக் காட்டிலும் மல்லிகைப் பூக்கள் நறுமணமிக்கவை.
10. தந்தையை இழந்த கவலையிலிருந்து அவனால் மீளமுடியவில்லை.

## ஒலி வேறுபாட்டுச்சொற்கள் II

**ரகர, றகர சொற்கள்**

| | |
|---|---|
| பரந்த | : எமது ஆசிரியர் பரந்த உள்ளம் கொண்டவர். |
| பறந்த | : பறந்த கிளி மரத்தில் சென்று அமர்ந்தது. |
| மரி | : பிறந்தவர், மரிப்பது உலக வழக்கு. |
| மறி | : மந்தையிலுள்ள மறி வழி தவறிச் சென்றது. |

**ரகர, றகர சொற்களும் பொருளும்**

முருகு - அழகு, தேன், தெய்வம்
முறுகு - திண்மை

திரை - அலை, திரைச்சீலை
திறை - கப்பம், அரசிறை

நரை - மூப்பு, வெளுத்தமயிர்
நறை - தேன், கள், குற்றம், வாசனை

நிரை - ஒழுங்கு, பசுக்கூட்டம்
நிறை - நிறைவு, நிறுத்தலளவு

துரு - களிம்பு, குற்றம், செம்மறியாடு
துறு - நெருக்கம்

செரு - ஊடல், போர்
செறு - வயல், கோபம்

தெரியல் - பூமாலை
தெறியல் - சிதறல்

தேரல் - தெரிந்தெடுத்தல்
தேறல் - தெளிவு, கள், தேன்

## பயிற்சி

**1.** பின்வரும் சொல் ஒவ்வொன்றையும் வைத்து தனித்தனி வாக்கியம் அமைக்குக.

**1.** புரம் :
**2.** புறம் :

**3.** பரி :
**4.** பறி :

**5.** பொருப்பு :
**6.** பொறுப்பு :

**7.** வரை :
**8.** வறை :

**9.** பொரி:
**10.**பொறி :

**2.** அகராதியின் துணையுடன் பின்வரும் சொற்களுக்கான பொருளைத் தேடியறிக.

| | |
|---|---|
| **1.** திரை - | **3.** மரம் - |
| **2.** திறை - | **4.** மறம் - |

# 6 வாழ்வதற்காக வாசி

அல்மோரா மாவட்டச் சிறைச்சாலை,
1935 பிப்ரவரி 22.

செல்லமகள் இந்து,

சிறைச்சாலையில் நான் நலமாக இருக்கிறேன். கிருபாளினியின் உதவியுடன் படிக்கவேண்டிய பாடங்களை நீ முடிவு செய்துவிட்டாய் போலும். மகிழ்ச்சி. இப்படிப் பேராசிரியர்களைத் தனிப்பட்டமுறையில் சந்தித்துக் கலந்துரையாடுவது நல்லது. வகுப்பில் உட்கார்ந்து பாடங்களைக் கேட்பதனைவிட, இந்த அணுகுமுறை நல்லது.

கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் நான் படிக்கும்போது, அதுதான் நிலைமை. வகுப்பறையில் நடக்கும் உரையாடல்களுக்கு நாங்கள் பெரிய முக்கியத்துவம் கொடுக்கமாட்டோம்; ஆசிரியர்களைத் தனியாகச் சந்தித்து உரையாடுவோம். அந்த உரையாடல் எங்கள் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன் உடையதாக இருந்தது.

நீ படிக்கும் சாந்திநிகேதனில் இத்தகைய நடைமுறை இருக்கிறதா என்பது தெரியவில்லை; இல்லாவிட்டால் என்ன? ஆசிரியர்களைத் தனியே சந்தித்து உரையாடும் பழக்கத்தை நீ கடைப்பிடி.

நீ வாசிப்பதற்காக அவ்வப்போது புத்தகங்களை நான் அனுப்பலாமா எனக் கேட்டிருந்தேன்; நீயும் அனுப்பச் சொல்லி எழுதி இருக்கிறாய். இப்போது எனக்குள் திகைப்பு என்னவென்றால், உனக்கு எப்படிப்பட்ட புத்தகங்களை அனுப்புவது என்பதுதான்.

புத்தகம் வாசிப்பதனைக் கடமையாக ஆக்குதல் கூடாது; கட்டாயப் படுத்தவும் கூடாது. அப்படிச் செய்தால், புத்தக வாசிப்பு மகிழ்ச்சியைத் தராது. வெறுப்பே உண்டாகும். அதுமட்டும் அன்று; எந்தப் புத்தகத்தையும்

வாசிக்க ஆசை வராது. முன்பு எல்லாம் நம்முடைய பாடப்புத்தகங்களும் தேர்வுகளும் இப்படி வெறுப்பு உண்டாக்கும் விளைவைத்தான் செய்தன. சேக்ஸ்பியர், மில்டன் முதலியோர் எவ்வளவு அற்புதமான ஆங்கிலப் படைப்பாளிகள்!

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான புத்தகம் பிடிக்கும். குழந்தையாய் இருக்கும்போது, ஒருவகையான புத்தகம் பிடிக்கும். இளைஞராய் இருக்கும்போது, ஒருவகையான புத்தகம் பிடிக்கும்; வயது ஆக ஆக விருப்பம் மாறும்.

உனக்கு என்ன புத்தகம் வாசிக்கப் பிடிக்கும் எனச் சொல். உனக்குக் கவிதை வாசிக்கப் பிடிக்குமா? அல்லது வரலாறு, நாட்டு நடப்பு, பொருளாதாரம் முதலிய புத்தகங்கள் பிடிக்குமா? உன் ஈடுபாடு தெரிந்தபின் எந்தப் புத்தகம் வாசிக்கலாம் என்பது குறித்து, உனக்கு எழுதுவேன். உன்மீது புத்தகங்களைத் திணிக்க நான் விரும்பவில்லை.

சில புத்தகங்கள் பற்றிப் பொதுவாகப் பேசலாம். பிளேட்டோவின் புத்தகங்கள் சுவையானவை; சிந்தனையைத் தூண்டுபவை. கிரேக்க நாடகங்கள் நம் ஆர்வத்தைத் தூண்டுபவை. அவை சுருக்கமாகவும் இருக்கும்; வாசிக்க எளிதாகவும் இருக்கும். நாடகங்களைப் பற்றிப் பேசுகிறோம். அதுசரி, நீ காளிதாசனின் சாகுந்தலம் நாடகத்தை வாசித்திருக்கிறாயா? அது வாசிக்க வேண்டிய நூல்.

சென்ற ஆண்டு டால்ஸ்டாயின் 'போரும் அமைதியும்' என்னும் நாவலை வாசிக்கப் போவதாகச் சொன்னாய்; வாசித்துவிட்டாயா? உலகின் மிகச் சிறந்த நூல்களுள் அதுவும் ஒன்று. பெர்னாட்ஷாவின் பல நூல்களை நீ வாசிக்கவில்லை. அவருடைய நூல்கள் வாசிக்கத் தகுந்தவை. எனக்கு மிகவும் பிடித்தமானவர் பெட்ரண்ட் ரஸ்ஸல். அவருடைய ஆங்கிலம் அருமையானது. அறிவார்ந்த எழுத்து அவருடையது.

நாம் ஏன் புத்தகம் வாசித்தல் வேண்டும்? அறிவு பெறுவதற்காக, மகிழ்ச்சி அடைவதற்காக எனப் பல காரணங்களைச் சொல்லலாம். அவை உண்மைதாம். ஆனால், இதற்கு மேலும் ஒரு காரணம் உண்டு. ஆயிரம் முகங்கள் கொண்டது வாழ்க்கை. அதனைப் புரிந்துகொள்ளவும், முறையாக வாழவும் புத்தகப் படிப்பு இன்றியமையாதது.

தனியொரு மனிதனின் பட்டறிவு மிகவும் குறுகியது. புத்தகங்களில் மனிதர்களின் ஏராளமான பட்டறிவுச் சிந்தனைகள் அடங்கியுள்ளன. அவற்றை வாசிக்கும்போது, நாம் வசிக்கும் சிறுமூலையிலிருந்து வெளியேறுகிறோம். மலைமீது ஏறிநின்று, இதுவரை பார்க்காத உலகக் காட்சிகளைப் பார்க்கும் உணர்வைப் பெறுகிறோம்.

அன்புமிக்க,
உன் அப்பா.

(குறிப்பு: இது, ஜவகர்லால் நேருவால் அவர் மகள் இந்திரா பிரியதர்ஷினிக்கு எழுதப்பெற்ற கடிதம்.)

## அரும்பதங்கள்

கேம்பிரிஜ் - இங்கிலாந்திலுள்ள ஒரு பல்கலைக்கழகம்
சேக்ஸ்பியர் - ஆங்கில நாடக ஆசிரியர்
மில்டன் - ஆங்கிலக் கவிஞர்
பிளேட்டோ - கிரேக்க சிந்தனையாளர்
காளிதாசன் - வட மொழி நாடக ஆசிரியர், கவிஞர்
டால்ஸ்டாய் - ரஷ்ய நாட்டு எழுத்தாளர்
பெர்னாட்ஷா - ஆங்கில நாடக ஆசிரியர்
பெட்ரண்ட்ரஸல் - சிந்தனையாளர், கல்வியியலாளர்
அல்மோராசிறை - உத்திராஞ்சல் மாநிலத்தில் உள்ள சிறை
கிருபாளினி - விஸ்வபாரதி பல்கலைக்கழகத்தின் பேராசிரியர்

## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இந்தக் கடிதம் எழுதப்பட்டதன் நோக்கம் யாது?
2. வாசிப்புப் பழக்கத்தை ஏன் வற்புறுத்தி ஏற்படுத்தக் கூடாது எனக் கடிதத்தில் கூறப்பட்டுள்ளது?
3. கற்பிக்கும் ஆசிரியர்களைத் தனியே சந்தித்து, கலந்துரையாடுவது ஏன் நல்லது?
4. டால்ஸ்டாய் எழுதிய நாவலின் பெயர் என்ன?
5. நூல்களை வாசிப்பதால் ஏற்படும் நன்மைகள் மூன்றினைக் குறிப்பிடுக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

நீங்கள் வாசித்த புத்தகங்கள் இரண்டின் பெயர்களைக் குறிப்பிட்டு, அவை பற்றிச் சுருக்கமாக எழுதிக் காட்சிப்படுத்துங்கள்.

## வேற்றுமை III

### ஆறாம் வேற்றுமை

இராமனது புத்தகம்

மேற்படி வாக்கியத்தில் இராமன் என்ற பெயர்ச்சொல் '**அது**' என்னும் உருபை ஏற்று வந்துள்ளது. அது என்பது ஆறாம் வேற்றுமைக்குரிய உருபாகும். இங்கு '**அது**' என்னும் ஆறாம் வேற்றுமை உருபு '**உடைமை**'ப் பொருளை உணர்த்தி நின்றது.

உடைமைப் பொருள் தற்கிழமை, பிறிதின் கிழமை என இருவகைப்படும்.

தன்னை விட்டு நீங்க இயலாத உரிமை உடையது **தற்கிழமை** எனப்படும்

**உ+ம் :** இராமனது கை

தன்னில் வேறுபடுத்தக்கூடிய உரிமை கொண்ட பொருள் **பிறிதின் கிழமை** எனப்படும்.

**உ+ம் :** தம்பியது புத்தகம்

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்தில் தரப்பட்டுள்ள சொற்கள் ஏற்றுள்ள வேற்றுமை உருபை இனங்கண்டு அவை எத்தனையாம் வேற்றுமைக்குரியன எனவும் என்ன பொருளை உணர்த்தின எனவும் குறிப்பிடுக.

1. **நல்லூரின்** கிழக்கு நாவற்குழி.
2. பரிசளிப்பு **விழாவிற்காக** மண்டபத்தை அலங்கரிப்போம்.
3. **சீதையினது** அழகு கம்பரையே கவர்ந்துவிட்டது.
4. **குமாருக்கு** நண்பனான பீற்றர் **இந்தியாவிலிருந்து** வருகிறான்.
5. **வீரத்தில்** வீமன் சிறப்புடையவனாகத் திகழ்ந்தான்.
6. திருடர்கள் **வீட்டினது** கதவினை கள்ளச் சாவியால் திறந்துள்ளனர்.
7. நகர **அபிவிருத்திக்காக** பழைய **கட்டடங்களை** மாநகர சபை இடிக்கவுள்ளது.
8. முஸ்லிம் மகா **வித்தியாலயத்தினது** பழைய மாணவர்கள் கல்லூரியில் புதிய **கட்டடத்தைக்** கட்டுகின்றார்கள்.
9. ஹஸ்மத்துல்லா தனது **அண்ணனுடன்** குருணாகலுக்குச் செல்வான்.
10. **பறவைகளினது** கூட்டம் **வயல்களின்** மேலே பறந்து செல்வது அழகாக உள்ளது.

## கடிதம் எழுதுதல்

பல்வேறு தேவைகளுக்காக கடிதம் எழுதும் வழக்கம் நீண்டகாலமாக இருந்து வருகின்றது. தொழினுட்ப வளர்ச்சியினால் கடிதம் எழுதுவது குறைந்து விட்டாலும் இன்றும் சில தேவைகளுக்காக கடிதம் எழுதுதல் தொடர்கிறது.

தரம் 7 இல் உறவுமுறைக் கடிதத்தின் அமைப்பினைக் கற்றுள்ளோமல்லவா? அதனை நினைவுபடுத்திக் கொள்வோம்.




பின்வரும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ற கடிதங்களை எழுதுக.

★ நீங்கள் வாசிப்பதற்கு அவசியமான புத்தகம் ஒன்றைப் பற்றிக்கூறி, அதனை வாங்கி அனுப்புமாறு கேட்டு உங்களின் உறவினர் ஒருவருக்குக் கடிதம்.

★ உங்கள் பிரதேசத்தின் சிறப்புக்களை விபரித்து அவற்றைப் பார்வையிட வருமாறு அழைத்து நண்பருக்குக் கடிதம்.

★ சுகவீனமுற்றிருக்கும் உங்கள் உறவினர் ஒருவருக்கு ஆறுதல் கூறியும் அவர் நலமுற வேண்டிப் பிரார்த்தித்தும் அவ்வுறவினருக்கு கடிதம்.

★ உங்கள் பாடசாலையில் நடைபெற்ற விளையாட்டுப்போட்டி பற்றியும் அதில் நீங்கள் பரிசில்கள் பெற்றமை பற்றியும் குறிப்பிட்டு வெளிநாட்டில் வதியும் தந்தைக்குக் கடிதம்.

# 7 பேராசிரியர் ம.மு.உவைஸ்



தமிழ் இலக்கியப் பரப்பிலே இஸ்லாமிய இலக்கியம் என்று சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒருவகை இலக்கியம் உண்டா என்ற வினா சுமார் நான்கு தசாப்தங்களுக்கு முன்னர் பலரால் எழுப்பப்பட்டிருக்கலாம். ஆனால், தமிழில் இத்துணை இஸ்லாமிய இலக்கியங்கள் இருக்கின்றனவா என்று பலர் இன்று மூக்கின் மேல் விரலை வைக்கின்றனர். இந்தப் பாரிய மாறுதல் எவ்வாறு நிகழ்ந்தது என்பதை அறிய விழைவார் முன் ஆரவாரமெதுவுமின்றி, ஆனால் வெகு துலாம்பரமாக ஓர் அறிஞர் தோன்றுவார். அவர்தான் பேராசிரியர் ம.மு.உவைஸ்.

இலங்கைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ச்சிறப்புப் பட்டதாரியாகியதன் பின் முதுகலைமாணிப் பட்டத்துக்கு 1951ஆம் ஆண்டில் அவர் ஆங்கிலத்திலே சமர்ப்பித்த ஆய்வுக் கட்டுரை இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் துலங்குவதற்கான அடிப்படையாயிற்று. 1953இல் நூலாக வெளிவந்த தமிழ் இலக்கியத்துக்கான இஸ்லாமியரின் பங்களிப்புப் பற்றிய அவ்வாய்வு இஸ்லாமியரின் கவனத்தை மட்டுமன்றித் தமிழ்கூறு நல்லுலகினதும் ஏனையோரினதும் கவனத்தை இஸ்லாமிய இலக்கியத்தின் பாற் திருப்பியது. அதற்குப் பின்னரும் அத்துறையில் பெருமுயற்சிகளை மேற்கொண்டவர் பேராசிரியர் உவைஸ் அவர்களே.

இப்போது நூற்றுக்கணக்கான நூல்கள் வெளிவருகின்றன. கருத்தரங்குகளும் கலந்துரையாடல்களும் நடைபெறுகின்றன. மருதமுனை, திருச்சி, சென்னை, காயல்பட்டினம், கொழும்பு, கீழக்கரை முதலான இடங்களில் மாநாடுகள் சிறப்பாக நடைபெற்றுள்ளன. இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் சம்பந்தமான இச்செயற்பாடுகள் எல்லாவற்றிலும் பேராசிரியர் உவைஸ் அவர்களின் பங்களிப்பு நேரடியாகவும் மறைமுகமாகவும் மகத்தானதாகவும் மிளிர்கின்றது.

பல்கலைக்கழக விரிவுரையாளராகவும் கல்லூரி ஆசிரியராகவும் வணிக மன்ற மொழிபெயர்ப்பாசிரியராகவும் பரீட்சைத் திணைக்களப் பரீட்சகராகவும் பலதிறப்பட்ட பணிகளில் ஈடுபட்ட உவைஸ் அவர்கள் இஸ்லாமியத் தமிழிலக்கிய ஆய்வில் தொடர்ந்து கவனம் செலுத்தி வந்தார். 1976ஆம் ஆண்டு முஸ்லிம் தமிழ்க் காப்பியங்களைப் பற்றியதோர் ஆய்வினைச் சமர்ப்பித்துப் பேராதனைப் பல்கலைக்கழகத்தின் கலாநிதிப் பட்டத்தினை அவர் பெற்றார்.

இலக்கியம், சமயம், வரலாறு, பிரயாணம் முதலிய துறைகளில் சுமார் ஐம்பது நூல்களையும் நூற்றுக்கு மேற்பட்ட கட்டுரைகளையும் அவர் வெளியிட்டுள்ளார். சில உரைகளை எழுதியதோடு சுமார் 15 நூல்களைப் பதிப்பித்துள்ளார். பலவற்றை மொழி பெயர்த்துள்ளார். ஆங்கில, சிங்கள மொழிப் புலமைமிக்க பேராசிரியர் உவைஸ் தமிழிலிருந்து சிங்க ளத்துக்கும் சிங்க ளத்திலிருந்து தமிழுக் கும் ஆங்கி லத் திலிருந்து சிங்களத்துக்கும் நூல்களை மொழி பெயர்த்துள்ளார். உலக மாநாடுகள் பலவற்றிற் பங்குபற்றி ஆய்வுக்கட்டுரைகளைச் சமர்ப்பித்துள்ளார். பேராசிரியர் உவைஸ் வெளியிட்ட நூல்கள், கட்டுரைகள், பங்குபற்றிய கருத்தரங்குகள், மாநாடுகள், பெற்ற பாராட்டுக்கள், கௌரவங்கள் ஆகியவற்றை எடுத்துக் காட்டுவதெனின் அது தனியொரு புத்தகமாகும்.

சுருக்கமாகக் கூறுவதெனின், தமிழ்ப் பண்பாட்டையும் இலக்கியத்தையும் பற்றிய விசாலமான அறிவோடு இஸ்லாமியப் பண்பாட்டையும் இலக்கியத்தையும் நோக்கிய பேராசிரியர் உவைஸ் அவர்களது பணிகள் விதந்து குறிப்பிடத்தக்கவை. இஸ்லாமிய மார்க்கத்திலும் பண்பாட்டிலும் ஊறித்திளைத்த தன்மையும் தமிழை ஆழமாக நேசித்த தன்மையும் அவரது ஆக்கங்களுக்கு வளமூட்டின எனலாம்.

இஸ்லாமிய தமிழ் இலக்கியத்துக்கெனத் தனியானதொரு துறையினைத் தோற்றுவித்த மதுரை காமராஜர் பல்கலைக்கழகத்தினர், அதன் தலைமைப் பதவிக்குப் பொருத்தமானவர் யாரென நாற்றிசையும் நோக்கிய வேளையிலே தென்பட்டவர் கலாநிதி உவைஸ் அவர்களே. 1979இல் அப்பதவியில் அவர் அமர்ந்தமை, இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறையில் மதுரை காமராஜர் பல்கலைக்கழகம் கணிசமான பணிகளை ஆற்ற ஏற்ற அடித்தளமாயிற்று.

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றினை விரிவான முறையில் ஆறு தொகுதிகளாக வெளியிடக் கருதிய பல்கலைக்கழகம் அதனை முடிக்க வல்லவர் பேராசிரியர் உவைஸ் எனக்கண்டு, அதனை அவர்கண் விட்டதில் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை.

1931ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் முதலாவது தமிழ்ப் பேராசிரியர் பதவி தோற்றுவிக்கப்பட்டபோது அதனை அலங்கரிக்கப் பொருத்தமானவராக சுவாமி விபுலாநந்தர் காணப்பட்டார். சில காலம் அவரது மாணாக்கராக விளங்கிய கலாநிதி உவைஸ், மதுரைப் பல்கலைக்கழக இஸ்லாமிய தமிழிலக்கியப் பேராசிரியப் பதவியை முதலில் வகிக்கத் தகுதி வாய்ந்தவராக அழைக்கப்பட்டார். அந்த வகையில், சுவாமி விபுலாநந்தருக்குப் பின் இலங்கைக்கு அத்தகைய பெருமையைத் தேடித்தந்தவர் பேராசிரியர் உவைஸ் அவர்களே எனலாம்.

சுவாமி விபுலாநந்தரை நினைக்கும்போது, பேராசிரியர் உவைஸின் செய்யுள் புனையும் ஆர்வமும் கவனத்துக்கு வருகிறது. இறைவனைத் துதிப்பனவாயும் சமயவாழ்வையும் ஒழுக்கத்தையும் வலியுறுத்து வனவாகவும் எல்லோரும் இன்புற்றிருப்பதை விழைவனவாகவும் சுவாமி விபுலாநந்தரின் செய்யுள்கள் அனேகமாக அமைந்தன. பேராசிரியர் உவைஸ் யாத்துள்ள செய்யுள்களும் அவ்வாறானவையே.

பேராசிரியர் உவைஸ் சிறந்த மாணவராகவும் சிறந்த ஆசிரியராகவும் விளங்கியவர். மாணவர் என்ற வகையில் அறிவுத் தேட்டத்தில் ஆர்வம் மிக்கவர்; தம் ஆசிரியர்பால் ஆராக்காதலும் மதிப்பும் மிகுந்தவர். அவரது ஆசிரியர்களான சுவாமி விபுலாநந்தர், பேராசிரியர் க. கணபதிப் பிள்ளை, பேராசிரியர் சு. வித்தியானந்தன் முதலானவர்களிடத்து அவர் பற்றுமிகுந்தவர். பேராசிரியர் கணபதிப்பிள்ளையும் பேராசிரியர் வித்தியானந்தனும் கூட உவைஸ் அவர்களிடத்து விசேட அன்பு

செலுத்தினர். ஆசிரியர் என்ற முறையில் பேராசிரியர் உவைஸ் தம் மாணாக்கர்களிடத்து அன்பும் ஆர்வமும் மிக்கவராக விளங்கினார்.

அறிவினைத் தேடுவதில் கொண்டளவு வேட்கையினை, அவ்வறிவினை ஏனையவர்களோடு பகிர்ந்து கொள்வதிலும் ஆர்வம் கொண்டவர் உவைஸ். அகப்பட்ட புத்தகங்களையும் அறிவினையும் முடக்கிச் சுயலாபத்துக்கு முதலாக்குவோர் பலருக்கு மத்தியில் அவற்றையெல்லாம் திறந்த மனத்துடன் கரவின்றிப் பரிமாற விரும்பும் பேராசிரியர் உவைஸ் அவர்களது பரந்த உள்ளம் பாராட்டப்பட வேண்டியதாகும்.

***“ தாமின் புறுவ துலகின் புறக்கண்டு***
***காமுறுவர் கற்றறிந்தார்.”***

என்ற திருக்குறளுக்கு எடுத்துக்காட்டான கற்றறிவாளர் உவைஸ்.

**– பேராசிரியர் சி. தில்லைநாதன்**
‘இலங்கைத் தமிழ் இலக்கியம்’

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| தசாப்தம் | - | பத்தாண்டு |
| பாரிய | - | பெரிய |
| விழைவன | - | விரும்புவன |
| துலாம்பரம் | - | வெளிப்படை |
| துலங்குதல் | - | விளங்குதல் |
| மிளிர்தல் | - | பிரகாசமாகத் தெரிதல் |
| விதந்து குறிப்பிட | - | சிறப்பித்துக் கூற |
| வேட்கை | - | ஆவல் |
| கரவின்றி | - | மறைவின்றி |

## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பேராசிரியர் உவைஸ் அவர்களின் பங்களிப்புடன் இலக்கிய மகாநாடுகள் இடம்பெற்ற இடங்கள் எவை?
2. பேராசிரியர் உவைஸையும் சுவாமி விபுலாநந்தரையும் கட்டுரையாசிரியர் ஒப்பிட்டுக் கூறுவதற்கான காரணமென்ன?
3. பேராசிரியர் உவைஸ் சிறந்த மாணவராகத் திகழ்ந்தார் என்பதற்கான சான்றுகளாக கட்டுரையாசிரியர் எவற்றைக் குறிப்பிடுகின்றார்?
4. கட்டுரையாசிரியர் விதந்து குறிப்பிடும் உவைஸின் சிறந்த பண்புகள் எவை?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

சுவாமி விபுலாநந்தரின் தமிழ்ப் பணிகளைப் பற்றி ஆசிரியர் உதவியோடு நண்பர்களுடன் கலந்துரையாடுங்கள்.

# வினைச்சொற்கள் I

**தம்பி பாடசாலைக்குச் சென்றான்.**
**தம்பி பாடம் படிக்கின்றான்.**
**தம்பி உணவை உண்பான்.**

மேலே உள்ள வாக்கியங்களில் இடம்பெற்றுள்ள **சென்றான், படிக்கின்றான், உண்பான்** ஆகிய சொற்கள் செயலை உணர்த்தி வருகின்றன. இவ்வாறு செயலை உணர்த்தி நிற்கும் சொற்களையே வினைச்சொற்கள் என்பர்.

| **செயல் குறித்து வருவன யாவும் வினை எனப்படும்.** |
|---|

## வினைச்சொல்லின் அமைப்பு

ஒரு வினைச்சொல் **வினையடி + இடைநிலை + விகுதி** என்ற அமைப்பைக் கொண்டிருக்கும். இதில் வினையடி கட்டாயமானது. வினைச்சொல் ஒன்றில் இடைநிலையும் விகுதியும் இருக்கலாம். அல்லது இல்லாது இருக்கலாம். அல்லது இவற்றில் ஏதாவது ஒன்று இருக்கலாம்.

**உதாரணம்:**

**ஓடு** - வினையடியை மட்டுமே கொண்ட வினைச்சொல்

**ஓடும்** - ஓடு என்ற வினையடியையும் உம் என்ற விகுதியையும் கொண்ட வினைச்சொல்

**ஓடினான்** - ஓடு என்ற வினையடியையும் இன் என்ற இறந்தகால இடைநிலையையும் ஆன் என்ற ஆண்பால் விகுதியையும் கொண்ட வினைச்சொல்

## வினைச்சொற்களின் பண்புகள்

**வா, போ, நில், நட** முதலான வினைச் சொற்கள் செயலை உணர்த்துகின்றன. இது போன்று **நடந்தேன், நடக்கின்றேன், நடப்பேன்** முதலான வினைச் சொற்களும் செயல்களை உணர்த்துகின்றன. அவ்வகையில் **வினைச்சொற்களின் பொதுவான பண்பு செயலை உணர்த்துவதாகும்.**

**சென்றான், படிக்கின்றான், உண்பான்** ஆகிய சொற்கள் முறையே இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பனவற்றை உணர்த்தி நின்றன. எனவே வினைச்சொற்களின் பிரதான பண்பு **காலத்தை உணர்த்தி நிற்பது ஆகும்**.

**சென்றான், படிக்கின்றான், உண்பான்** ஆகிய சொற்கள் பொதுவாக வேற்றுமை உருபுகளை ஏற்பதில்லை. (உருபை ஏற்கும் போது சென்றானை, படிக்கின்றானை, உண்பானை என வினையாலணையும் பெயராக மாறும்) ஆகையால் வினைச் சொற்களின் மற்றொரு பண்பு **வேற்றுமை உருபை ஏற்காமை ஆகும்**.

## வினைச்சொற்களின் வகைகள்

வினைச்சொற்களை அவற்றின் **அமைப்பு, பொருள்,** வாக்கியத்தில் அவற்றின் **தொழிற்பாடு** முதலிய அடிப்படைகளில் பல வகையாகப் பாகுபடுத்தலாம்.

1.தெரிநிலைவினையும் குறிப்புவினையும்
2.முற்றுவினையும் எச்சவினையும்
3.ஏவல் வினை
4.வியங்கோள் வினை

# தெரிநிலைவினையும் குறிப்புவினையும்

## தெரிநிலை வினை

***தம்பி ஓவியத்தை வரைந்தான்.***
***குயவன் பானையை வனைந்தான்.***

மேலேயுள்ள உதாரணங்களில் **வரைந்தான், வனைந்தான்** முதலான வினைச்சொற்கள் செய்பவன், செயல், காலம் ஆகியவற்றை வெளிப் படையாக உணர்த்தி நிற்கின்றன. இவ்வினைச்சொற்கள் பகுதியாற் செயலையும் இடைநிலையால் காலத்தையும் விகுதியால் திணை, பால், எண், இடத்தையும் உணர்த்தி நிற்கின்றன. இவ்வாறு வருகின்ற வினைச் சொற்களையே தெரிநிலை வினைச் சொற்கள் என்போம்.

தெரிநிலைவினை **த், ட், ற், ன், இன், இ** என்னும் இடைநிலைகளைப் பெற்று இறந்த காலத்தைக் காட்டும்.

**உதாரணம் :**

**த்** - படித்தான்
**ட்** - உண்டான்
**ற்** - கற்றான்
**ன்** - போனான்
**இன்** - ஓடினான்
**இ** - கூவியது

தெரிநிலைவினை **கிறு, கின்று** என்னும் இடைநிலைகளைப் பெற்று நிகழ் காலத்தைக் காட்டும்.

**உதாரணம் :**

**கிறு** - ஓடுகிறான்
**கின்று** - ஓடுகின்றான்

தெரிநிலைவினை **ப், வ்** என்னும் இடைநிலைகளைப் பெற்று எதிர் காலத்தைக் காட்டும்.

**உதாரணம் :**

**ப்** - உண்பான்
**வ்** - ஓடுவான்

## குறிப்புவினை

**இராமன் கரியன்.**
**அவன் பெருஞ்செல்வன்.**
**அவன் கடுநடையன்.**

இங்கு **கரியன், செல்வன், கடுநடையன்,** முதலானவை வினைச் சொற்கள் ஆகும். இச்சொற்களில் செய்பவன் மட்டுமே வெளிப்பட்டு நிற்கின்றான். இவை காலத்தை வெளிப்படையாகக் காட்டாது சந்தர்ப்பத்திற்கேற்ப காலத்தைக் குறிப்பால் உணர்த்தி நிற்பதையும் காணலாம். இவ்வாறான வினைச் சொற்களை குறிப்பு வினைச் சொற்கள் என்போம்.

## பயிற்சி

**1.** பின்வரும் வாக்கியங்களிலே தெரிநிலை வினையாக அமைந்த வாக்கியங்களையும் குறிப்பு வினையாக அமைந்த வாக்கியங்களையும் வேறுபடுத்தி எழுதுக.

1. அவன் பெருஞ் செல்வன்.
2. உழவர்கள் வயலை உழுதனர்.
3. இவன் நல்லன்.
4. நான் பாடசாலை சென்றேன்.
5. கந்தன் ஆழ்ந்து தூங்கினான்.

**2.** பின்வரும் தெரிநிலைவினைச் சொற்களில் இடம்பெற்றுள்ள இறந்தகால, நிகழ்கால, எதிர்கால இடைநிலைகளை இனங்கண்டு எழுதுக.

கற்றேன், ஓடுவான், பாடுகிறான், உண்போம், பாடின, ஓடினான், செய்வான், வருகிறான், உறங்கினான், உண்டனர், ஓடியது

## ஒலி வேறுபாட்டுச்சொற்கள் III

**னகர, ணகர சொற்கள்**

| | |
|---|---|
| கனம் | : பெரியோரைக் கனம் பண்ணுவோம். |
| கணம் | : இறைவா, நான் உன்னை ஒரு கணமும் பிரியாதிருக்க வரம் தருவாய். |
| பனி | : மாசிப்பனி மூசிப் பெய்யும். |
| பணி | : மாணவர்கள் நற்பணிகள் செய்தல் வேண்டும். |

**னகர, ணகர சொற்களும் பொருளும்**

திணை - ஒழுக்கம்
தினை - தானியம்

வண்ணம் - நிறம், சிறப்பு, அழகு
வன்னம் - நிறம், எழுத்து

வாணி - சொல், கல்வி, சரசுவதி
வானி - காற்றாடி

மாணவன் - மாணாக்கன்
மானவன் - அரசன், வீரன், மனிதன்

பனை - தாலம்
பணை - மூங்கில், பெருமை

பண் - இசை
பன் - பருத்தி

அணல் - தாடி
அனல் - வெப்பம்

காண் -காட்சி
கான் - வாசனை, காடு, பூ

கணி - சோதிடம்/கணக்கிடு
கனி - பழம்

தணி - குறை
தனி - ஒற்றை

## பயிற்சி

**1.** கீழ்வரும் பழமொழிகளிலுள்ள எழுத்துப் பிழைகளைத் திருத்தி எழுதுக.

1. அச்சானி இல்லாத் தேர் முச்சானும் ஓடாது.
2. அனை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது
3. அண்ணம் இட்ட வீட்டில் கண்ணம் இடலாமா?
4. பனம் இல்லாதவன் பிணம்
5. மருன்டவன் கன்னுக்கு இருண்டதெல்லாம் பேய்

**2.**பின்வருவனவற்றில் அடைப்புக்குறிக்குள் இருக்கும் பொருத்தமான சொல்லைத் தெரிவு செய்க.

1. அந்தச் சிலைக்கு ( கொண்டை / கொன்றை ) மாலையை அணிவித்தான்
2. நான் பலாக் (கனியை / கணியை )ச் சுவைத்தேன்.
3. பூ இதழில் ( பனி / பணி ) அழகு.
4. அப்பா உண்ட பின் குளிர் ( பாணம் / பானம் ) அருந்துவார்.
5. அவள் பூமாலை ( புனைந்தாள் / புணைந்தாள் ).
6. அருச்சுனன் பழத்தைப் பறிக்க ( கனை / கணை ) தொடுத்தான்.
7. இந்துக்கள் வெள்ளிக்கிழமைகளில் (ஊன் / ஊண் ) தவிர்த்தல் சிறப்பு.
8. அந்த ( வானத்தில் /வாணத்தில் ) வானவில் தோன்றியது.
9. தாகத்தால் வருந்தியவர்கள் (சுனை / சுணை) சென்று நீரருந்தினர்.
10. பெரியவர்களைச் சிறுவர்கள் (கனம் / கணம்) பண்ணுதல் வேண்டும்.

# 8 பசிப்பிணி மருந்து

பசி என்பது ஜீவராசிகளுக்கு, குறிப்பாக மானிடர்கட்கு இயற்கை. அது தீர்க்கப்படவேண்டும். ஆகவே, உணவு கொடுக்கப்பட வேண்டும். பசியும் அதைத் தீர்க்கும் வழியும் மணிமேகலையில் நன்கு கூறப்பட்டுள்ளன.

'பசி எனும் தீப்பிணி' எனக் குறள் குறிப்பிட்டுள்ளது உண்மைதான். ஆனால், பசியைப் பிணி என்று திட்டவட்டமாகக் குறிப்பிட்டுள்ளார் சாத்தனார். அதை மேலும் மேலும் வளர்ப்பதைப் பல கட்டங்களில் பார்க்கலாம். பசியின் கொடுமையைப் பல உதாரணங்களைக் கொண்டு விவரிக்கின்றதைப் பார்க்கலாம்.

பசிப்பிணியின் கொடுமையைப் பற்றித் தீவதிலகை மூலம் அறிகிறோம்.

> ***''குடிப்பிறப்பு அழிக்கும்; விழுப்பம் கொல்லும்***
> ***பசிப்பிணி என்னும் பாவி''***

அது தீர்த்தோர் புகழை என் நாவினாற் சொல்ல இயலாது.

> ***''மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்***
> ***உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே''***

உணவளித்தவரே உயிரளித்தவராவர். மந்திரப் பாத்திரம் கோமுகியிலிருந்து மணிமேகலை கையில் கிடைக்கிறது.

பெரும் பசியுள்ளவர்கள் முகம் கண்டு அமுது சுரக்க வேண்டும். ஈன்ற சேய் முகம் கண்டு தீம்பால் சுரக்கும் இனிய தாய் முலை போன்று பசிமுகம் கண்டு இந்த மந்திரப் பாத்திரத்திலிருந்து உணவு சுரக்க வேண்டும். இதுவே தீவதிலகையின் வேட்கையாகும்.

அறவண அடிகள் சொல்லுவார்,

> ***''மக்கள் தேவர் என இரு சாரார்க்கும்***
> ***ஒத்த முடிவின் ஓர் அறம் உரைக்கேன்***
> ***பசிப் பிணி தீர்த்தல்...''***

பிச்சை எடுத்தல் என்பது தவறல்ல. ஆபுத்திரன் மதுரையில் மாசற்ற மனைகளில் பிச்சை எடுத்தான். குருடர், செவிடர், முடவோர், நோயாளர், அனாதைகள் இவர்களை அழைத்து உண்ணச் செய்து மிச்ச உணவைத் தான் உண்டான். இரவில் அந்தப் பிச்சைப் பாத்திரத்தைத் தலைக்கு வைத்துப் படுத்தான். பின்பு சிந்தாதேவி ஆபுத்திரன் முன்பு தோன்றி, பின்வருமாறு கூறினார்.

''அன்பா எழுந்திரு, இதைக் கொள். இது அற்புதத் திருவோடு. நாடு வறண்டாலும் இந்த ஓடு வறளாது. நாடெல்லாம் வறுமை புகுந்தாலும் இந்த ஓடு வறுமையுறாது. இதில் நிறையும் உணவிற்கு குறைவிராது. வாங்குவோர் கைதான் அலுத்துப் போகும். இது வழங்குதல் அலுக்காது. இது அழியாத் தன்மையது''

அமுதசுரபியில் உணவு சுரப்பதற்காக ஒரு பத்தினிப் பெண்ணிடம் பிச்சை எடுக்க வேண்டும். அவள்தான் ஆதிரை நல்லாள். ஆதிரை பிச்சையிட்ட சமயம் புனையா ஓவியமாக நின்ற மணிமேகலையிடம் உணவையிட்டு சொல்வாள்,

***''பாரகம் அடங்கலும் 'பசிப்பிணி அறுக' என***
***ஆதிரை இட்டனள் ஆருயிர் மருந்து''***



மணிமேகலையின் அமுதசுரபியில் அடிப்படையான உண்மையொன்று புலப்படும். அதுதான் அள்ளிக்கொடுத்தால் வெள்ளம் பெருகும். ஆபுத்திரன் தனது பிச்சைச் சோற்றையும் பங்குவைத்து உண்கிறான். கலைமகள் தரும் அமுத சுரபிகலைச் செல்வம் போல வற்றா நிறைவு. கலைச் செல்வத்தைக் கொண்டு அன்புடன் உழைத்து, உழைத்த பயனை அறவுணர்வுடன் பங்கு வைத்துண்டால் நாட்டில் வளம் பெருகும்; அன்னம் பாலிக்கும்; பஞ்சம் இராது. நாட்டு விளைவையும் துறவுப் பான்மையுடன் துய்க்க வேண்டும். ஈந்து உவக்க வேண்டும். மணிமேகலை கலைச்செல்வி. கலையைக்

காசாக்காமல் துறவுபூண்டு அருள்வழிச் சென்றாள். அவளுக்கு சிந்தா தேவியின் அமுதக்கலயம் கிடைத்தது. அதில் கற்புள்ள மனையறச் செல்வியின் உணவு வந்ததும் அது பொங்கிப் பெருகியது. மணிமேகலை தானே உண்ண நினைத்திருந்தால் அப்படி நேர்ந்திருக்காது என ஆசிரியர் மறைமுகமாக நமக்கு உரைக்கின்றார்.

காயசண்டிகையானவள் 'யானைத்தீ' என்னும் கொடும் பசியால் துன்புறுகிறாள். அமுதசுரபியிலிருந்து உணவு பெற்று உண்டவுடன் அவளுடைய பசிநோய் தீர்ந்தது. அவளுடைய பசி நீண்டகாலம் பீடித்திருந்த நோய் போன்றதாகும். எவ்வளவு மகிழ்வெய்தியிருப்பாள் யோசித்துப் பாருங்கள். அடுத்து அவளுடைய வாழ்வில் கஷ்டம் ஏற்பட்டதற்கு மணிமேகலை பொறுப்பல்லள்.

உதயகுமாரனுக்குப் பயந்து காயசண்டிகை உருவிலிருந்த மணிமேகலை சிறைச்சாலையில் உணவளித்தாள். சிறைக்காவலர்கள் வியந்து அரசனு க்குத் தெரிவித்தனர் பாத் திரத்தின் பெருமை யை எடுத்துச் சொன்னாள்,

**''தெய்வம் தந்தது திப்பியம் ஆயது**<br>
**யானைத் தீ நோய் அரும்பசி கெடுத்தது**<br>
**ஊன் உடைய மாக்கட்குஉயிர் மருந்து இது''**

இருபத்தெட்டுத் தினங்கள் இந்திர விழா நடக்கவிருக்கிறது. மேற்படி விழாவுக்காக முரசறைபவன் பல வேண்டுகோள்களை விடுத்துக் கடைசியில் எப்படி முடிக்கிறான் பாருங்கள்:

**''பசியும் பிணியும் பகையும் நீங்கி**<br>
**வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி**<br>
**அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென்''**

அரசனுடைய கடமைகள் என்ன என்பதை மணிமேகலை கோடிட்டுக் காட்டுகிறாள். மூன்று முக்கிய கடமைகளில் முன்னிற்பது உண்டி கொடுத்தலாகும். எனவே தன் குடிகளின் பசியைத் தீர்க்க வேண்டியது தலையாய கடமையாம்.

மணிமேகலை காஞ்சிபுரம் செல்கிறாள். இக்காவியத்தில் புகார், மதுரை, வஞ்சியுடன் காஞ்சியையும் ஆசிரியர் கொண்டுவந்திருப்பது கவனிக்கத் தக்கதாகும். அது ஓர் இறுதி அறிவிப்பு (Climax) ஆக அமைகிறது. அங்குப் பலருக்கு அன்னமிட்டுவிட்டு உலகப் பற்றிலிருந்து விடுதலை பெறுகிறாள்.

காஞ்சியில் இந்தியாவிலுள்ள பதினெட்டு மொழி பேசக்கூடிய மக்களும் வந்து கூடுகின்றனர்.

**''மொய்த்த மூவறு பாடைமாக்கள்''**

அவர்களில் பசி நோயுற்றோர் இன்னும் மற்றோர்க்கும் (மன்னுயிர் அடங்கலும்) உணவு நல்குகிறாள். அது அவர்களுக்கெல்லாம்,

**''அருந்தியோர்க்கெல்லாம் ஆருயிர் மருந்தாய்!''**

அமைந்தது. இந்தக் கட்டத்தில்தான் ஆசிரியர் அமுதசுரபியின் குணத்தைக் கச்சிதமாக வர்ணிக்கிறார்.

**''பங்கயப் பீடிகை பசிப்பிணி மருந்தெனும்**
**அங்கையின் ஏந்திய அமுதசுரபி''**

பின்னர், ஆசிரியர் மணிமேகலையை வழியனுப்புகிறார். அப்போது அவளுக்கு ஒரு பட்டமும் கொடுக்கிறார். அது தான் 'பசிப்பிணி தீர்த்த பாவை'

எனவே, இப்பகுதியில் பிணி என்ன என்பதையும் அதற்கு மருந்து என்ன என்பதையும் ஆசிரியர் தன் கண்ணோட்டத்தில் அணுகுகிறார்.

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| ஜீவராசிகள் | - | உயிரினங்கள் |
| பிணி | - | தீராநோய் |
| விழுப்பம் | - | மேன்மை |
| ஞாலம் | - | உலகம் |
| சேய் | - | குழந்தை |
| வேட்கை | - | விருப்பம் |
| மாசற்ற | - | குற்றமற்ற |
| அன்னம் | - | சோறு |
| திப்பியம் | - | சுவர்க்கம் |
| உண்டி | - | உணவு |
| தீவதிலகை | - | அமுதசுரபியை மணிமேகலைக்கு வழங்கிய பெண் |
| பீடிகை | - | பீடம் |
| துய்த்தல் | - | அனுபவித்தல் |
| அங்கை | - | உள்ளங்கை |



### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பசி தீர்க்கும் வழியைக் கூறும் காப்பியம் எது?
2. யானைத் தீ எனும் கொடும் பசியால் துன்புற்றவர் யார்?
3. அரசனுக்குரிய முக்கிய கடமையாக மணிமேகலை எதனைக் கூறுகின்றது?
4. மணிமேகலைக்கு வழங்கப்பட்ட பட்டம் யாது?
5. பசியைப் பிணி எனத் திட்டவட்டமாகக் குறிப்பிட்டவர் யார்?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

‘உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்’ என்ற தலைப்பில் ஒரு பேச்சை நிகழ்த்துங்கள்.

# வினைச்சொற்கள் II

## முற்றுவினையும் எச்சவினையும்

### முற்றுவினை

***தங்கை பந்து விளையாடினாள்.***
***தம்பி கடிதம் எழுதுகின்றான்.***
***நாங்கள் பாடம் படிப்போம்.***

இந்த வாக்கியங்களில் இடம்பெறும் **விளையாடினாள், எழுதுகின்றான், படிப்போம்** முதலான சொற்கள் முற்றுப்பெற்ற வினைச்சொற்களாய் உள்ளன. இவை பால் காட்டும் முற்று விகுதிகளைக் கொண்டுள்ளன. இவ்வாறு பால் காட்டும் முற்று விகுதிகளே வினைச் சொற்களுக்கு முற்றுத் தன்மையைத் தருவன. ஆதலால் அத்தகைய விகுதிகள் பெற்ற வினைகள் **முற்று வினைகள்** அல்லது வினை முற்றுக்கள் எனப்படும்.

### எச்சவினை

***படித்த*** **பெண்**
***படித்து*** **இருந்தான்**

மேற்குறிப்பிட்ட வாக்கியங்களில் ***படித்த, படித்து*** முதலான சொற்கள் முற்றுப்பெறாது நிற்கின்றன. இவை பால் காட்டும் முற்று விகுதியைக் கொண்டிருப்பதில்லை. இவ்வாறு முற்றுப் பெறாது நிற்கும் குறைவினைகளையே எச்ச வினைகள் என்போம்.

எச்சவினைகள் இரண்டு வகைப்படும்.

1. பெயரெச்சம்
2. வினையெச்சம்

### பெயரெச்சம்

***ஓடிய மாணவன்***
***ஓடுகின்ற மாணவன்***
***ஓடும் மாணவன்***

மேற்குறிப்பிட்ட வாக்கியங்களில் **ஓடிய, ஓடுகின்ற, ஓடும்** முதலான வினைச் சொற்கள் பொருள் முடிவு பெறுவதற்கு மாணவன் என்ற பெயர்ச் சொல்லை வேண்டி நிற்கிறது. பெயர்ச் சொல்லை முடிக்கும் சொல்லாய்க் கொண்ட எச்சவினை பெயரெச்சம் எனப்படும்.

**உதாரணம் :**

படித்த, செய்யாத, சித்தியடைந்த, வரைந்த, பழுக்காத

### 2. வினையெச்சம்

***இராமன் படிக்க வேண்டும்.***

***இராமன் படித்து முடித்தான்.***

***நீ படித்தால் தருவேன்.***

***நீ சென்றால் அவன் வரமாட்டான்.***

மேலே குறிப்பிடப்பட்ட வாக்கியங்களில் **படிக்க, படித்து, படித்தால், சென்றால்** முதலான வினைச்சொற்கள் பொருள் முடிவு பெறுவதற்கு முறையே **வேண்டும், முடித்தான், தருவேன், வரமாட்டான்** போன்ற வினைச்சொற்களை வேண்டி நிற்கின்றன. வினைச்சொல்லை முடிக்கும் சொல்லாய்க் கொண்ட எச்சவினை வினையெச்சம் எனப்படும். அதாவது செய்து, செய்ய, செய்தால் அமைப்பில் வரும் எச்ச வினைகளை, வினையெச்சம் என்பர்.




*பின்வரும் வாக்கியங்களில் உள்ள எச்சவினைகளை எழுதுக. அவற்றின் வகைகளைக் குறிப்பிடுக*

1. கம்பர் இயற்றிய நூல் இராமாயணம்.
2. எனது பாடலைக் கேட்டு தம்பி பாடி ஆடினான்.
3. வந்த மனிதன் மகிழ்ந்து சென்றான்.
4. ஓடிய மான் அம்பு பட்டு இறந்தது.
5. பாடும் குயில் மரத்தில் இருந்தது.
6. இறைவனைத் தொழுது வாழ்த்தினேன்.
7. தேவர்கள் நளபாகத்தை உண்டு மகிழ்ந்தனர்.
8. பகைவரும் வாழ்த்தும் பண்புடையவன் பாரி.
9. கரிய மனிதன் ஓடிப்போனான்.
10. நானும் முயற்சி செய்து உழைத்தேன்.

## எதிர்ப் பொருள் சொற்கள்

| | | |
|---|---|---|
| இகழ் | - | புகழ் |
| எரிதல் | - | அவிதல் |
| ஈதல் | - | ஏற்றல் |
| ஆக்கம் | - | கேடு |
| காய்தல் | - | உவத்தல் |
| மருள் | - | தெருள் |
| தமர் | - | பிறர் |
| சுதேசி | - | விதேசி |
| நுண்மை | - | பருமை |
| பூரணம் | - | அபூரணம் |
| ஆலம் | - | அமிர்தம் |
| ஐயம் | - | துணிபு |
| பாலர் | - | விருத்தர் |
| குணம் | - | குற்றம் |
| ஈதல் | - | ஏற்றல் |

### பயிற்சி

**1.** கீழே தரப்பட்ட சொற்களுக்குப் பொருத்தமான எதிர்க்கருத்துள்ள சொல்லை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவு செய்து அதன் கீழ்க் கோடிடுக.

1. நெறி (அவநெறி, நிந்தனை, அறநெறி, வழி)
2. உவந்தார் (மகிழ்ந்தார், உவப்பில்லார், ஒவ்வார், உற்றார்)
3. கண்டனம் (உடன்பாடு, விமரிசனம், மறுப்பு, பாராட்டு)
4. கலக்கம் (மயக்கம், தெளிவு, ஐயம், மருட்கை)
5. சுரர் (வீரர், அசுரர், மறவர், தேவர்)

6.காலம் (அகாலம், கதி, நேரம், வேளை)

7.கூம்புதல் (வாடல், சோர்தல், விரிதல், ஒடுங்குதல்)

8.வேண்டுதல் (விரும்புதல், வேண்டாமை, கொடாமை, வாங்குதல்)

9.வாட்டம் (மலர்ச்சி, நாட்டம், வளர்ச்சி, வருத்தம்)

10.துட்டர் (பாலர், விருத்தர், சிட்டர், நல்லார்)

**2.**கீழே தரப்பட்ட தொடரில் தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்கு பொருத்தமான எதிர்க்கருத்துள்ள சொற்களை இணைத்து வாக்கியத்தைத் திருப்பி எழுதுக

1.விடுதலை பெற்ற சமூகத்தில் **ஆண்டான்** ……………………. என்ற வேறுபாடுகள் காணப்படுவதில்லை.

2.நகர காவலர் தமக்குத் தெரிந்த **இரகசியத்தை** ……………………. ஆக்கி விட்டார்.

3.**நல்லது** ……………………. நிறைந்ததுதான் சமூகம்.

4.இலங்கையில் **இயற்கைத்** துறைமுகம் மட்டுமன்றி ……………………. துறைமுகமும் அமைக்கப்பட்டுள்ளது.

5.மாணவர்கள் **நற்குணங்கள்** கொண்டவர்களாக இருப்பதே சிறப்பானது. ஆகையால் அவர்கள் தம்மிடமுள்ள ……………………. நீக்க வேண்டும்.

# 9 ஆக்கிமீடீசு



மன்னன் சைராக் கியூஸ்நாட்டான்
        மாற்றுக் குறையாப் பொன்கொடுத்து
பொன்செய் கொல்லன் ஒருவனிடம்
        ''புதிய முடிசெய் நீ'' என்றான்.

நாட்கள் செல்ல முடியோடு
        நாடி வந்தான் பொற்கொல்லன்
நோட்டம் செய்த பேரரசன்
        நொடியில் பொன்னிற் கலப்புணர்ந்தான்

ஆக்கிமீடிசு எனும்பெயர்கொள்
அறிவு மிக்க பெரியோனை
நோக்கி வேந்தன் 'ஐயமிதை
நீக்க வழிகாண்' எனவுரைத்தான்

முடியின் தூய்மை கண்டறிய
முடிவு காலம் வகுத்திட்டான்
''முடிவு காணா விட்டால்நான்
முடிப்பேன் உனது வாழ்'' வென்றான்

அல்லும் பகலும் ஆராய்ந்தான்
ஐயம் தீர்க்க வழிகாணான்
மெல்ல ஒருநாள் நீர்த்தொட்டிக்
குள்ளே ஆழ்ந்து மூழ்கினனே

மூழ்கி எழுந்த விஞ்ஞானி
''கண்டேன் கண்டேன்'' எனக்கூவி
வீழ்ந்தான் எழுந்தான் வீதியெல்லாம்
வேகமாக ஓடினனே

''பொருளை நீரில் ஆழ்த்துகையில்
பொருளைத் தாங்கும் மேலுதைப்புப்
பொருளாற் பெயர்ந்த நீர்நிறைக்குப்
பொருந்தும்'' என்னும் விதிகண்டான்

முடியின் அளவு பொன்னெடுத்து
நீரில் இட்டுக் கலப்புணர்ந்தான்
முடியின் கலப்பை அரசனிடம்
முடிவாய்க் கூறிப் பரிசேற்றான்.

- ***மயிலங்கூடலூர் பி. நடராசன்*** (ஆடலிறை)

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| முடி | - | கிரீடம் |
| பொற்கொல்லன் | - | நகை செய்பவன் |
| நோட்டம் | - | தரமறிதல் |
| நொடி | - | கணப்பொழுது |
| ஐயம் | - | சந்தேகம் |
| மேலுதைப்பு | - | மேல் நோக்கித் தொழிற்படும் விசை |
| பெயர்ந்த | - | நீங்கிய |
| நிறை | - | அளவு |
| விதி | - | நெறி |

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கியூஸ் நாட்டு அரசன் யார்?
2. ஆக்கிமீடீசு கண்டு பிடித்த விஞ்ஞானத் தத்துவம் எது?
3. மன்னன் பொற்கொல்லனுக்கு கொடுத்த வேலை என்ன?
4. இப்பாடலினூடாக வெளிப்படுத்தப்படும் படிப்பினை யாது?
5. விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்கும் அரசனின் முடிக்கும் இடையிலான தொடர்பு என்ன?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

ஆக்கிமீடீசு என்ற பாடலின் பொருளைத் தொகுத்து, கதை வடிவில் எழுதுங்கள்.

# வினைச்சொற்கள் III

## ஏவல் வினை

**தம்பி படி**

இங்கு **படி** எனும் வினை தம்பியைப் படிக்குமாறு ஏவுகின்றது. இவ்வாறு முன்னிலையில் இருப்போரை வினையை நிகழ்த்துமாறு அல்லது நிகழ்த்தாது இருக்குமாறு ஏவுவதற்கு பயன்படுத்தப்படும் வினைச் சொல்லை ஏவல் வினை என்போம். இதனை ஏவல் ஒருமை வினை, ஏவல் பன்மை வினை என இரண்டாகப் பிரிக்கலாம்.

### ஏவல் ஒருமை வினை

நில், நில்லாதே, வா, போ, இரு, எழுதாதீர், நட, செய்துகாட்டு, பார்த்துக்கொள் முதலானவற்றை ஏவல் ஒருமை வினைகள் என்போம்.

### ஏவல் பன்மை வினை

போங்கள், போகாதீர்கள், வாருங்கள், செய்யுங்கள், எடுங்கள், எடுக்காதீர்கள் என்பன ஏவல் பன்மை வினைகள் ஆகும். இவை வினையடியுடன் ஏவல் பன்மை வினை விகுதிகளை கொண்டு அமைகின்றன.

போங்கள் - போ + ங்கள்

செய்யுங்கள் - செய் + உங்கள்

எடுங்கள் - எடு + உங்கள்

## வியங்கோள் வினை

**வாழ்க, ஒழிக, தருக, எழுதுக** முதலான வினைச் சொற்கள் முறையே வாழ்த்தல், வைதல், வேண்டுதல், விதித்தல் பொருளில் வந்துள்ளன. இவ்வாறான வினைச்சொற்களை வியங்கோள் வினை என்போம். வியங்கோள் வினைகள் வினையடியுடன் 'க', 'இய', 'இயர்' ஆகிய விகுதிகளை பெற்று வரும்.இவ்வினைகள் ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவாக வரும்.

**உதாரணங்கள் :**

***வாழ்த்தல் - வாழ்க, வாழிய, வாழியர்***

***வைதல் - அழிக, கெடுக***

**விதித்தல் - எழுதுக, பெறுக**
**வேண்டல் - தருக, அருள்க**

தற்காலத்தமிழில் ‘அட்டும்’ என்பதும் வியங்கோள் விகுதியாகப் பயன்படுகின்றன.

**உதாரணங்கள் : வாழட்டும், ஒழியட்டும்**

## பயிற்சி

**1.** பின்வரும் வாக்கியங்களில் வியங்கோள் வினைகள் எப்பொருளில் வந்துள்ளன என்பவற்றைக் குறிப்பிடுக.

1. நீங்கள் நீடூழி காலம் வாழ்க.
2. எல்லா வினாக்களுக்கும் விடை தருக.
3. வறுமை ஒழிக.
4. பெருமானே எழுந்தருள்க.
5. உமது பொருள்கள் சிலவற்றைக் கடனாகத் தருக.
6. அறியாமை இருள் அழிக.
7. வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி.
8. இன்பம் பெருகுக.
9. அறிவில் நீ முன்னேறுக.
10. அவர்கள் நீடூழி காலம் வாழட்டும்.

**2.** பின்வரும் வினாக்களுக்குரிய மிகவும் பொருத்தமான விடையைத் தெரிவு செய்க.

1. சிறுவன் உறங்கி எழுந்தான் - **உறங்கி** என்பது
   (முற்றுவினை, குறிப்புவினை, பெயரெச்சம், வினையெச்சம்)
2. செய்யாது விட்டேன் - **செய்யாது** என்பது
   (பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று, குறிப்புவினை)

3. எச்சமாகவும் வினைமுற்றாகவும் வரும் சொல்
(கரையும், வந்தான், ஓடிய, பறந்து)

4. **இனியன்** என்பது
(தெரிநிலைவினை, குறிப்புவினை, எச்சவினை, எதிர்மறைவினை)

5. முன்னிருப்பவரை ஒரு செயலைச் செய்யும்படி பணிப்பது
(தெரிநிலைவினை, குறிப்புவினை, எச்சவினை, ஏவல்வினை)

6. நான் உண்டேன் என்பதில் **உண்டேன்** என்பது
(தன்மைவினைமுற்று, முன்னிலைவினைமுற்று, படர்க்கை வினை முற்று, குறிப்பு வினைமுற்று)

7. உண்பாய் என்பது
(தன்மைவினைமுற்று, முன்னிலைவினைமுற்று, படர்க்கை வினை முற்று, குறிப்பு வினைமுற்று)

8. அவன் அல்லன் என்பதில் **அல்லன்**
(தெரிநிலைவினை, ஏவல்வினை, எச்சவினை, எதிர்மறைவினை)

9. உண்டு வந்த பசு - இதில் **உண்டு** வந்த என்பது
(தெரிநிலைவினை, தெரிநிலைவினைப்பெயரெச்சம், குறிப்புவினை, தெரிநிலைவினையெச்சம்)

# திரிசொல் I

இயற்சொல் போல இயல்பாகப் பொருளை உணர்த்தாது அரிதாகப் பொருள் உணர்த்துவதாக வரும் சொல் திரிசொல் எனப்படும். (திரிதல் - வேறுபடுதல்)

திரிசொல், ஒருபொருள் குறித்த பல சொல்லாகியும், பல பொருள் குறித்த ஒரு சொல்லாகியும் வரும்.

## ஒரு பொருள் குறித்த பல சொல்

குழந்தை அழுதது
குழவி அழுதது
சேய் அழுதது
மகவு அழுதது
சிசு அழுதது

மேலே உள்ள வாக்கியங்களில் குழந்தையைக் குறிக்க, **குழவி, சேய், மகவு, சிசு** முதலான பல சொற்கள் வந்துள்ளன. இவ்வாறு ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களையே ஒரு பொருள் குறித்த பல சொற்கள் என்போம்.

அடி : கழல், கால், தாள், பதம், பாதம்.

அழகு : அணி, எழில், கவின், சுந்தரம், வடிவு, வனப்பு.

அன்பு : நேசம், பற்று, பரிவு, பாசம், ஈரம்.

ஆகாயம் : அண்டம், அந்தரம், உம்பர், சேண், வான், விண், விசும்பு.

ஆசிரியர் : ஆசான், உபாத்தியாயன், குரவன், தேசிகன்.

இனம் : கிளை, சுற்றம், பரிசனம், உறவு, ஒக்கல்.

உடம்பு : உடல், காயம், மெய், மேனி, யாக்கை.

ஒளி : பிரகாசம், காந்தி, சுடர், சோதி, கதிர்.

காற்று : ஊதை, கால், பவனம், மாருதம், வளி.

சோலை : உபவனம், கா, தண்டலை, நந்தவனம், பூங்கா, பொழில்.

தோழன் : நண்பன், சினேகிதன், பாங்கன், துணைவன்.

நீதி : தருமம், நீதம், நடு, நியாயம், நெறி.

நூல்	: ஏடு, பனுவல், புத்தகம், பொத்தகம்.

வயல்	: களனி, செறு, செய், பண்ணை, பழனம்.

வாசனை : கந்தம், கடி, நாற்றம், விரை, மணம்.




**1.** பின்வரும் சொற்களைக் குறிக்க வழங்கும் வேறு இரண்டு சொற்கள் தருக.

1. தாமரை
2. போர்
3. பகைவர்
4. நெருப்பு
5. மாலை
6. ஆபரணம்
7. உடம்பு
8. வலவன்
9. வேதம்
10. வெற்பு

**2.** பின்வரும் சொற் கூட்டங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சொல் வேறுபட்டது. அச்சொல்லினைத் தெரிவு செய்து, எழுதுக.

1. ஞாலம், தாரை, நிலம், உலகம், குவலயம்
2. இறைவன், ஈசன், துறைவன், கடவுள், முதல்வன்
3. தாய், மாதா, ஆதிரை, அம்மா, ஆய்
4. நீர், அப்பு, சலம், புனல், ஈரம்
5. அல்லல், இடர், நல்குரவு, இடும்பை, இன்னல்
6. தாமரை, அம்புயம், கமலம், ஆம்பல், பங்கஜம்
7. ஆற்றல், உரம், வலிமை, சக்தி, விவேகம்
8. குற்றம், ஆசு, ஏதம், கசடு, பொறை

# 10 நாடகமே உலகம்

**'இந்த உலகம் ஒரு நாடகசாலை'** என்று ஷேக்ஸ்பியர் முதலிய பல அறிஞர்களும் கூறியுள்ளனர். இது நாடகசாலைக்கு வெளியிலிருந்து பேசும் பேச்சு. நாடகசாலைக்கு உள்ளிருந்து சொல்வதானால் **'இந்த நாடகசாலையே உலகம்'** என்று சொல்ல வேண்டும். ஏனென்றால், உலக அனுபவங்கள் அனைத்தையும் இங்கே நாம் பார்க்கிறோம்.

நாடகமென்பது, நீண்டகாலமாகப் பல இடங்களிலும் நடைபெறும் சிதறுண்ட காரியங்களையெல்லாம் திரட்டிக் கோவைப்படுத்திச் சுருங்கிய காலத்தில், சுருங்கிய இடத்தில் ரஸம் ததும்ப நடத்திக் காட்டுவதாகும். உதாரணமாக இராம நாடகத்தை எடுத்துக் கொள்வோம். அறுபதினாயிரம் ஆண்டு அரசாட்சி செய்த தசரதன் காலம் முதல் இராம பட்டாபிஷேகம்வரை நடைபெறும் அதில், எத்தனையோ அனுபவங்கள், காரியங்கள் அனைத்தையும் நான்கு அல்லது ஐந்து மணி நேரத்திற்குள் காட்டிவிடுகிறார்கள். இவற்றைப் பார்க்கையில் நாடகம் பார்ப்பவர்களாகவே ஆகிவிடுகிறோம். ஆதலால் இந்த நாடகசாலையே உலகமென்று சொல்வது மிகப் பொருத்தமானது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஆராய்ந்து பார்த்தால் இந்த உலகத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு நடிகனாகவே வாழ்க்கை நடத்துகிறான். ஒரு பிச்சைக்காரன் வந்து எவ்வித வளைவும் குழைவும் தாழ்வுமின்றி 'அம்மா! பிச்சை' என்றால் யார் இரங்குவார்கள்? அதற்காக அவன் தன் முகபாவத்தை மாற்றிக்கொள்கிறான். குரலில் குழைவு காட்டுகிறான். இரக்கம் இன்றியமையாததாயிருக்கிறது.

ஓர் உத்தியோகஸ்தரை எடுத்துக்கொள்வோம். அவர் தம் மேலதிகாரி முன் நிற்கும்போது உள்ள நிலை என்ன? ஆடையணிகள் எப்படியிருக்கும்? முகபாவம் எப்படியிருக்கும்? ஸ்வரம் எப்படியிருக்கும்? அவரே தம்மைவிடத் தாழ்ந்த உத்தியோகஸ்தனிடம் எப்படி நடந்துகொள்வார்?

அப்பொழுது அவர் முன்னைய உத்தியோகஸ்தரா? இல்லவே இல்லை. எடுப்பான தோற்றமும், முறுக்கான பேச்சும், அதட்டலும் உருட்டலும் எங்கிருந்தோ வந்துவிடும். இவை எதனைக் காட்டுகின்றன? அவர் இந்த உலகத்தில் அடிக்கடி வேஷம் மாறி மாறி நடிக்கிறார் என்பதைத்தானே காட்டுகின்றன? அவரென்ன நாமும் அப்படித்தான்.

மக்களின் அறிவை அபிவிருத்தி செய்வதற்கு நாடகத்தைப் போன்று ஒரு சிறந்த கருவி வேறெதுவுமில்லை. அதனாலேயே காலஞ்சென்ற சரோஜினி தேவியார் நாடகத்தைப் 'பாமர மக்களின் பல்கலைக்கழகம்' என்று கூறியிருக்கிறார்கள். ஒரு நடிகன் ஒரு பார்வையினால், ஒரு முக பாவத்தால், ஒரு ஸ்வர பேதத்தால், ஒரு வளைவினால், ஒரு குழைவினால், ஒரு தலையசைப்பினால், ஒரு கைவீச்சினால் விளக்குகிற கருத்தை ஒரு எழுத்தாளன் ஒன்பது பக்கம் எழுதுவதனாலும், ஒரு பிரசங்கி ஒன்பது மணிநேரம் பேசுவதனாலும் நம்முடைய மனத்திலே அவ்வளவு நன்றாகப் பதியச்செய்ய முடியாது என்பது உறுதி.

ஒரு காலத்தில் ஒரு நாடகத்தைச் சபையில் அரங்கேற்றினார்கள். அப்பொழுது நாடகம் எழுதின ஆசிரியனையும் பார்ப்பதற்கு அழைத் திருந்தார்கள். நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த ஆசிரியனுக்குப் பெரும் திகைப்பு ஏற்பட்டுவிட்டது. இது நாம் எழுதின நாடகம்தானோ என்ற சந்தேகம்கூடத் தோன்றியதாம். ஏன்? அவன் நினைத்தேயிராத அபூர்வ கருத்துக்களெல்லாம் நடிப்பில் வெளிப்பட்டன; இதிலிருந்து நாடகத்தில் நடிப்பு எவ்வளவு முக்கியமானதென்பதை நன்கு அறியலாம்.

ஒவ்வொரு பாடசாலையிலும் உயர்கல்வி நிறுவனத்திலும் நாடக அரங்கு இருக்க வேண்டியது அவசியம். சரித்திரம், புராணம் ஆகியவற்றை நாடகம் மூலமாகக் கற்பிப்பது சிறந்த முறையாகும். காதால் கேட்டறிவதைவிடக் கண்ணால் பார்த்தறிவது மனத்தில் நன்றாகப் பதியும்.

**கண்ணைச் செவியைக் கருத்தைக் கவர்ந்து நமக்கு**
**எண்ணரிய போதனைகள் ஈவதற்கு - நண்ணுமிந்த**
**நாடக சாலையொத்த நற்கலா சாலையொன்று**
**நீடுலகி லுண்டோ நிகழ்த்து?**

**- கவிமணி தேசியவிநாயகம்பிள்ளை**
'கவிமணியின் கட்டுரைகள்'

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| முகபாவம் | - | முகத்தின் உணர்ச்சி வேறுபாடு |
| குழைவு | - | நெகிழ்வு |
| அபூர்வம் | - | அரிது |
| பிரசங்கி | - | பிரசங்கம் செய்பவர் |
| ஈவது | - | கொடுப்பது |
| நண்ணும் | - | கிட்டும் |
| எண்ணரியது | - | நினைக்க முடியாதது/அளப்பரியது |
| பட்டாபிஷேகம் | - | முடிசூட்டுவிழா |
| நிகழ்த்துதல் | - | நடத்துதல் |

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஷேக்ஸ்பியரின் கருத்திற்கும் இக்கட்டுரையாசிரியரின் நாடகசாலை பற்றிய கருத்துக்கும் இடையிலான தொடர்பு என்ன?
2. கட்டுரையில் கையாளப்பட்ட பாடலில் நாடகசாலை பற்றிக் குறிப்பிடப் படுவது என்ன?
3. 'நாடகம் பாமர மக்களின் பல்கலைக்கழகம்' என்று கூறிய பெரியார் யார்? இவ்வாறு அவர் கூறியதற்கான காரணம் யாது?
4. கட்டுரையில் நடிப்பின் முக்கியத்துவம் ஆசிரியரால் எவ்வாறு வெளிப்படுத்தப்படுகின்றது?
5. 'உலகில் வாழும் மனிதர்கள் எல்லோரும் நடிகர்கள்' எனக் குறிப்பிடும் கட்டுரையாசிரியர், அதற்காக எடுத்துக்காட்டும் உதாரணங்களை சுருக்கமாக குறிப்பிடுக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

நீர் பார்த்து இரசித்த நாடகமொன்றின் சிறப்புக்கள் பற்றி விபரித்துக் கூறுங்கள்.

# சொற்றொடரும் வாக்கியமும்

**பூக்கள்**
**காட்சியளிக்கின்றன**
**அழகாக**
**செந்நிற**

மேலே சில சொற்கள் உள்ளன. அவற்றைக் கொண்டு வாக்கியம் ஒன்றினை அமைப்போம்.

**பூக்கள் செந்நிற காட்சியளிக்கின்றன அழகாக**

இங்கு காட்டப்பட்டுள்ளவாறு சொற்களை ஒழுங்குபடுத்தினால் அது வாக்கியமாகுமா?

இல்லை.

ஏன் இது வாக்கியமாகாது?

ஏனென்றால் இது பொருள் தரக்கூடிய முறையில் அமையவில்லை.

மேற்படி சொற்களைப் பின்வருமாறு ஒழுங்குபடுத்துவோம்.

**செந்நிறப் பூக்கள் அழகாகக் காட்சியளிக்கின்றன.**

இவ்வாறு ஒழுங்குபடுத்தும்போது பொருள் தரக்கூடிய முறையில் அமைவதனை அவதானிக்கலாம்.
எனவே,

இதனை வாக்கியம் எனக்கூறலாம்.

**சொற்கள் குறிப்பிட்ட ஒழுங்கு முறைக்கேற்ப அமைப்பு ரீதியாக இணைந்து முற்றுப்பொருளைத் தருமாயின் அது வாக்கியம் எனப்படும்.**

செந்நிறப் பூக்கள் அழகாக காட்சியளிக்கின்றன.

மேலுள்ள வாக்கியத்தில் காணப்படும் சொற்களான
**செந்நிற**
**பூக்கள்**
**அழகாக**
**காட்சியளிக்கின்றன.**
என்பனவற்றை வாக்கிய உறுப்புக்கள் எனலாம்.
மேலும் 'பூக்கள்' என்ற உறுப்புடன் (சொல்) தொடர்புடையதாக செந்நிற என்ற உறுப்பு (சொல்) அமைவதனையும் 'காட்சியளிக்கின்றன' என்ற

உறுப்புடன் (சொல்) தொடர்புடையதாக 'அழகாக' என்ற உறுப்பு (சொல்) அமைவதனையும் அவதானிக்கலாம். அவற்றை,

**செந்நிறப்பூக்கள்**
**அழகாகக் காட்சியளிக்கின்றன**
என மேற்படி வாக்கியத்தின் இரண்டு உறுப்புக்களாகவும் கூறமுடியும்.

இவ்வாறான வாக்கிய உறுப்புக்களை, ''சொற்றொடர்'' என்போம்.

> **சொற்றொடர் என்பது அமைப்பு ரீதியான உறவுடைய ஒரு சொல் அல்லது சொற்களின் தொகுதியாகும்.**
>
> **சொற்றொடர் வாக்கியத்தின் உறுப்பாக அமையும்.**

'பூக்கள்' என்பது பெயர்ச்சொல்லாகும். பெயர்ச்சொல்லைத் தலைமை உறுப்பாகக் கொண்ட தொடரை ''**பெயர்த்தொடர்**'' என்போம்.

செந்நிறப்பூக்கள் அழகாகக் காட்சியளிக்கின்றன என்ற வாக்கியத்தில்
**பூக்கள்**
**செந்நிறப்பூக்கள்**
என்பன பெயர்த்தொடர்களாகும்.

'காட்சியளிக்கின்றன' என்பது வினைச்சொல்லாகும். வினைச்சொல்லைத் தலைமை உறுப்பாகக் கொண்ட தொடரை ''**வினைத்தொடர்**'' என்போம். மேலே தரப்பட்ட வாக்கியத்தில்,
**காட்சியளிக்கின்றன**
**அழகாகக் காட்சியளிக்கின்றன.**
என்பன வினைத்தொடர்களாகும்.




பின்வரும் வாக்கியங்களிலிருந்து பெயர்த்தொடர், வினைத்தொடர் என்பனவற்றினை இனங்கண்டு எழுதுக.

1. சங்கீதா இனிமையாகப் பாடுவாள்.
2. அழகான கோலம் வாயிலை அலங்கரித்தது.
3. உயரமான மனிதர் விரைந்து வருகிறார்.
4. பலவர்ணப் பட்டங்கள் வானில் பறக்கின்றன.
5. அப்பா நாளை வருவார்.

# அழைப்பிதழ்

விழாக்கள், நிகழ்வுகள் முதலியவற்றில் பங்குபற்ற வருமாறு விருந்தினர்களை அழைத்து அழைப்பிதழ்களை அனுப்பி வருகிறோம். திருமணம் முதலிய குடும்பம் சார்ந்த நிகழ்வுகளுக்கும் பாடசாலை விளையாட்டுப்போட்டி முதலிய நிறுவனம் சார்ந்த நிகழ்வுகளுக்கும் எனப் பல வகையான அழைப்பிதழ்களை அனுப்புகிறோம்.அவ்வாறான அழைப்பிதழ்களை நீங்கள் பார்த்ததுண்டா?

## மாதிரி அழைப்பிதழ்

### புதுமனை புகுவிழா அழைப்பு

திரு / திருமதி / செல்வி ...................................... அவர்களுக்கு

அன்புடையீர்;

நிகழும் துன்முகி வருடம் வைகாசித் திங்கள் 05 ஆம் நாள் (19.05.2016) வியாழக்கிழமை மு.ப 10.05 மணிமுதல் மு.ப 11.40 வரையுள்ள சுப முகூர்த்த வேளையில்

இல, 146, வைத்திலிங்கம் வீதி, பரந்தன்

எனும் முகவரியில் அமையப்பெற்றுள்ள ''வசந்த பவனம்'' என்ற எமது புதிய மனையில் குடிபுகத் திருவருள் கைகூடியுள்ளது. அத்தருணம் தாங்கள் குடும்ப சமேதராய் வருகை தந்து சிறப்பிப்பதோடு தொடர்ந்து நடைபெறும் மதியபோசன நிகழ்விலும் பங்குகொள்ளுமாறு அன்போடு அழைக்கின்றோம்.

நன்றி

தங்கள் நல்வரவை நாடும்

01.05.2016 திரு.நா.சிவப்பிரகாசம் குடும்பத்தினர்

## அழைப்பிதழ்களில் இடம்பெறுபவை

அழைப்பிதழ்களின் வகைகளுக்கேற்ப அவற்றின் அமைப்புக்கள் மாறுபடும். எனினும் பின்வரும் அம்சங்கள் அழைப்பிதழ்களில் பொதுவாக இடம்பெறும்.

★ தலைப்பு (என்ன நிகழ்வு என்பதனைக் குறிப்பதாக இருக்கும்)
★ விளிப்பு
★ நிகழ்வு நடைபெறுவது தொடர்பான விபரங்கள்
  திகதி
  நேரம்
  இடம்
★ அழைப்போர் தொடர்பான விபரங்கள்
  பெயர் (தனிநபர்/பதவி)
  முகவரி
  தொலைபேசி இலக்கம்
★ திகதி (அழைப்பு அனுப்பப்படும் திகதி)

அழைப்பிதழ்கள் கவர்ச்சிகரமாகவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் அமைவது சிறப்பானதாகும்.

## பயிற்சி

குழுக்களாகச் செயற்பட்டு பின்வரும் நிகழ்வுகளுக்குரிய அழைப்பிதழ் களைத் தயாரிக்கவும்.

★ பாடசாலை வருடாந்த இல்ல மெய்வல்லுனர்போட்டி
★ நூல் வெளியீட்டு விழா
★ புதிய கட்டடத்திற்கான அடிக்கல் நாட்டுவிழா
★ பிறந்தநாள் வைபவம்
★ திருமணம்

# 11 சொல்லின் இசை

முதல்முதலில் மனிதர்கள் பேசினார்களா? பாடினார்களா? முதல்முதலில் பேசினார்கள் என்றுதான் பலரும் எண்ணுகிறார்கள். அதன் பிறகு பாடக் கற்றுக்கொண்டார்கள் என்றும் எண்ணுகிறார்கள். ஆனால் உண்மை அது அல்ல. நாம் பேசக் கற்றுக்கொண்டு நெடுங்காலம் ஆனபிறகுதான் பாடக் கற்றுக்கொள்கிறோம். அதனால் பழங்காலத்து மனிதர்களும் அப்படியே முதலில் பேசவும் பிறகு பாடவும் கற்றுக்கொண்டிருப்பார்கள் என்று எண்ணுவது பொருந்தாது. பாடுவது என்றால், இராகமும் தாளமும் அமைத்து, இசை இலக்கணப்படி பாடுவது மட்டும் அல்ல. மனம் போனபடி ஒலியை நீட்டி, ஆனால் இனிமையாக, உருக்கமாகப் பாடினால் போதும். அதுவும் பாட்டுத்தான். நாட்டுப்புறங்களில், காட்டிலும் மேட்டிலும் ஓடி உழைக்கும் சிறு பிள்ளைகள், மனம் போனபடி நீட்டி நீட்டிப் பாடுகிறார்கள். அவற்றை எல்லாம் பாட்டு அல்ல என்று சொல்லி விட முடியாது. இசை இலக்கணம் தெரியாத காரணத்தால், பாட்டும் தெரியாது என்று சொல்லிவிட முடியாது. குயிலுக்கு இசை இலக்கணம் தெரியாது. ஆனால் அதன் ஒலி, பாட்டு என்றுதான் சொல்லப்படுகிறது.

இந்தக் கருத்தோடு பார்த்தால், யார்க்கும் இயற்கையாகப் பாட்டுத் தெரியும் என்றுதான் சொல்ல வேண்டும். திருத்தமாகப் பேசுவதற்கு முன்னமே பாட்டு உண்டு என்று சொல்ல வேண்டும். மூன்று நான்கு வயதுக் குழந்தை அம்மாவிடம்போய், ஏதாவது வேண்டும் என்று கேட்கிறது. அப்போது ‘அம்மா கொடு’ என்று புத்தகத்தில் படிப்பதுபோல் கேட்பதில்லை. ஊ கால் ஆட்டிக்கொண் டும் கொஞ் சி அழுது கொண் டும் சொற் களை நீட்டி நீட்டி, ‘அம்மா அஆ, கொடூஉஉ’ என்று கேட்கிறது. அவை எல்லாம் பாட்டுத்தான். வளர்ந்த பிறகு அந்தப் பாட்டை எல்லாம் மறந்துவிடுகிறது. பேசுவதிலே அக்கறையாக ஈடுபடுகிறது. அதனால் பாட்டை மறந்து விடுகிறது. மிகப் பழங்காலத்து மக்களும் அப்படித்தான். அவர்களும் சொற்களை நீட்டி நீட்டிப் பாட்டுப் போல் ஒலித்துக்கொண்டிருந்தார்கள். நாகரிகம் வளர்ந்த பிறகு, அந்த வழக்கத்தை விட்டுவிட்டு, ஒலிகளை அளவோடு நிறுத்திப் பேசத் தொடங்கினார்கள்.

ஆனாலும் இசையை அடியோடு துறந்துவிட மனிதனால் முடியவில்லை. காரணம் என்ன? மனிதனுடைய செவி ஒழுங்கான நயமான ஒலியைக் கேட்க விரும்புகிறது. அதற்குக் காரணம் மனிதனுடைய உடம்பே. உடம்பில் இரத்த ஓட்டம், நுரையீரலின் வேலை, இதயத்தின் தொழில் முதலிய எல்லாம் ஒருவகை ஒழுங்குமுறையோடு நடைபெறுகின்றன. அதனால் செவிநரம்புகளும் ஒழுங்கான ஒலியைக் கேட்கவே விரும்புகின்றன. ஆகையால், இசையில் பயிற்சி இல்லாதவர்களும் ஒழுங்கான ஒலிகளால் அமைந்த சொற்களைக் கேட்க விரும்புகிறார்கள். அப்படிப்பட்ட சொற்களையே பேசவும் விரும்புகிறார்கள்.

நாம் பல வாக்கியங்களைப் பழமொழிகள் என்று சொல்கிறோம். 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்', 'கிட்டாதாயின் வெட்டென மற', 'யானைக்கு ஒருகாலம், பூனைக்கு ஒரு காலம்', 'யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே' முதலான பழமொழிகளை வழங்குகிறோம். என்னென்னவோ கற்றுக்கொண்டு மறந்துவிடுகிறோம். ஆனால் மறக்க வேண்டும் என்று நாமாகப் பாடுபட்டாலும் இந்தப் பழமொழிகளை மறக்க முடியவில்லை. காரணம் என்ன? இந்தச் சொற்களில் உள்ள இசை தான் காரணம். ஒருவகை ஒலி, நயமாக ஒழுங்காகத் திரும்பி வருகின்றது. இந்தப் பழமொழிகளை வாய் விட்டுச் சொல்லிப் பார்த்தால், ஒழுங்கான ஒலிமுறை அமைந்திருப்பதை உணரலாம். இதுதான் சொற்களின் இசை என்று சொல்லப்படுகிறது. இந்தச் சொற்களின் இசைதான் இவற்றை மறக்காமல் இருக்கச் செய்கிறது.

உலகத்தில் உள்ள எல்லா மொழிகளிலும் பல சொற்கள் இப்படி இசையோடு அமைந்திருக்கின்றன. தமிழ்ச் சொற்களிலும் இப்படிப் பல உண்டு.

இப்படிப்பட்ட சொற்களில், வேண்டும் என்றே இசையை யாரும் அமைக்கவில்லை. பேசும் மக்களின் செவியும் வாயும் தம்மை அறியாமல் இப்படிச் சொற்களில் இசையை அமைத்துவிடுகின்றன.

எடுத்துக்காட்டாக, 'அல்ல' என்பது ஒரு சொல். 'இல்லை' என்பது மற்றொரு சொல். இலக்கணப்படி பார்த்தால், 'இல்லை' என்னும் சொல் 'இல்ல' என்று தான் இருக்கவேண்டும். ஆனால் 'இல்லை' என்று

மாறி அமைந்திருக்கிறது. ‘அல்ல’ என்னும் சொல் ‘அல்லை’ என்று மாறவில்லை. காரணம் என்ன? ‘அல்ல’ என்னும் சொல்லில் முன்னும் பின்னும் ‘அ’- ஒலி இருக்கிறது. அதனால் ஒலி ஒத்துப் போகிறது. ‘இல்ல’ என்று சொன்னால், சொல் முதலில் ‘இ’ யும் முடிவில் ‘அ’-வும் இருப்பதால் ஒத்துப் போவதில்லை. அதனால், கடைசியில் உள்ள ‘அ’, ‘ஐ’யாக மாறிவிட்டது. ‘இ’-யும் ‘ஐ’-யும் ஒத்துப்போகும் ஒலிகள். அதனால், ‘இல்ல’ என்று சொல்வதைவிட, ‘இல்லை’ என்று சொல்வது இனிமையாயிருக்கிறது. இதுபோலவே எத்தனையோ சொற்கள் இனிய ஒலி வேண்டும் என்று மாறி அமைந்திருக்கின்றன.

‘அது’ என்பது பெயர்ச்சொல். ‘கு’ என்பது, உருபு. ‘அது + கு’ = ‘அதுக்கு’ என்று ஆகவேண்டும். ஆனால், இடையிலே ஓர் ஒலியைச் சேர்த்து ‘அதற்கு’ என்று சொல்கிறோம். நாம் + கு = நாம்கு என்று சொல்லாமல், நம்கு என்றும் சொல்லாமல், நமக்கு என்று சொல்கிறோம். அப்படியே, யான்கு, நீகு என்று ஒலிக்காமல், எனக்கு, உனக்கு என்று ஒலிக்கிறோம். மரம் + ஐ = மரமை, குளம் + கு =குளக்கு என்று யாரும் ஒலிப்பதில்லை. மரத்தை, குளத்திற்கு என்று இடையிலே ஒலிகள் சேர்த்து வழங்குகின்றார்கள். இனிய ஒலியாக ஒலிக்கவேண்டும் என்பதை முக்கிய நோக்கமாகக்கொண்டு இவ்வாறு சொற்களில் சில ஒலிகள் சேர்க்கப்படுகின்றன. இவைகளைச் சாரியைகள் என்று இலக்கணம் கற்றவர்கள் சொல்வார்கள். சொற்களில் இசை பொருந்த வேண்டும் என்று முன்னோர்கள் செய்த முயற்சியை இவற்றில் பாருங்கள்.

இப்படிப்பட்ட முயற்சி தமிழ்மொழியில் மட்டும் அல்ல, ஏறக்குறைய எல்லா மொழிகளிலுமே உண்டு. தெலுங்கு மொழியில் சொற்கள் எல்லாம் இனிமையான இசை உடையவை என்று அவர்கள் சொல்கிறார்கள். அதனால்தான் அந்த மொழி தேன்போன்ற மொழி, தேனுகு, தெனுகு, தெலுங்கு என்று பெயர் பெற்றதாகவும் சொல்கிறார்கள். தமிழர்களாகிய நாமும் நம் தாய்மொழியைப் பற்றி இப்படித்தான் சொல்கிறோம். தமிழ் என்றாலே இனிமை என்று பொருள் கூறுகிறோம். ஏறக்குறைய எல்லா மொழியாரும் இப்படியே தம்தம் மொழியைப் பாராட்டிக்கொள்கிறார்கள்.

**– மு. வரதராசன்**

## அரும்பதங்கள்

அக்கறை - விருப்பம்

நயமான - இனிமையான

எண்ணுகிறார்கள் - நினைக்கிறார்கள்

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. மனிதனுக்கு இயற்கையாகவே பாடத்தெரியும் என்பதை எவ்வாறு உணரலாம்?
2. இசையில் பயிற்சி இல்லாதவர்களும் ஒழுங்கான ஒலிகளாலான சொற்களை ஏன் கேட்க விரும்புகின்றார்கள்?
3. இப்பாடத்தில் குறிப்பிடப்படும் பழமொழிகள் எவை?
4. எம்மால் பழமொழிகளை, மறக்கமுடியாமைக்கான காரணம் எதுவென கட்டுரை ஆசிரியர் குறிப்பிடுகிறார்?
5. இப்பாடத்தில் இசையின் முக்கியத்துவம் எவ்வாறு எடுத்துரைக் கப்பட்டுள்ளது?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

உமது பிரதேசத்தில் வழங்கப்படுகின்ற ஓசை இயைபுடைய பழமொழிகளை எடுத்துக்காட்டி அவற்றில் காணப்படும் ஓசை இயைபு தொடர்பில் கலந்துரையாடுங்கள்.

# வாக்கியத்தின் அமைப்பு

வாக்கியத்தின் அமைப்புத் தொடர்பாக, தரம் 7இல் கற்ற விடயங்களை நினைவுபடுத்திக் கொள்வோம்.

★வாக்கியம் எழுவாய், பயனிலை ஆகிய உறுப்புக்களைக் கொண்டிருக்கும். எழுவாய் வாக்கியத்தில் வெளிப்பட்டோ, மறைந்து நின்றோ தொழிற்படலாம்.

★ செயப்படுபொருள் சில வாக்கியங்களில் இடம்பெறும்.

★எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்பவற்றுக்கான அடைமொழிகளும் வாக்கியத்தில் இடம் பெற்றிருக்கலாம்.

கீழே தரப்பட்டுள்ள வாக்கியத்தைக் கவனியுங்கள்.

உயர்தர மாணவர்கள், வண்ணவண்ண ஓவியங்களை அழகாக வரைந்திருந்தார்கள்.

| | | |
|---|---|---|
| ***எழுவாய்*** | - | மாணவர்கள் |
| ***எழுவாய் அடைமொழி*** | - | திறமையான |
| ***பயனிலை*** | - | வரைந்திருந்தார்கள் |
| ***பயனிலை அடைமொழி*** | - | அழகாக |
| ***செயப்படுபொருள்*** | - | ஓவியங்கள் |
| ***செயப்படுபொருள் அடைமொழி*** | - | வண்ண வண்ண |

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களின் உறுப்புக்களை இனங்கண்டு கீழேயுள்ள அட்டவணையைப் பூர்த்தி செய்யுங்கள்.

1. திறமையான கமலன் ஆழமான குளத்தை விரைவாக நீந்திக் கடந்தான்.
2. யேசுதாஸன் தனது சிறிய கடையை அழகாகப் புதுப்பித்திருக்கிறார்.

3. எமது கிராமத்தில் கண்ணைக் கவரும் பூஞ்சோலைகள் நிறைந்துள்ளன.

4. மௌறூஸ் தனது பாடசாலை மாணவர்களை சுற்றுலாவிற்காக நுவரெலியாவுக்கு அழைத்துச் செல்லவுள்ளார்.

5. இனியவன் செவிக்குணவான இசையை இரசிப்பதில் எப்போதும் மிகுதியான ஆர்வமுடையவன்.

| எழுவாய் | எழுவாய் அடைமொழி | செயப்படுபொருள் | செயப்படுபொருள் அடைமொழி | பயனிலை | பயனிலை அடைமொழி |
|---|---|---|---|---|---|
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |
| | | | | | |

## திரிசொல் II

### பல பொருள் குறித்த ஒரு சொல்

★ அரி பூக்களின் தேனையுண்டது.

★ அரி இந்துக்களின் காத்தல் தெய்வமாவார்.

★ தச்சன் பலகையை அரிந்தான்.

★ மாருதப்புரவீகவல்லி அரி முகம் நீங்கினாள்.

★ அரசன் அரியணையில் அமர்ந்திருக்கிறான்.

மேலே தரப்பட்ட உதாரணங்களில் அரி என்னும் ஒரு சொல் முறையே வண்டு, திருமால், அரிதல், குதிரை, சிங்கம் முதலிய பல்வேறு பொருள்களைத் தந்து நின்றது. இவ்வாறு பல பொருளைக் குறிக்கும் ஒரு சொல்லையே பல பொருள் குறித்த ஒரு சொல் என்போம். அவ்வாறான சொற்கள் கீழே தரப்படுகின்றன.

அணி : அழகு, ஒழுங்கு, ஆபரணம், கருவி, அணிதல்
அத்தி : எலும்பு, கடல், ஒருவகை மரம், பாதி, இரப்போன்
அளி : அன்பு, வண்டு,மது, குளிர்ச்சி, அளித்தல்
அரண் : மதில், கோட்டை, காவல், அழகு
இசை : புகழ், சங்கீதம், இனிமை, ஓசை, கொடை, இணக்கம்
கவி : குரங்கு, கவிஞன், பாட்டு, ஆசு, சித்திரம்
ஒளி : அறிவு, பிரகாசம், மறை, புகழ், அழகு, பெருமை
கலி : அம்பு, ஒலி, கடல், இருமல், போர், வஞ்சகம்
மதி : சந்திரன், அறிவு, மாதம், மதித்தல், ஞாபகம்
பதி : இடம், அரசன், கணவன், இறைவன், ஒளி, வீடு
நாகம் : மலை, பாம்பு, யானை, வான், மேகம்
பார் : பூமி, பார்த்தல், அடுக்கு, கற்பாறை, நிலம்
பணி : பாம்பு, தொண்டு, கட்டளை, ஈகை
பாடு : துன்பம், பக்கம், கடமை, இடம், பாடுதல்
மாற்றம் : சொல், பகை, விடை, பரிகாரம், வஞ்சினமொழி

## பயிற்சி

**1.** பின்வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள சொல் உணர்த்தும் பொருளைத் தெரிவு செய்து கோடிடுக.

1. மதம் கொண்ட **கரி** பொங்கினால் காடு கொள்ளாது : இதில் **கரி** என்பது
(கருமை, யானை, பாம்பு, இருள்)

2. இன்பமும் துன்பமும் சுழலும் **சக்கரம்** : இதில் **சக்கரம்** என்பது
(கடல், சக்கரப்படை, வட்டம், சில்லு)

3. கோவலனைக் காணாத கண்ணகி **அகம்** நொந்து அழுதாள் : இதில் **அகம்** என்பது
(மனம், வீடு, உட்புறம், காதல்)

4. போரில் **சேயை** இழந்த தாய் கதறினாள் : இதில் **சேய்** என்பது
(வீரன், சிவப்பு, மகன், மனை)

5. **வளை**க்குள் உட்புகுந்தது பாம்பு : இதில் **வளை** என்பது
(வளையல், வீட்டுவளை, சங்கு, புற்று)

**2.**கீழே தரப்பட்ட சொற்கள் உணர்த்தும் வேறுபட்ட இரண்டு பொருள் தரும் சொற்களை எழுதுக

| | |
|---|---|
| 1. கானம் | 6. வாரம் |
| 2. பதம் | 7. வேழம் |
| 3. தானம் | 8. வாளி |
| 4. ஏமம் | 9. முருகு |
| 5. மால் | 10. சங்கம் |

# 12 சுதந்திர கீதம்



வாழ்க இலங்கை மணித்திரு நாடு
வாழிய வாழியவே
வாழ்க சுதந்திரம் வாழிய அன்னை
மணிக்கொடி வாழியவே.

வாழ்க சுதந்திர நாடுகளோ டன்னை
சமமே வாழியவே
வாழ்க சகோதர ஆசிய நாடுகள்
தோழமை வாழியவே.

பன்னூ றாண்டு மறைந்த சுதந்திர
பானு உதித்ததிங்கே
அன்னை சுயாட்சி ஒளியில் விளங்கும்
அழகில் மகிழ்ந்திடுவோம்.

தெங்கொடு பனைநறுந் தேமா தோடை
செந்நெல் வாழைபலா
பொன்பொலி தேயிலை றப்பர் செழிக்கும்
பொன்னா டெம்நாடே.

தென்றற் பூம்பொழில் செந்தமி ழருவி
திருமலை மணிமுத்தம்
குன்றொத் தனஉயர் கொம்பன் யானைக்
குலமுடையா ளெங்கள்தாய்.

பொங்கும் போர்த்துக் கேயர் ஒல்லாந்தர்
புல்லடிமைத் தொழில்போய்
ஆங்கில ராட்சியில் இங்கினி தடைந்தாள்
அன்னை சுதந்திரமே.

செயராம நாதன், அருணா சலம்ஜேம்ஸ்
பீரிஸ், தம்பிமுத்தன்
செனநா யகமுதற் புதல்வோர் ஈந்திடு
சுதந்திரம் வாழியவே.

சமூக பொருளா தார சமத்துவம்
தந்தென்றும் வாழியவே
சாதி மதப்பெரும் பூசல் தணிந்தன்னை
சாந்தியில் வாழியவே.

சிங்களர் தமிழர் முஸ்லிம் ஆதிய
செல்வநன் மக்களொன்றாய்
மங்கள அன்னை மணிக்கொடி தாங்கி
வாழ்த்தி வணங்கிடுவோம்.

மணமலி ஈழ மணித்திரு மாதே
மக்கள் நமஸ்காரம்
குணதிசை அழகு ராணியெம் தாயே
கோடி நமஸ்காரம்.

அன்பறி வாண்மை பொன்புகழ் ஈகை
அருளொடு வாழியவே
இன்ப சமாதானம் உலகெங்கு மோங்க
இனிதன்னை வாழியவே.

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| தோழமை | - | நட்புறவு |
| பானு | - | சூரியன் |
| அருவி | - | ஆறு |
| பொழில் | - | சோலை |
| புல் | - | இழிவான |
| பூசல் | - | சண்டை |
| ஆதிய | - | ஆகிய |
| குணதிசை | - | கிழக்குத்திசை |



### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இப்பாடலில் குறிப்பிடப்படும் சுதந்திர வீரர்கள் யாவர்?
2. இலங்கையை ஆட்சி செய்த வெளிநாட்டவர்கள் யாவர்?
3. இப்பாடலில் கூறப்படும் விழுமியக்கருத்துக்கள் எவை?
4. இப்பாடலில் இடம்பெறும் உவமை உருவக அணிகளைக் குறிப்பிடுக.
5. இலங்கை மணித்திருநாட்டின் வளங்களாக கவிஞர் எவற்றைக் குறிப்பிடுகின்றார்

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

எமது நாட்டின் சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட சிலர் தொடர்பான விடயங்களைத் தேடியறிந்து சிறியதொரு ஒப்படையினைத் தயாரியுங்கள்.

# வாக்கிய இயைபு

| | | | |
|---|---|---|---|
| ஓவியத்தை | வரைந்தான் | அழகிய | சுமதி |
| வரைந்தனர் | அன்வர் | வரைந்தது | வரைவேன் |

மேலே தரப்பட்டுள்ள சொற்களிலிருந்து பொருத்தமானவற்றை மட்டும் தெரிந்தெடுத்து ஒரு வாக்கியம் அமையுங்கள். மாணவன் ஒருவன் பின்வருமாறு வாக்கியம் அமைத்தான்.

அன்வர் அழகிய ஓவியத்தை வரைந்தனர்.

மேலே எழுதப்பட்ட வாக்கியம் பொருத்தமானதா? தரம் 6, 7 வகுப்புக் களில் கற்றவற்றை நினைவுபடுத்திச் சிந்தியுங்கள்.

★ மேலுள்ள வாக்கியத்தின் எழுவாய் அன்வர்.
  அன்வர் என்பது உயர்திணை, ஆண்பால், ஒருமை, படர்க்கைக்குரிய பெயர்ச்சொல் ஆகும்.

★ மேலுள்ள வாக்கியத்தின் பயனிலை வரைந்தனர்.
  வரைந்தனர் என்பது உயர்திணை, பலர்பால், பன்மை, படர்க்கைக்குரிய வினைச்சொல் ஆகும்.

★ ஆண்பால் ஒருமைக்குரிய எழுவாய்க்கு பலர்பால் பன்மைக்குரிய பயனிலை பொருத்தமானதா?
  **இல்லை**
  அதனால் மேலுள்ள வாக்கியம் தவறானது ஆகும். இதனை வழுவான வாக்கியம் என்போம்.

★ உயர்திணை, ஆண்பால் ஒருமை, படர்க்கைக்குரிய எழுவாய்க்கு உயர்திணை, ஆண்பால் ஒருமை, படர்க்கைக்குரிய வினைச் சொல்லே பொருத்தமான பயனிலையாக அமையும். மேலேயுள்ள சொற்தொகுதியில் 'வரைந்தான்' என்ற சொல்லே பொருத்த மானதாகும். வரைந்தான் என்ற சொல்லைப் பயன்படுத்தி வழுவற்ற வாக்கியத்தினை அமைப்போம்.

**அன்வர் அழகிய ஓவியத்தை வரைந்தான்.**

**ஒரு வாக்கியத்தில் எழுவாயும் பயனிலையும் திணை, பால், எண், இடம் என்பவற்றால் ஒன்றிற்கு ஒன்று இயைபுபட்டு அமைதல் வேண்டும். அல்லாவிடின் வாக்கியம் வழுவானதாகக் கருதப்படும்.**



## பயிற்சி

**1.** கீழே தரப்பட்டுள்ள வினையடிகளைப் பொருத்தமான வினைச் சொற்களாக மாற்றி வாக்கியங்களைப் பூர்த்தி செய்யுங்கள்.

செல், வா, நீந்து, அடுக்கு, பாடு

1. நீச்சல் வீரர்கள் போட்டியில் பங்கேற்று வேகமாக ..........................
2. அனைவரும் வியக்கும் வண்ணம் கமலா இனிமையாக ..................
3. நூலகர் நூல்களை வரிசை வரிசையாக ................................
4. நாங்கள் எல்லோரும் கதிர்காமத்திற்கு .............................
5. நீங்கள் என்னுடன் மைதானத்திற்கு ........................

**2.** அடைப்புக்குறிக்குள் உள்ள பொருத்தமான சொல்லினைத் தெரிவுசெய்து வழுவற்ற வாக்கியத்தினை எழுதுங்கள்.

1. (மாணவன்/மாணவர்கள்) சிரமதானத்தின் மூலம் குளத்தினைத் துப்புரவு செய்தனர்.
2. மனிதர்கள் கேட்டு வியக்கும்படியாக குயில்கள் (கூவுகின்றன/ கூவுகின்றனர்)
3. ஜனாதிபதியால் அடிக்கல் நாட்டி ஆரம்பிக்கப்படுகின்ற கட்டடம் விரைவில் கட்டி (முடிக்கப்படுகின்றன/முடிக்கப்படும்)
4. அதிகளவான விமானங்கள் தரையிறங்கக் கூடியதாக எங்கள் விமான நிலையம் (புனரமைக்கப்படும்/ புனரமைப்பார்கள்)
5. வயலுக்கு வாய்க்கால் வழியாக தண்ணீர் (இறைக்கின்றது/இறைக் கின்றனர்)

# மரபுப்பெயர்கள் I

எப்பொருளை எச்சொல்லால் எவ்வாறு ஆன்றோர் தொன்று தொட்டு வழங்கி வந்தனரோ அப்பொருளை அச்சொல்லால் அவ்வாறே வழங்குவது **மரபு** ஆகும். தமிழ்மொழியில் அவ்வாறு வழங்கும் பல்வேறு மரபுப் பெயர்கள் காணப்படுகின்றன.

## இளமைப்பெயர்

| | | |
|---|---|---|
| ஆடு | - | குட்டி |
| ஆமை | - | பிள்ளை, பார்ப்பு |
| நாய் | - | பறள், குருளை, குட்டி |
| பூனை | - | குட்டி, பறள், பிள்ளை |
| குரங்கு | - | குட்டி, பறள், மகவு |
| புலி | - | பறள், குருளை, குட்டி |
| சிங்கம் | - | குருளை |
| யானை | - | போதகம், கன்று |
| கிளி | - | பிள்ளை, பார்ப்பு |
| தவளை | - | பேத்தை, குஞ்சு |
| பருந்து | - | பார்ப்பு |
| நெல் | - | நாற்று |
| பனை | - | வடலி |
| புகையிலை | - | நாற்று, கன்று |
| வாழை | - | கன்று, குட்டி |

## பயிற்சி

பின்வருவனவற்றின் இளமைப்பெயர்களைத் தேடியறிந்து எழுதுக.

1. கமுகு -
2. பலா -
3. தென்னை -
4. அணில் -
5. எலி -
6. கீரி -
7. பாம்பு -
8. கோழி -
9. ஓநாய் -
10. மான் -

# 13 பாலித்திட வேண்டுமம்மா

சேந்தனின் சோர்வுக்கு நான் காரணம் தேடிக் கொண்டிருந்தேன். சாதாரணமான உடற்சோர்வாக இருக்கக்கூடுமென்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் அவ்வாறு இல்லை என்பதை வழமைக்கு மாறான அவன் நடத்தைகள் வெளிக்காட்டிக் கொண்டிருந்தன.

''நேற்றைய தினம் பாடசாலையிலிருந்து வந்ததிலிருந்தே சேந்தன் உற்சாகமாக இல்லை'' என்றுதான் இரவு சாம்பவி சொன்னாள். நெடுநேரம் பிரயாணம் செய்துவந்ததில் உடம்பு அலுப்பாக இருந்தாலும், நான் அதைப் பொருட்படுத்தவில்லை. கொழும்பிலிருந்து திரும்பிவந்த என்னைக்கூட நேற்றிரவு அவன் உற்சாகமாக வரவேற்கவில்லை என்பதையும் இப்போது நினைத்துப் பார்க்கிறேன்.

காலையிலும் கூட, ஏழுமணி அளவில்தான் சாம்பவியின் வற்புறுத்தலின் பின் அவன் படுக்கை விட்டெழுந்தான். படுக்கையில் எழுந்திருந்து இரு கைகளிலும் தன்முகத்தைத் தாங்கி, எதையோ யோசித்துக் கொண்டிருந்தான். இவனின் கோலம் எனக்கு வியப்பைத் தந்தது.

''சேந்தன்! என்ன யோசனை?''

என் குரல்கேட்டு முதலில் அவன் சிறிது அதிர்ந்திருக்க வேண்டும். என்னை ஒருமுறை நிமிர்ந்து பார்த்துவிட்டு ஒன்றும் பேசாமலிருந்தான்.

''அழுதிருப்பானோ?''

அழுதிருக்கவேண்டும் என்பதற்கு அத்தாட்சியாக கன்னங்கள் இரண்டும் வீங்கி இருந்தன.

''என்னவாக இருக்கும்? சேந்தனைக் கவனிக்காமல் இவள் என்ன செய்கிறாள்?''

சாம்பவிமீது கோபமாகக்கூட வந்தது.

சேந்தன் எங்களைப் பொறுத்தவரை தவமிருந்து பெற்றபிள்ளை. திருமணமாகி எட்டு ஆண்டுகளின் பின் பிறந்தவன்மீது நாங்கள் உயிரையே வைத்திருந்தோம்.

செல்லப்பிள்ளை என்றாலும் சேந்தனின் செய்கைகள் வரம்பு மீறிவிடக் கூடாது என்பதில் சாம்பவி கவனமாக இருந்தாள். ஒழுங்கான வேலைப் பழக்கத்தை சேந்தனிடம் வளர்ப்பதில், அவள் கரிசனை எடுத்துக் கொண்டாள்.

காலையில் ஆறுமணிக்கு நித்திரை விட்டெழுந்து இரவு பத்து மணிக்கு நித்திரைக்குச் செல்லும்வரை செய்யவேண்டியனவற்றை எல்லாம் சேந்தனுக்கு ஒழுங்காகச் சொல்லிக்கொடுத்தாள்.

எல்லாமே ஒழுங்காக நடந்தன. சாம்பவியின் அன்பு, சேந்தனுக்குக் குறைவில்லாமல் கிடைத்ததில் அவன் ஒழுங்கு தவறாமல் இருந்தான்.

ஆறாம் வகுப்புப் படிக்கும் பிள்ளைக்கு சாம்பவி விதித்த இந்த ஒழுங்கும் கட்டுப்பாடு ம் சற் று அதிகம் என்றுதான் என் மனம் அடித்துச் சொல்லும். சில வேளைகளில் அவளிடம் இதை எடுத்துச் சொல்லி ''ஏச்சு'' வாங்கியதும் உண்டு.

'சேந்துக்குட்டி! எழும்பி, ரீ குடிக்க வாடீ'
என்னிடம் ஒன்றும் பேசாதவன் அம்மாவின் குரல் கேட்டு 'பிரஸை'யும் பசையையும் எடுத்துக்கொண்டு தண்ணீர்த் தொட்டியடிக்குச் செல்கிறான். ஆனாலும் அவனிடம் 'உசார்' இல்லை.

'காய்ச்சலாக இருக்குமோ?' என்று நினைத்துக்கொண்டு அவனைப் பின்தொடர்ந்து சென்று உடம்பைத் தொட்டுப்பார்க்கிறேன். உடல் வெப்பநிலையில் மாற்றமில்லை.

'அப்படியென்றால் இவனுக்கு என்ன வந்தது?'

இவனிடம் விசாரிப்பதைவிட சாம்பவியிடமே கேட்டுவிடுவது நல்லது என்று எண்ணியபடியே குசினிப்பக்கம் விரைகிறேன்.

''சாம்பவி! சேந்தனைக் கவனிச்சாய்தானே. ஏன் ஒரு மாதிரியா இருக்கிறான்?''

''நானும் கவனிச்சன். எழும்பினவுடனை பார்த்தனான். நாடிக்குக் கை குடுத்துக்கொண்டு கடுமையா யோசிச்சுக் கொண்டிருந்தவன். ஏதோ கவலைப்படுறான் போலை. முகம் கழுவிக்கொண்டு வரட்டுக்கும். என்னெண்டு கேட்டுப் பார்ப்பம்''

சாம்பவி என்னை முந்திக்கொண்டாள். முகம் கழுவிக்கொண்டு வந்தவனைத் தன்னுடன் சேர்த்தணைத்து ஈரமான முகத்தையும் துவாயால் துடைத்து விடுகிறாள்.

''ஏன் அப்பன் லீவு விட்டதுக்குப் பஞ்சியாயிருக்கே?''

சேந்தன் ஒன்றும் பேசாமல் நிற்கிறான்.

''ஏன்? ஏதும் பிரச்சினையே?''



நான் நேரடியாகவே கேட்கிறேன்.

நேரிடையாகவே நான் இப்படிக் கேட்டது சாம்பவிக்குப் பிடிக்கவில்லை. 'நீங்கள் ஒன்றும் பேசாமல் இருங்கோ' என்று கண்சாடையால் சொல்கிறாள்.

சாம்பவி கொடுத்த தேநீர்க்கோப்பையைக் கையில் வைத்துக் கொண்டு அதனை அருந்தாது, எதிரிலிருந்த சுவரையே வெறித்து நோக்கிக் கொண்டிருக்கும் சேந்தனைக் குறித்து எனக்குக் கவலையாக இருக்கிறது.

இவனுக்கு உடற்சோர்வு மட்டுமில்லை. இவனின் உளமும் சோர்வுற்றிருக்கிறது. இவனின் உளச்சோர்வுக்குக் காரணம் கண்டறிந்து உடனடியாக பரிகாரம் காணவேண்டும். இல்லாவிடின் இதுவே இவனிடத்தில் உளநெருக்கீட்டை ஏற்படுத்தலாம். நெருக்கீடு வலுவடைந்து மனவடுவைக் கூட ஏற்படுத்தலாம். அதன்பின்பு இவனிடத்தில் உளவளத்துணை நடவடிக்கைகள் பயனற்றுப் போகும். இறுதியில் எஞ்சப்போவது உளச் சிகிச்சை மட்டும் தான்...

எனது துறைசார் அறிவு குறித்த என் உணர்வு விழித்துக்கொண்டு என்னை எங்கெல்லாமோ இழுத்துச் சென்று அலைக்கழிக்கிறது. எப்போதுமே நான் இப்படிக் குழம்பியதில்லை. சொந்த இரத்த சம்பந்தம் என்று வருகிறபோது, இப்படித்தான் உணர்வின் முன்னால் அறிவு வலியிழந்து விடுமோ?

சேந்தனின் கவலைக்குக் காரணம் அறியவேண்டும். அவன் என்றுமே இப்படி இருந்ததில்லை. அவனின் உடற்சோர்வையும் உளச்சோர்வையும் குறைக்கின்ற வகையில் அவனுக்கு உளவளத்துணை வழங்கவேண்டும்.

எனது கலக்கத்தை சாம்பவியிடமே சொல்லிக் கொள்கிறேன். அவள் தனக்குள் சிரித்துக் கொள்கிறாள்.

''நீங்கள் 'கவுன்சிலர்' என்றால் உங்களோடையே அதை வைச்சுக் கொள்ளுங்கோ. என்ரை பிள்ளையிலை ஒன்றும் சோதிக்க வேண்டாம். என்ரை பிள்ளையை நான் கவனிச்சுக் கொள்ளுவன்...''

சாம்பவி சொல்வதுபோல என்னால் இருக்க முடியாது. சேந்தனின் நடத்தைகள் எல்லாமே உளநெருக்கீட்டின் குணங்குறிகளை

வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றன. மெல்ல மெல்ல அவனை இதிலிருந்து விடுவிக்க வேண்டும்.

சாம்பவி உளவளத்துணைபற்றி எதுவுமே அறியாதவள். இவளுக்கு எப்படி விளங்கவைப்பது?

உளவளத்துணை செயற்பாட்டின் படிநிலைகள் எவை பற்றியும் அறிந்து கொள்ளாத சாம்பவியால், சேந்தனின் பிரச்சினையைத் தீர்த்து வைப்பது சாத்தியப்படக் கூடியதா என்று நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

வழமையாக சேந்தனுக்கு தட்டொன்றில் உணவு எடுத்துவைப்பவள் இன்று வழமைக்கு மாறாகத்தானே உணவூட்டிக் கொண்டிருந்தாள். மெல்ல மெல்லக் கதை கொடுத்தாள்.

''ஏன் அப்பன், மாக்ஸ் ஏதும் குறைஞ்சு போச்சே?. உன்ரை றிப்போட்டையும் காட்டேல்லை. மாக்ஸ் குறைஞ்சால் பரவாயில்லை. அடுத்தமுறை எடுக்கலாம்தானே...''

சேந்தன் 'இல்லை' என்று தலையாட்டினான்.

''அப்பிடியெண்டா ரீச்சேர்ஸ் ஆரும் அடிச்சவையே''

இதற்கும் மௌனம்.

சாம்பவி கேட்டுக்கொண்டிருக்கும்போதே சேந்தனின் கண்களிலிருந்து 'பொல பொல' என்று கண்ணீர் வடிகிறது. நான் பொறுமையாக இருந்து கவனித்துக்கொள்கிறேன். சேந்தனின் தலையை வருடியவாறே அவனின் கண்ணீரைத் தன் சேலைத் தலைப்பினால் துடைத்து, சாம்பவி சிறிது நேரம் மௌனமாக இருக்கிறாள்.

''விளையாடுறதும் சண்டைபிடிக்கிறதும் பிள்ளையள் செய்யிறது தானே... அதுக்கேன் கவலைப்பட வேணும், உடனை மறந்து போகோணும்...''

சாம்பவியின் வார்த்தைகள் சேந்தனுக்கு நம்பிக்கை அளித்திருக்க வேண்டும். நேற்று நடந்ததைச் சொல்லத் தொடங்கினான். சாம்பவி இடையிடையே 'ம்' சொல்லி அவனை ஊக்கப்படுத்திக் கொண்டிருந்தாள்.

‘‘இன்ரேவல் நேரம்... நானும் மயூரனும் ஒளிச்சு விளையாடிக் கொண்டிருந்தனாங்கள்... அவன் கதவுக்குப் பின்னாலை ஒளிச்சிருந்தவன்... அது தெரியாமல். நான் கதவைச் சாத்திக்கொண்டு ஓடினன். கதவிடைக்குள்ளை அவன்ரை விரல் நெரிஞ்சு போச்சு...’’

தயங்கித்தயங்கி சேந்தன் சொல்லி முடித்தபோது, சாம்பவி சமாதானம் சொன்னாள்.

‘‘அது நீ தெரிஞ்சு செய்யேல்லைத்தானே அப்பன்... மயூரன் உன்ரை சினேகிதன் தானே... நீ அவனிட்டை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளலாம் தானே...’’

சேந்தன் சிறிது வெம்பத் தொடங்கினான்.

‘‘மயூரன்ரை விரல் நகம் வெடிச்சுப்போச்சம்மா... ரத்தம் நல்லா வந்தது.. பிறிஃபெக்ற் அண்ணா ஒருவர் வந்து அவனைக் கூட்டிக்கொண்டு போயிட்டார்... சேர் ஆரும் வந்து எனக்கு அடிப்பினமோ எண்டு எனக்குப் பயமா இருந்தது....’’

‘‘ஆரும் வந்து அடிச்சவையோ?’’

சாம்பவியின் கேள்விக்கு கண்ணீர் உகுத்துக் கொண்டே, ‘இல்லை’ என்று சேந்தன் தலை அசைத்தான்.

‘‘அப்பிடியெண்டா ஏன் அப்பன் அழுறாய்...?’’

‘‘மயூரன், தான்தான் கதவுக்குள்ளை கையை வைச்சுக் கதவைச் சாத்தினதாச் சொன்னவனாம்.. பிறிஃபெக்ற் அண்ணாவைக் கேட்டனான், சொன்னவர்...’’

‘‘விரல்லை காயமொண்டும் பெரிசா இல்லையே..’’

‘‘பிறிஃபெக்ற் அண்ணா, கிட்டவுள்ள டொக்ரரிட்டை கூட்டிக்கொண்டு போனவராம். விரல் முறிஞ்சிருக்குமோ எண்டு பார்க்க. ‘எக்ஸ்றே’ எடுக்க ஆஸ்பத்திரிக்கு அனுப்பிப்போட்டினமாம். விரல் முறிஞ்சால் அவனாலை எழுதேலாது தானே? அதுதான் கவலையா இருக்கம்மா..’’

சேந்தனை இழுத்தணைத்துக்கொண்டே சாம்பவி சொன்னாள்,

''அப்பா, நீ தெரியாமல் செய்த பிழை தானே... நாங்கள் எங்கடை பிள்ளையாருக்கு ஒரு நேர்த்தி வைப்பம். மயூரனுக்கு கைவிரல் முறியாமல் பிள்ளையார் காப்பாற்றினார் எண்டால் வாற வெள்ளிக்கிழமை ஒரு பானை பொங்கல் பொங்குவம்..''

சேந்தனின் கண்களில் நம்பிக்கை துளிர்த்தது போலிருந்தது. சாம்பவி தொடர்ந்தாள்.

''இப்ப மயூரன் வீட்டுக்கு 'போன்' பண்ணுவம். அவன்ரை அம்மாவுக்கு நடந்ததைச் சொல்லுவம்...''

சொல்லிக்கொண்டே அவள் தொலைபேசியை நெருங்கும்போது, மணி ஒலித்தது. தொலைபேசியை எடுத்துப்பேசியவள் சேந்தனைச் சத்தமாக அழைத்தாள்.

''சேந்தன் ஓடிவாங்கோ. மயூரன் கதைக்கிறார். விரலிலை சின்னக்காயம் தானாம். எலும்பொன்றும் முறியேலையாம்...''
சேந்தன் துள்ளிக்குதித்துக்கொண்டு ஓடினான்.

பிள்ளையாரப்பா எனக்குள் புகுந்து என்னைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது!!!

**– த. கலாமணி**
'பாட்டுத்திறத்தாலே'

## அரும்பதங்கள்

அலுப்பு - சலிப்பு
தவமிருந்து - நீண்ட காலம் வழிபட்டு
கரிசனை - பரிவு கலந்த அக்கறை
கவுன்சிலிங் - உளவள ஆலோசனை
பரிகசித்தல் - கேலிசெய்தல்

குசினி - சமையலறை

அசண்டை - அசட்டை /ஒன்றையும் பொருட்படுத்தாது இருத்தல்

ஆய்ந்தறிந்து - ஆராய்ந்தறிந்து

கதை கொடுத்தல் - பேச்சுக் கொடுத்தல்

பிறிபெக்ற் - மாணவர் தலைவர்

பரிகாரம் - மாற்று உபாயம்

பாலித்தல் - காத்தல் செய்தல்

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சேந்தன் மனச் சோர்வுற்று இருந்தமைக்கான காரணம் என்ன?
2. மனச்சோர்வுற்றிருந்த சேந்தனது நடத்தைகள் கதையில் எவ்வாறு சித்திரிக்கப்பட்டுள்ளன?
3. சேந்தனின் கவலையைப் போக்க சாம்பவி கூறிய பரிகாரம் என்ன?
4. சேந்தன், மயூரன் ஆகியோருக்கிடையிலான நட்பு பற்றி யாது நினைக் கிறீர்கள்? அவ்வாறு நினைப்பதற்கான காரணம் என்ன?
5. இச்சிறுகதையில் வெளிப்படும் விழுமியக் கருத்துக்கள் யாவை?
6. சாம்பவி ஒரு சிறந்த உளவள ஆலோசகர் - இதனை ஏற்றுக்கொள்வீரா? காரணம் கூறுக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

இந்தச் சிறுகதையில் இடம்பெற்றுள்ள கலைச்சொற்கள் மூன்றினை இனங்கண்டு எழுதிக் காட்சிப்படுத்துங்கள்.

# இணைப்பிடைச் சொல்

★ இணைப்பிடைச் சொல் என்றால் என்ன? என்பது தொடர்பாக தரம் 7 இல் கற்றுள்ளோமல்லவா? அதனை நினைவு படுத்திக் கொள்வோம்.

★ தமிழில் உள்ள பலவகையான இணைப்பிடைச் சொற்களில் **'ஆனால்'** என்ற இணைப்பிடைச் சொல்லின் பயன்பாடு பற்றி, தரம் 7 இல் கற்றுக் கொண்டோம். இங்கு வேறு இரு இணைப்பிடைச் சொற்களைப் பயன்படுத்தத் தெரிந்து கொள்வோம்.

★ கீழே தரப்பட்டுள்ள இருவாக்கியங்களை அவதானியுங்கள்.
***நேற்று முழுவதும் நல்ல மழை பெய்தது.***
***கிணறுகள் நிரம்பவில்லை.***

முதலாம் வாக்கியத்தில் கூறப்பட்ட சம்பவம் நடைபெற்றதால் நடைபெற வேண்டிய சம்பவம், நடைபெறாமையை இரண்டாம் வாக்கியம் எடுத்துக் காட்டுகிறது.
இவ்வாறு முரண்பாடான வாக்கியங்களை இணைப்பதற்கு **'ஆனால்'** என்ற இணைப்பிடைச் சொல்லைப் பயன்படுத்தியிருப்பீர்கள். அதற்கு இணையாக **'எனினும்'** என்ற இணைப்பிடைச் சொல்லையும் பயன்படுத்தலாம்.

***நேற்று முழுவதும் நல்ல மழை பெய்தது எனினும் கிணறுகள் நிரம்பவில்லை.***

மேலும் சில உதாரணங்கள்

***சுமதி கவனத்துடன் படித்தாள் எனினும் அவளால் பரீட்சையில் சித்தியடைய முடியவில்லை.***

***அப்பா நீண்ட காலத்தின் பின்னர் வெளிநாட்டிலிருந்து வருகின்றார் எனினும் அதிக நாட்கள் இங்கு தங்கமாட்டார்.***

★ கீழே இருவாக்கியங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றை அவதானியுங்கள்.
***நேற்று முழுவதும் நல்ல மழை பெய்தது.***
***கிணறுகள் அனைத்தும் நிரம்பிவிட்டன.***

மேலே முதலாம் வாக்கியத்தில் கூறப்பட்ட சம்பவம் நடைபெற்ற காரணத்தால் இரண்டாம் வாக்கியத்திற்குரிய சம்பவம் நடைபெற்றது.

இவ்வாறு ஒன்றோடு ஒன்று தொடர்பான வாக்கியங்களை இணைப்பதற்கு **'ஆகவே'** என்ற இணைப்பிடைச் சொல்லைப் பயன்படுத்த முடியும்.

**நேற்று முழுவதும் நல்ல மழை பெய்தது ஆகவே கிணறுகள் அனைத்தும் நிரம்பிவிட்டன.**

மேலும் சில உதாரணங்கள்

**மாணவர்கள் அதிக கவனமெடுத்துப் படித்தார்கள் ஆகவே சிறந்த பெறுபேறுகளைப் பெற்றுள்ளார்கள்.**

**செந்தூரன் தினமும் உடற்பயிற்சி செய்பவன் ஆகவே அவன் ஆரோக்கியமாக இருக்கின்றான்.**




கீழே தரப்பட்டுள்ள வாக்கியச்சோடிகளை எனினும், ஆகவே என்ற இணைப்பிடைச் சொற்களுள் பொருத்தமானதைப் பயன்படுத்தி இணைக்குக.

1. நாட்டில் சீரற்ற காலநிலை நிலவுகின்றது.
   பாடசாலைகளுக்கு இருநாட்கள் விடுமுறை அறிவிக்கப்பட்டுள்ளது.
2. கலைவிழாவினை ஆடம்பரமாகக் கொண்டாடினோம்.
   நிகழ்வு ஆரம்பிப்பதற்குத் தாமதமானமை குறைபாடாகச் சுட்டிக் காட்டப்படுகிறது.
3. கல்வி என்பது அழிவில்லாத பெருஞ்செல்வமாகும்.
   இளமைப்பருவத்தில் கல்வியைப்பெற பெருமுயற்சியெடுத்தல் அவசியமாகும்.
4. விளையாட்டுக்களில் ஈடுபடுவது சிறந்த பொழுதுபோக்காகும்.
   நாள்முழுவதையும் விளையாட்டுகளுக்காகச் செலவிடுவது நல்லதல்ல.

# மரபுப் பெயர் II

## தொனிப்பெயர்

| | | |
|---|---|---|
| அணில், குருவி | - | கீச்சிடும் |
| ஆந்தை | - | அலறும் |
| கோழி | - | கொக்கரிக்கும் / கேரும் |
| நரி | - | ஊளையிடும் |
| பசு | - | கதறும் |
| குரங்கு | - | அலம்பும்/அலப்பும் |
| பன்றி, புலி | - | உறுமும் |
| மயில் | - | அகவும் |
| பாம்பு | - | சீறும் |
| யானை | - | பிளிறும் |

## கூட்டத்தைக் குறிக்கும் சொற்கள்

| | | |
|---|---|---|
| அறிஞர் | - | அவை |
| ஆடு | - | மந்தை |
| பசு | - | நிரை |
| ஒளி | - | கற்றை |
| பற்கள் | - | வரிசை |
| மலர் | - | செண்டு |
| தாரகை, பேய், பூதம் | - | கணம் |
| புல், வைக்கோல் | - | கற்றை |
| மலை | - | தொடர் |
| மயில் | - | குழாம் |
| முத்து | - | குவியல் |

## பயிற்சி

**1.**பின்வருவனவற்றிற்குரிய தொனிப்பெயர்களை எழுதுங்கள்.

1. ஆடு
2. எருது
3. காகம்
4. கிளி
5. புறா

**2.** பின்வருவனவற்றின் கூட்டத்தைக் குறிக்கும் பெயர்களை தேடியறிந்து எழுதுங்கள்.

1. எறும்பு
2. புத்தகம்
3. கல்
4. திராட்சை
5. தென்னை

# 14 உயிர் இரக்கம்

உலகின் அடையாளம் உயிர்களே. பல்லுயிர் பெருக்கமும் வாழ்வுமே பூமியின் ஆன்மா. ஒளி, காற்று, மண், நீர் இவற்றின் சமநிலையே உயிர்களின் தோற்றக் காரணம். உயிர்களின் சமநிலை குலைந்தால் இயற்கையின் சமநிலை குலைந்து பூமியே அழிந்துவிடும். அதாவது உயிர்கள் அனைத்தும் மடிந்துவிடும். பின்பு பூமி சமநிலையான உயிர் தோற்றச் செயல்பாட்டில் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் பரிணாம வளர்ச்சி முற்றிலும் முடிந்து, புதிய பரிணாமம் தொடங்கும். இன்றைய வளர்ச்சியைப் பெற இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகும். எனவே சுற்றுச் சூழலைப் பாதுகாத்து உயிர்களின் சமநிலையைப் பேணி இந்த உலகத்தைக் காக்கவேண்டும். இதனை உணர்ந்து இயற்கையோடு இயற்கையாக இணைந்தும் இயற்கையைப் போற்றியும் நம் முன்னோர்கள் வாழ்ந்துள்ளனர். அத்தகைய உணர்வும் வாழ்முறையும் இன்றைக்குக் கேள்விக்குறியாக ஆகியுள்ளது. இதற்கு நாம் என்ன செய்யவேண்டும்?

தொல்காப்பியர், 'ஒன்றறி வதுவே உற்றறி வதுவே' என்று தொடங்கி உலகத்து உயிர்கள் அனைத்தையும் பகுத்துக் காட்டுவார். சங்க இலக்கியம், 'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே' என்று உயிர் அருமை போற்றும். 'மன்னுயிர் ஓம்பி அருள் ஆள்வார்க்கு இல்லென்ப, தன்னுயிர் அஞ்சும் வினை' என்று வள்ளுவர் வாய்மொழிவார். பிற்காலத்தில் வள்ளலார் 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று பாடினார். இத்தகைய அருள் உள்ளம் வளர்ந்து உலகம் தழைக்கத் தாயுள்ளம் கொண்ட நம் பண்டைக்காலத்து மன்னர்கள் எப்படி உயிர் இரக்கம் பேணியுள்ளார்கள் என்பதைக் காண்போம்.

சோழ நாட்டின் வரலாற்றில் மனுநீதிச் சோழன் என்ற மன்னன் ஒருவன் இருந்தான். அவன் அரசாட்சியில் ஒரு நிகழ்ச்சி. மன்னனின் மகன் இளைய வயதினன். ஒரு நாள் அந்நாட்டின் நகர வீதியில் தேரோட்டிச் சென்று கொண்டிருந்தான். அப்பொழுது அவ்வீதியில் துள்ளித் துள்ளி

அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்த கன்றுக்குட்டி ஒன்று அந்தச் தேர்ச் சக்கரத்தின் அடியில் விழுந்து இறந்துவிட்டது. இதனால் கன்றினை இழந்த பசுவானது அரண்மனையின் வாயிலில் கட்டப்பட்ட ஆராய்ச்சி மணியை அடித்து நீதி கேட்டு நின்றது. மணியோசை கேட்ட மன்னன் உரியவர்களை அனுப்பி உண்மை அறிந்துவரச் செய்கிறான். அவர்கள் நடந்தவற்றை அறிந்து மன்னனிடம் சொல்ல, மன்னன் ‘பசுவின் கன்றைக் கொலை செய்த தன் மகனும் அதே தேர்க்காலில் நசுங்கி மரணிக்க வேண்டும்’ என்று மரண தண்டனை விதித்தான். ஒரு பசுவின் கன்றினுக்காக, அதுவும் அறியாமல் செய்த பிழைக்காகத் தன் மகன் என்றும் பாராமல் உயிர்களை நேசித்த அந்த மன்னன் அன்று முதல் ‘மனுநீதிச் சோழன்’ என்று போற்றப்பட்டான். இன்றுவரை அவன் புகழ் நின்று நிலவுகிறது.



அதே சோழ நாட்டில் இன்னொரு மன்னன். அவர் பெயர் சிபிச் சக்கரவர்த்தி. அவன் வாழ்வில் ஒரு நிகழ்வு. மன்னன் சிபி ஒருநாள் பூஞ்சோலை ஒன்றில் தனித்திருக்கிறான். அப்பொழுது அம்பினால் தைக்கப் பெற்றுக் குற்றுயிரும் குலையுயிருமாக ஒரு புறா அவன் மடியில் வீழ்கிறது. பார்த்த மன்னன் துடிதுடித்துப் போகிறான். கையிலெடுத்துக் கனிவோடு அம்பை உருவி அருமருந்திட்டுப் புறாவின் ஆருயிர் காக்கிறான். அப்பொழுது அப்புறாவை வேட்டையாடிய வேடன் வருகிறான். ‘தாங்கள் வைத்திருக்கும் புறா எனக்குரியது; என்னால் வேட்டையாடப்பட்டது; என்னிடம் தாருங்கள்’’ என்கிறான். மன்னன் மறுத்துப் ‘‘புறாவின் எடைக்கு எடையாக என் தொடையை அறுத்துத் தருகிறேன்’’ என்கிறான். எத்தகைய கருணை பாருங்கள். ஒரு புறாவிற்கு இரங்கிய சோழன் சிபியின் புகழ் இன்றுவரை நிலைத்து நிற்கிறது.

சங்க காலத்தில் ஒரு குறுநில மன்னன். ஆவியர் குடியில் பிறந்த மலை நாட்டைச் சேர்ந்தவன். அவன் பெயர் பேகன். அவனது மலை நாட்டின் பக்கமெல்லாம் கரு மேகங்கள் சூழ்ந்து வான்மழையின் வரவைப் பறை

சாற்றுகிறது. அங்கொரு மயில் தோகை விரித்து ஆடிக்கொண்டிருக்கிறது. வான்மழை பொழிகிறது. தோகை மயில் சிலிர்க்கிறது. இக்காட்சியைக் கண்ட ஆவியர்கோன் பேகன் 'குளிரால் நடுங்கும் மயில்' எனக் கருதிப் பொன்னாடை போர்த்துகிறான். மலைநாட்டு மன்னனின் உயிர் நாட்டத்தைப் பாருங்கள். இந்த அருள் உள்ளமே பேகனை இன்றுவரை பேசும்படியாகச் செய்திருக்கிறது.

மற்றொரு மலை நாடன். அவன் பெயர் பாரி. பறம்புமலையை ஆண்ட குறுநில மன்னன். அவனது கருணை கனிந்த அருள் உள்ளத்தைப் பாருங்கள். ஒருநாள் தேரேறிக் கானகத்தின் பெருவழியில் வந்து கொண்டிருக்கிறான். வழியின் ஓரிடத்தில் முல்லைக்கொடி ஒன்று வளர்ந்து வான் நோக்கி அசைந்தாடிக் கொண்டிருக்கிறது. பற்றிப் படரப் பக்கத்தில் ஒரு கொம்பில்லை. பார்க்கிறான் பாரி. பற்றிப் படரக் கொம்பின்றித் தடுமாறும் அம்முல்லைக் கொடியின் வாட்டத்தைத் தீர்க்க எண்ணுகிறான். பரந்த மனம் பாரிக்கு என்பதால், தான் ஏறி வந்த தேரையே அதனருகில் நிறுத்துகிறான். 'இனி இம்முல்லை பற்றிப் படர்ந்து தன் வாட்டம் தீரும்' என்று மகிழ்கிறான். எப்படிப்பட்ட உயிர் நேயம்?



ஒரு தலைவன் தலைவியைப் பிரிந்து போருக்குச் சென்று வெற்றியுடன் திரும்பி வருகிறான். தேரில் தொங்கும் மணியின் ஓசை ஆர்ப்பரிக்கத் தேர் வரவேண்டும். தலைவனின் உள்ளம் தலைவியின் இன்பியல் அன்பை அசைபோடுகிறது. அவன் பார்க்கின்ற காட்சி தேர்மணி ஓசைக்குத் தடை போடுகிறது. ஆம். எங்கும் பருவமழை பொழிந்து இயற்கை பசுமைப் பாய் விரிக்க வண்ண வண்ணப் பூக்கள் பூத்துக் குலுங்குகின்றன. மலர்ந்த

பூக்களின் தேனை வண்டுகள் மகிழ்ச்சி ஒலியெழ உண்டு மகிழ்கின்றன. அந்தச் சூழலில் தலைவனின் கண்ணில் ஒரு காட்சி தென்படுகிறது. இணை வண்டுகள் இரண்டு தேன் உண்ட போதையிலும் இணை சேர்ந்த காதலிலும் கண்மூடி மயங்கிக் கிடக்கின்றன. இந்த மகிழ்ச்சி மயக்கம் கலைந்துவிடக் கூடாது. இதற்குத் தேர்மணி ஓசை காரணமாகிவிடக் கூடாது என்று எண்ணுகிறான். எனவே அவன், ''தேர்ப்பாகனே! மணி நாவை அசையாது இழுத்துக்கட்டு'' என்று ஆணையிடுகிறான். காதலால் கசிந்துருகும் கருணையைப் பாருங்கள்.

மேலும் கடவுளர்களின் வாகனங்கள் கூட இதையே வலியுறுத்துகின்றன. தேவேந்திரனுக்கு வெள்ளை யானை, சிவனுக்குக் காளை, திருமாலுக்குக் கருடன்; பசு, முருகனுக்கு மயில்; சேவல், காளிக்குச் சிங்கம், அய்யனாருக்குக் குதிரை, பிள்ளையாருக்கு எலி, அய்யப்பனுக்குப் புலி, மீனாட்சிக்கு கிளி, பைரவருக்கு நாய் இவ்வளவு ஏன் சனிக்கும் எமனுக்கும் முறையே காகமும் எருமையும் உள்ளன. இப்படித்தான் விலங்குகளும் பறவைகளும் கடவுளரோடு போற்றிப் பாதுக்காக்கப்பட்டுள்ளன. இன்னொன்று பெரும்பாலான கடவுளர்களின் கோவில்களில் தலவிருட்சம் இல்லாமல் இருப்பதில்லை. இவையெல்லாம் இயற்கையை நேசிக்கும் பண்பாட்டில் முகிழ்த்தவை எனலாம்.

இவ்வாறு பண்டைத் தமிழ்மக்கள் இயற்கையைப் பாதுகாத்தும் நேசித்தும் போற்றியும் வணங்கியும் இயற்கையோடு இயைந்து வாழ்ந்திருக்கிறார்கள். எனவேதான் பல்லுயிர்களையும் பாங்குடன் ஓம்பும் நல்லுள்ளம் அவர்களுக்கு வாய்த்திருக்கிறது. வானம் மும்மாரி பொழிந்து வளம் செழி த்திருக்கிறது. இன்றை க்கு இந்த நிலை மாறிவிட்டது. மனிதனின் ஆசைகள் அளவு கடந்து இயற்கையைச் சீரழிக்கும் சிறுமைக்குள் சென்றுவிட்டன. கண்ணுக்குத் தெரியாமல் உலகம் மெல்ல மெல்ல அழிந்து கொண்டு வருகிறது. இந்நிலை மாற வேண்டும்; விரைவில் மாற்றம் வேண்டும். முன்னோர் வாழ்வியலை உணர்ந்து இயற்கையைப் பாதுகாத்துப் பல்லுயிர்களையும் ஓம்பி உயிர் நேயம் வளர்க்கப் பாடுபட வேண்டும். இந்த உணர்வும் அறிவும் பசுமரத்து ஆணிபோல் இளைய உள்ளங்களில் புகவேண்டும். நாளைய உலகம் நமக்கானதாக மாறவேண்டும். மாற்றுவோம்!

- இ. பேச்சிமுத்து

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| ஆன்மா | - | உயிர் |
| ஓம்புதல் | - | பாதுகாத்தல் |
| கனிவு | - | இரக்கம் |
| எடை | - | பாரம் |
| வாட்டம் | - | சோர்வு |
| விருட்சம் | - | மரம் |
| ஆணை | - | கட்டளை |
| இணை | - | சோடி |
| உற்றறிதல் | - | தொட்டு அறிதல் |
| பரிணாமம் | - | ஒன்று மற்றொன்றாக மாறுதல் |



### கிரகித்தறற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. உலகில் உயிர்களின் தோற்றத்திற்கான அடிப்படை எது?
2. எமது முன்னோர்கள் இயற்கையைப் போற்றி வாழ்ந்தமைக்கான காரணம் என்ன?
3. பசுக்கன்றுக்காகத் தன் மகனைத் தேர்க்காலில் இட்டு தண்டித்தமையால் சோழ மன்னன் எவ்வாறு அழைக்கப்பட்டான்?
4. பாரி மன்னனுடைய உயிர் நேயம் எவ்வாறு வெளிப்பட்டது?
5. மணியின் நாவை அசையாது இழுத்துக்கட்டும்படி தேர்ப்பாகனைத் தலைவன் பணிக்கக் காரணம் என்ன?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

''உயிர்களிடத்தில் அன்பு காட்டுவோம்'' என்ற தலைப்பில் உரைச்சித்திரம் ஒன்றை பிரதியாக்கி நிகழ்த்திக் காட்டுங்கள்.

## அடைமொழிகள்

தோட்டத்தில் **அழகான** பூக்கள் மலர்ந்திருக்கின்றன.
**நல்ல** பழங்களாகத் தாருங்கள்.
நாங்கள் **விரைவாகச்** சென்றோம்
மின்சாரம் **அடிக்கடி** தடைப்படுகின்றது.

மேலே தரப்பட்ட வாக்கியங்களில் இடம்பெற்றுள்ள அழகான, நல்ல, விரைவாக, அடிக்கடி ஆகிய சொற்களைக் கவனிப்போம். அவை வேறு சொற்களைச் சிறப்பித்து அல்லது விபரித்து வந்தவையாகும். இவ்வாறான சொற்கள் அடைமொழிகள் எனப்படுகின்றன.

| |
|---|
| சொற்களை விசேடித்து அல்லது விபரித்து வரும் சொற்கள் அடைமொழிகள் எனப்படும். |

தோட்டத்தில் **அழகான** பூக்கள் மலர்ந்திருக்கின்றன.
**நல்ல** பழங்களாகத் தாருங்கள்.

ஆகிய வாக்கியங்களைக் கவனிப்போம். அழகான, நல்ல என்பன முறையே பூக்கள், பழங்கள் என்ற பெயர்ச்சொற்களை விசேடித்து வந்துள்ளன. எத்தகைய பூக்கள், எப்படிப்பட்ட பழங்கள் என்ற வினாக்களை எழுப்பினால் அவற்றுக்கு விடைகளாக அழகான, நல்ல என்பன அமையும்.

| |
|---|
| பெயர்ச் சொற்களை விசேடித்து அல்லது விபரித்து வரும் சொற்கள் பெயரடைகள் எனப்படும். |

நாங்கள் **விரைவாகச்** சென்றோம்.
மின்சாரம் **அடிக்கடி** தடைப்படுகின்றது.

ஆகிய வாக்கியங்களைக் கவனிப்போம்.

விரைவாக என்பது சென்றோம் என்ற வினைச்சொல்லையும் அடிக்கடி என்பது தடைப்படுகின்றது என்ற வினைச்சொல்லையும் விசேடித்து

வந்துள்ளன. எப்படிச்சென்றோம்? எப்படித் தடைப்படுகின்றது? ஆகிய வினாக்களுக்கு விடைகளாக முறையே விரைவாக, அடிக்கடி என்பன அமைகின்றன.

> வினைச் சொற்களை விசேடித்து அல்லது விபரித்து வரும் சொற்கள் வினையடைகள் எனப்படும்.




பின்வரும் வாக்கியங்களில் இடம்பெற்றுள்ள அடைமொழிகளை இனங் கண்டு, அவை பெயரடையா, வினையடையா? என்பதனைக் குறிப்பிடுக.

1. திடீரென்று பெய்த மழையால் போட்டி குழம்பிவிட்டது.
2. கருணையுள்ள மனிதர்கள் வாழ்வதனாலேயே மழை பெய்கின்றது.
3. நாங்கள் சிறிய வீட்டில் நெருக்கமாக வாழ்கின்றோம்.
4. அமைதியான மனிதர்கள் இளமையாக வாழ்கிறார்கள்.

## திசைச் சொற்கள்

தமிழில் வழங்கி வரும் ஆரியம் (வடமொழி) அல்லாத ஏனையமொழிச் சொற்கள் திசைச் சொற்கள் எனப்படும்.

| **போர்த்துக்கேயமொழிச் சொற்கள்** | | **தமிழ்ச் சொற்கள்** |
|---|---|---|
| அலுமாரி/அலமாரி | - | நிலைப்பேழை |
| கதிரை | - | நாற்காலி |
| யன்னல்/ஜன்னல் | - | சாளரம் |
| பீப்பா | - | பெரிய கொள்கலம் |

| **ஒல்லாந்துமொழிச் சொற்கள்** | | **தமிழ்ச் சொற்கள்** |
|---|---|---|
| உலாந்தா | - | அளவைகாரன் |

| | |
|---|---|
| கந்தோர் | - அலுவலகம் |
| சக்கடத்தார் | - செயலாளர் |
| கக்கூசு | - மலசலகூடம் |

| பிரெஞ்சுமொழிச் சொற்கள் | தமிழ்ச் சொற்கள் |
|---|---|
| பட்டாளம் | - சேனை |
| குசினி | - சமையலறை |
| இலாந்தர் | - கண்ணாடி விளக்கு |
| பீரோ | - நிலைப்பேழை |

| அரபுமொழிச் சொற்கள் | தமிழ்ச் சொற்கள் |
|---|---|
| இலாகா | - திணைக்களம் |
| வசூல் | - சேகரிப்பு |
| தகவல் | - செய்தி |
| சைத்தான் | - பிசாசு |

| கன்னடமொழிச் சொற்கள் | தமிழ்ச் சொற்கள் |
|---|---|
| அட்டிகை | - கழுத்தணி |
| சொத்து | - பொருள் பண்டம் |
| அக்கறை | - கவனம் |
| சமாளித்தல் | - காலந்தள்ளுதல் |

| தெலுங்குமொழிச் சொற்கள் | தமிழ்ச் சொற்கள் |
|---|---|
| இடாப்பு | - பேரேடு |
| இராணுவம் | - படைவீரர் |
| சந்தடி | - இரைச்சல் |
| இலஞ்சம் | - கையூட்டு |

## பயிற்சி

பின்வரும் திசைச்சொற்கள் எம்மொழிக்குரியன என அறிந்து எழுதுங்கள்.

1. அலவாங்கு -
2. ஒட்சிசன் -

6. துட்டு -
7. ஆஸ்தி -

# 15 விநோதக் கனவு



நண்பகல் உணவு அருந்த அழைக்கும் மணி அடித்த போதிலும் உணவு மேசைக்கு ஒருவரும் வரவில்லை. களைத்துப் போயிருந்த நான், ஒரு நாற்காலியில் வசதியாக அமர்ந்தவாறு, மற்றவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரத்திற்குள் விநோதக் குரல் ஒலி ஒன்று கேட்டது. ரொட்டி பேசுகிறது. இது எனக்கு ஆச்சரியத்தை விளைத்தது.

''சாப்பிடுவதற்கு ஒருவரும் வரக் காணோமே. ஏதோ தயக்கம்போல் இருக்கிறது. அவர்கள் வரும்வரைக்கும் நேரத்தை வீணாக்காமல் ஒருவரோடொருவர் உரையாடி மகிழலாமே என்று நான் நினைக்கிறேன்.''

மேசையின் மீது உள்ள உணவுப் பதார்த்தங்கள் எல்லாம் இவ்வார்த்தை களைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தன.

**சோளம்** : ''நான் இவரது முன்மொழிவுக்கு உடன்பட்டு வழிமொழிகின்றேன். நாம் ஒருவரை ஒருவர் நன்றாக அறிந்துகொண்டு, இன்னும் நெருக்கமாகப் பழகுவது அவசியம்.''

**ரொட்டி**: ''இந்தக் கருத்தை ஆதரிப்பவர்கள் ''ஆம்'' என்று சொல்லுங்கள்.''

மேசையின் எல்லா இடத்திலிருந்தும் ''ஆம்'', ''ஆம்'' என்ற குரல்கள் கேட்டன.

''தீர்மானம் நிறைவேறிவிட்டது'' என்று ரொட்டி மிக்க வணக்கத்துடன் அவைக்குத் தெரிவித்தது.

சோளம் ரொட்டியைப் பார்த்து, ''உங்களை வாழ்க்கைக்கு உயிர் நாடி என்று உலகம் போற்றுவதால், நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள் என்பதை நாங்கள் அறிய விரும்புகிறோம்'' என்று கேட்டுக்கொண்டது.

**ரொட்டி**: ''நானா? நான் பஞ்சாப் நாட்டிலுள்ள ஒரு கோதுமைப் பண்ணையில் பிறந்து வளர்ந்தேன். நாங்கள், மக்கள் இனத்திற்கு இன்றியமையாதவர்கள். அதனால் உலகம் முழுவதும் பரவி இருக்கிறோம். என் உறவினர்கள் பலர், ரஷியாவின் தென் பகுதியிலும் ஆஸ்திரேலியாக் கண்டத்திலும் வட அமெரிக்காவிலும் வாழ்ந்து வருகிறார்கள்.''

**சோளம்**: ''அட, நீங்கள் பஞ்சாபியா? நானும் பஞ்சாபிலிருந்துதான் வந்திருக்கிறேன்.''

**அரிசி**: ''என் கதையைக் கொஞ்சம் கேளுங்கள். நான் தஞ்சாவூர்க்காரன். எந்தெந்த இடத்தில் ஆண்டு முழுவதும் வெப்பமும் தண்ணீரும் மிகுதியாக இருக்குமோ, அந்தந்த இடத்தில் நான் செழிப்பாக வளருவேன். எங்களைப் பர்மா, சீனா, ஜப்பான் முதலிய நாடுகளில் வளர்க்கிறார்கள். இந்த நாடுகள் எல்லாம் இங்கிருந்து நெடுந்தொலைவில் இருக்கின்றன.

**பேரிச்சம்பழம்**: ''நான் எகிப்து நாட்டுக்காரன். அறுபது அடி உயரத்துக்கு வளரும் ஈச்ச மரத்தின் உச்சியில் நாங்கள் குலை குலையாகத் தொங்குகிறோம். இது மாதிரி உயர்ந்த இடங்களில் வாழ்ந்திருக்க எங்களுக்கு விருப்பம் அதிகம். தூசியும் அழுக்கும் எங்களை அண்டுவதில்லை. நாடு முழுவதிற்கும் நாங்கள் அழகிய தோற்றத்தை வழங்குகிறோம். மரத்தின் அழகிய உச்சியிலிருந்து கொண்டு, பிரமிட் கோபுரங்களை நாங்கள் பார்த்து மகிழ்வோம். வளர்ந்து முதிர்ந்தவுடன், மென்மையும் சி வப்பு நிறமும் எங்களுக்கு வந்துவிடும். பிறகு எங்களை ஒருங்கு சேர்த்து, ஓலைக் கூடைகளில் அடைத்து, ஏற்றுமதி செய்வார்கள்.''

**வாழைப்பழம்**: ''திருச்சியிலுள்ள குளித்தலை என்ற இடத்திலிருந்து நான் வந்திருக்கிறேன். அந்த இடத்தில் எவரும் வாழ விரும்புவார்கள். மத்தியபிரதேசத்தைச் சேர்ந்த புசாவல் என்ற ஊரில் எங்களை மாவாக அரைத்து, ரொட்டி பண்ணுகிறார்கள். சிலர் எங்களைச் சமைத்து உண்ணுகிறார்கள். ஒரு வாரத்திற்கு முன் நான் பச்சைக் காயாக இருந்தபொழுதே என்னைக் கொய்து, இங்கு கொண்டு வந்துவிட்டார்கள். சீக்கிரமாகச் சாப்பிடா விட்டால், நான் அழுகி, வீணாகி விடுவேன்.''

**கொடிமுந்திரிப்பழவற்றல்**: ''அழுகிப் போய்விடுவோம் என்கிற பயம் உங்களுக்கு இருக்கிறது. எனக்கு அந்தப் பயம் கிடையாது! நான் ஒரு காலத்தில் கொடைக்கானல் தோட்டத்தில் திராட்சைச் செடி ஒன்றில் ஒரு குலையாகத் தொங்கினேன். நான் முதிர்ச்சி அடைந்தவுடன், என்னை மற்றவர்களுடன் ஒரு பெருந்தட்டில் வைத்துச் சூரிய வெப்பத்தில் உலரப் பண்ணி, பிறகு சதுரமான பெட்டிகளில் அடைத்து, ஏற்றுமதி செய்தார்கள். நான் இங்கு வந்து சேர்ந்து, ஆறு மாசம் ஆகின்றது. இன்னமும் சௌக்கியமாக இருக்கிறேன்.''

**ஆரஞ்சுப்பழம்**: ''தமிழ்நாட்டில் என்னைக் 'கிச்சிலிப் பழம்' என்று அழைக்கிறார்கள். எங்களுக்கு ஆங்கிலேயர்கள் வைத்த பெயர் ஆரஞ்சு. நான் திண்டுக்கல்லையடுத்த விருப்பாட்சி மலைகளிலிருந்து வந்திருக்கிறேன்'' என்று ஜாடியிலிருந்த ஆரஞ்சு ரசம் கூறிற்று; ''சுவை மிக்க எங்கள் இனத்தவர்கள் நாகபுரியிலும் அஸ்ஸாமிலும் காணப்படுகிறார்கள்'' என்று அது மேலும் தகவல் தெரிவித்தது.

**உருளைக்கிழங்கு**: ''என்னை அயர்லாந்து நாட்டான் என்று அழைக்கிறார்கள். ஆனால், உண்மையில் நான் அமெரிக்க நாட்டைச் சேர்ந்தவன். தென் அமெரிக்காவின் மேற்குப் பகுதியில் தான் நான் தோன்றினேன்.''

**முட்டைக்கோசு**: (சிரித்துக்கொண்டு) ''இந்த உருளைக்கிழங்கு பேசுகிற பேச்சைப் பாருங்கள்! தான் தென் அமெரிக்காவிலிருந்து வந்ததாகச் சொல்லுகிறாரே. இவர் பிறந்த இடம் எது என்று நன்றாகத் தெரியும். இங்குள்ள தோட்டத்திலிருந்து தானே இவரைப் பறித்துக்கொண்டு வந்தார்கள். உண்மை அப்படியிருக்க, தென் அமெரிக்காவிலிருந்து வந்ததாகச் சொல்லுகிறாரே.''

**உருளைக்கிழங்கு**: ''ஒருவர் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, மற்றொருவர் குறுக்கே பேசுவது மரியாதைக் குறைவாகும். நான் எங்கள் குடும்பத்தைப் பற்றித் தான் சொன்னேன்; என்னைப் பற்றி அல்ல. தென் அமெரிக்காதான் எங்கள் சொந்த இடம். கடந்த முந்நூறு ஆண்டுகளாகத் தான் மக்கள் எங்கள் உபயோகத்தை நன்றாக அறிந்திருக்கிறார்கள். நான் வால்ட்டர் இராலே என்று பெயர்போன ஆங்கிலப் பெருமகனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். உருளைக்கிழங்கு ஒரு சிறந்த உணவுப் பண்டம் என்று மக்களுக்குக் காண்பிக்கும் பொருட்டு, அவர் தம் சட்டைப் பித்தான் துவாரத்தில் எங்கள் செடியிலிருந்து பூவை எடுத்து அணிந்து கொள்வது வழக்கமாம்.''

முந்நூறு வருஷம்'' என்று இழுத்து மெதுவாகச் சொன்ன ரொட்டி ''முந்நூறு வருஷம் நீண்ட காலம் என்று உங்களில்

சிலர் நினைக்கலாம். வாஸ்தவத்தில் முந்நூறு வருஷம் ஒரு நீண்ட காலமாகுமா?

கோதுமையை உணவுப் பண்டமாக முதன் முதலில் எப்பொழுது உபயோகித்தார்கள் என்று சொல்ல இயலாது என்று சிலர் கூறுகிறார்கள். இவர்கள் விவிலிய நூலின் முதல் அத்தியாயத்தைப் படித்தால், அப்படிச் சொல்ல மாட்டார்கள் என்று நினைக்கிறேன்'' என்று கூறி முடித்தது.

**சோளம்**: ''என் கருத்தும் இதுதான். என்னைக் குறித்தும் அது மாதிரி பேசுகிறார்கள். என்னை ''இந்தியச் சோளம்'' என்று சில சமயம் அழைக்கிறார்கள். ஏனென்றால், கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்த கால த்தில் அங்கு சிவ ப்பு இந்தியக் ள் சோளம் பயிர் செய்வதைக் கண்ணுற்றார்கள். விறகு கிடைக்காத இடங்களிலும், விறகு கிராக்கியாக உள்ள இடங்களிலும், சோளத்தட்டையை விறகாக எரிக்கிறார்கள். ''என்னிடத்திலும் மாவுப் பொருள் நிறைய உண்டாகும்''

**இரட்டை அவரை**: ''இது வரை பலர் பல சிறந்த கருத்துக்களைத் தெரிவித்தார்கள். நானே எனக்கு ***'இரட்டை அவரை'*** என்கிற பெயர் ஏன் வந்தது என்பது கூடத் தெரியாமல் இருக்கிறேன். அதற்காக வருந்துகிறேன். எப்பொழுதாவது அந்தக் காரணம் தெரிய வந்தால், உங்களுக்கு உடனே அறிவிக்கிறேன். ஆனால் ஒன்று எனக்குத் தெரியும். எங்களிடம் தசை வளர்க்கும் சத்து நிறைய இருக்கிறது. விஞ்ஞானிகள் அதைப் புரதம் என்கிறார்கள். இரத்தம், மூளை, நரம்பு, தசை முதலியவைகளுக்கு இந்தப் புரதம் மிகவும் தேவையானது. நான் அதிக புரதச்சத்து பெற்றிருப்பதால் என்னை மக்கள் அதிகமாக உண்கிறார்கள்.''

**ரொட்டி**:''நான் மக்களுடைய மூளையையும் தசையையும் உருவாக்குவதற்கு அதிகமாக உழைக்கிறேன். அவர்களுடைய உடம்பிற்குப் பலத்தையும் வெப்பத்தையும் அளிக்கிறேன். வயிறு என்னைக் கண்டதும் மகிழ்ச்சிகொள்ளுகிறது; ஏனென்றால் நான் ஒரு பொழுதும் மற்ற உணவுப் பண்டங்களுடன் சண்டையிடுவதில்லை. பழங்கள், காய்கறிகள், சர்க்கரை, பால்

முதலியவை வயிற்றுக்குள் சென்று, ஏகக் கலவரம் பண்ணுவதை நான் கவனித்திருக்கிறேன். ஆனால், எந்த உணவும் என்னுடன் தாராளமாகச் சேர்ந்து கொள்ளும். சச்சரவு, கலவரம் ஒன்றும் இருக்காது.''

***அரிசி***: ''ரொட்டி தன்னைப் பற்றிப் பெருமையாய்ப் பீற்றிக் கொள்ளுகிறதே. என்னிடத்தில் அதை விடச் சத்துப் பொருள் அதிகமாக உண்டு என்று அதற்குத் தெரிவித்துக்கொள்கிறேன். அதிலும், சிறப்பாக மாவுப்பொருள் என்னிடம் மிகுதியாக உண்டு.''

**சோளம்**: ''என்னிடத்திலும் மாவுப்பொருள் நிறைய இருக்கிறது. இன்னும் சிறப்பு என்னவென்றால், என்னிடம் சர்க்கரையும் கொழுப்பும் அதிகமாக இருக்கின்றன. சோள சர்பத்தைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டதில்லை? என்னிடத்தில் எண்ணெயும் இருக்கிறது. அதனால் என்னை உட்கொள்பவர்கள் கொழுகொழு வென்று இருப்பார்கள்.''

***ரொட்டி***: ''அவசரப்படாமல் மெதுவாக மென்று என்னை உட்கொண்டால், நான் நேர்த்தியாகவும் இனிப்பாகவும் இருப்பதைக் கண்டு கொள்ளலாம். வாயிலுள்ள உமிழ்நீர் என்னிடமுள்ள மாவுப் பொருளுடன் கலந்து, இனிப்பைப் பிறப்பிக்கிறது.''

**பேரீச்சம்பழம்**: ''எங்களிடத்திலும் இனிப்பு நிறைய உண்டு.''

***கொடிமுந்திரி வற்றல்***: ''எங்களிடத்திலும் இனிப்பு உண்டு.''

**உருளைக்கிழங்கு**: ''முட்டைக்கோசு ஏன் சாப்பிடுகிறார்கள் என்று எனக்கு விளங்குவதேயில்லை. மற்றப் பொருள்களை விட இதைச் சீரணிப்பதற்கு வயிறு இருமடங்கு அதிகமாய் வேலை செய்ய வேண்டும். அத்துடன், முட்டைக்கோசு முழுவதும் தண்ணீராகத் தான் இருக்கிறது.''

**முட்டைக்கோசு**: ''அப்படியா? எவராவது தண்ணீர் இல்லாமல் உயிர் வாழ முடியுமா? என்னைப் பச்சையாக அப்படியே உண்ண வேண்டும். அல்லது, பத்துப் பதினைந்து நிமிடத்துக்கு மேற்படாமல் வேக வைத்துச் சாப்பிடலாம். இப்படிச் செய்தால் வயிறு அதிகம் உழைக்கத் தேவையில்லை. இன்னும் எலும்புகள், பற்கள், இரத்தம் முதலியவைகளுக்குத் தேவையான உப்புச் சத்துக்கள் என்னிடத்தில் மிகுதியாக உண்டு. உணவு செரிப்பதற்கு உதவும். செரிநீர் சுரக்க நான் உதவியாய் இருக்கிறேன். ''

**உருளைக்கிழங்கு**:(சிரித்துக்கொண்டு) ''பச்சையாக உண்ணுவதா? முட்டைக்கோசைப் பச்சையாக உண்ணலாம். என்னைப் பச்சையாக யாரும் உண்ணமாட்டார்கள். முட்டைக் கோசுக்குத் தண்ணீரில் வேக விருப்பமில்லை. என்னை வேக வைத்து உண்ணலாம். பொரித்தால் இன்னும் சுவையாக இருப்பேன்.''

**கீரை**: ''நான் ஒரு முக்கியமான அறிக்கை விடுக்க விரும்புகிறேன். சிறுவர் சிறுமியர்களுக்குப் பற்கள், எலும்புகள், செரி கருவிகள் முதலானவை ஆரோக்கியமாக அமைய வேண்டுமானால், என்னை அவர்கள் ஆர்வத்துடன் உண்ண வேண்டும். ஒவ்வொரு நாளும் கீரையைத் தவறாமல் உணவில் சேர்த்துக்கொள்வோருக்கு எந்த நோயும் வராது. என்னைப் போலவே மற்றக் காய்கறிகளும் நிறையப் பயன்தரும்.''

**ஆரஞ்சுப்பழம்**: ''பழங்கள், மக்களை நோய் அணுகாமல் தடுத்துக் காப்பாற்றுகின்றன. அதிலும் எங்கள் இனம் இவ்விஷயத்தில் நல்ல பெயர் எடுத்திருக்கிறது.''

**தக்காளிப்பழம்**: ''நானும் கிச்சிலி போல் மிக்க நல்லவன். என்னை வாங்குவதற்கு அதிக விலை கொடுக்க வேண்டாம். எங்களை ''ஏழைகளின் கிச்சிலி'' என்று அழைக்கிறார்கள்.''

- **எஸ். வி. லூயிஸ் ராஸன்**
'கதைக்களஞ்சியம்'

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| வினோதம் | - | இயற்கைக்கு மாறானது |
| முன்மொழிவு | - | கருத்தொன்றை முதலில் எடுத்துக்கூறல் |
| வழிமொழிவு | - | அனுசரித்துக் கூறுதல் |
| உலர்தல் | - | காய்தல் |

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இப்பாடப்பரப்பில் உரையாடலில் ஈடுபடும் உணவுப் பொருள்கள் யாவை?
2. பேரிச்சம்பழம் எங்கு மிகச் செழிப்பாக வளரும்?
3. ‘தசையை வளர்க்கும் சத்து எந்த உணவுப் பொருளில் உண்டு? அதனை விஞ்ஞானிகள் என்ன பெயர்கொண்டு குறிப்பிடுகிறார்கள்?
4. கீரையை நாம் அதிகமாக எமது உணவிலே ஏன் சேர்த்துக்கொள்ள வேண்டும்?
5. பின்வரும் சத்துக்கள் அடங்கிய உணவுப் பொருள்களைப் பட்டியற் படுத்துக.

    அ) மாப்பொருள்

    ஆ) புரதம்

    இ) கொழுப்பு

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

நீர் கண்ட விநோதக் கனவு பற்றி கட்டுரை ஒன்று எழுதுங்கள்.

# உவமையணி

***கீரியின் உடல் வண்ணம் போல மணல் பரந்துகிடந்தது.***

***சவர்க்கார நுரையைப் போன்று கடல் அலைகள் நுரைத்து எழுந்தன.***

***மிளகாய்ப் பழத்தை ஒத்ததாக கிளியின் சொண்டு இருந்தது.***

மேலே தரப்பட்ட வாக்கியங்களை அவதானிப்போம். மணல், கடல் அலைகள் நுரைத்தல், கிளியின் சொண்டு என்பனவற்றை விளக்குவதற்காக முறையே கீரியின் உடல், சவர்க்காரநுரை, மிளகாய்ப்பழம் என்பன பயன்படுத்தப்பட்டுள்ளன. கீரியின் உடல், சவர்க்காரநுரை, மிளகாய்ப்பழம் என்பன தெரிந்த விடயங்கள் ஆகும். இந்தத் தெரிந்த விடயங்களைக் கொண்டு விபரிக்க வேண்டிய விடயங்கள் விளக்கப்பட்டுள்ளன. இவ்வாறு விளக்கப்படுவனவற்றையே உவமையணி என்கிறோம்.

வர்ணிக்க/விபரிக்கப்பட வேண்டிய விடயத்தை தெரிந்த பொருளோடு ஒப்பிட்டு விளக்குதல் அல்லது வர்ணித்தல் உவமை அணி ஆகும்.

உவமை அணியில் மூன்று பிரதான அம்சங்களை அவதானிக்கலாம்.

1. **தெரிந்த விடயம்**: இதனை **உவமானம்** என்போம்.

மேலுள்ள வாக்கியங்களில் கீரியின் உடல், சவர்க்காரநுரை, மிளகாய்ப்பழம் என்பன உவமானங்கள் ஆகும்.

2. **விளக்கவேண்டிய விடயம்** : இதனை **உவமேயம்** என்போம்.

மேலுள்ள வாக்கியங்களில் மணல், கடல் அலைகள் நுரைத்தல், கிளியின் சொண்டு என்பன உவமேயங்கள் ஆகும்.

3.**ஒப்பிடப்படும் இயல்பு**: உவமேயங்களை உவமானங்களோடு ஒப்பிடுவதற்கு அவை இரண்டிற்குமிடையே ஒத்த தன்மைகள் இருத்தல் வேண்டும். அவ்வாறான ஒத்த தன்மைகளை **பொதுத்தன்மை** என்போம்.

மேலுள்ள வாக்கியங்களில் வண்ணம் (நிறம்), நுரைகளின் தோற்றம், சிவப்பு நிறம் என்பன பொதுத்தன்மைகள் ஆகும்.

உவமை அணிகளில் உவமானத்தையும் உவமேயத்தையும் ஒப்பிடுவதற்கு **உவமை உருபுகள்** பயன்படுத்தப்படும். மேலேயுள்ள வாக்கியங்களில் போல, போன்று, ஒத்த ஆகிய உருபுகள் இடம்பெற்றுள்ளன. இவற்றைவிட புரைய, அன்ன முதலிய உருபுகளும் பயன்படலாம்.




பின்வரும் தொடர்களில் இடம்பெற்றுள்ள உவமானம், உவமேயம், பொதுத்தன்மை என்பனவற்றை இனங்கண்டு எழுதுக.

1. சோளன் பொரி போல ஆகாயத்தில் நட்சத்திரங்கள் மின்னின.
2. அப்பா முத்து அன்ன வெண்பற்களைக் காட்டி நகைத்தார்.
3. குமரன் வீட்டில் திருடன் நுழைந்த செய்தி காட்டுத் தீ போல எங்கும் பரவிவிட்டது.
4. தந்தை இறந்த செய்தியைக் கேட்ட விமலா அடியற்ற மரம் என விழுந்தாள்.
5. தாகத்தில் தவித்தோருக்கு தேவாமிர்தம் போல இளநீர் சுவைத்தது.

## இரட்டைக்கிளவி

ஆறு சலசல என ஓடியது.
வைரம் தகதக எனப் பிரகாசித்தது.

மேற்குறிப்பிட்ட வாக்கியங்களில் இடம்பெறும் **சலசல, தகதக** என்னும் சொற்கள் முறையே நீரோடும் ஓசையையும் வைரத்தின் ஒளியையும் குறிப்பாக உணர்த்தி நின்றன. இவ்வாறு இசை, பண்பு, குறிப்பு என்பன பற்றி அடிச்சொல் இரட்டித்து வரும்பொழுது அதனை இரட்டைக் கிளவி என்போம். இரட்டைக்கிளவி ஒன்றில், இரட்டித்து வரும் சொற்களைப் பிரித்தால் தனித்து ஒரு சொல் பொருள் தரமாட்டாது.

ஓசை நயத்திற்காகவும் பொருளைத் தெளிவாக உணர்த்துவதற்காகவும் இரட்டைக்கிளவிகள் பயன்படுத்தப்படுகின்றன. சில இரட்டைக்கிளவிகள் கீழே தரப்பட்டுள்ளன.

குடுகுடு திடுதிடு
நெருநெரு தழுதழு
வழவழ பிசுபிசு
வளுவளு கிணுகிணு
மொறமொற வெதுவெது

## பயிற்சி

**1.** கீழே தரப்பட்ட இரட்டைக்கிளவிகளில் பொருத்தமானதைப் புள்ளிக் கோடிட்ட இடத்தில் வைத்து எழுதுங்கள்.

கடுகடு, கமகம, கணகண, கலீர்கலீர், பொலபொல

1. கூடையில் கிடந்த பூக்கள்.................. என நறுமணம் வீசின.
2. அவனின் உடல் வைரஸ் காய்ச்சலால் ............. என இருந்தது.
3. முகுந்தனின் முகம் ............ என்று இருந்ததற்குக் காரணம் தெரியவில்லை.
4. மரத்தில் இருந்து நன்கு பழுத்த கனிகள் ............ என உதிர்ந்தன.
5. நடன மாதுவின் காலில் இருந்த சலங்கை அவள் நடனமிட ............ என ஒலித்தது.

**2.** பின்வரும் இரட்டைக்கிளவிகளின் பொருள் புலப்படுமாறு வாக்கியங்களில் வைத்து எழுதுங்கள்.

1. நற நற
2. பளபள
3. தளதள
4. திடீர் திடீர்
5. குசுகுசு
6. தடதட
7. கலகல
8. கசகச
9. சுறுசுறு
10. கரகர

# 16 எலிப்பாட்டு

கோட்டிகள் பண்ணாதே எலியே நீ வீட்டிலே நில்லாதே
எலியே நீ வீட்டிலே நில்லாதே

நாட்டுப் பயிரை நஷ்டப் படுத்திறாய்
நல்ல இளனியை நறுக்கி வீழ்த்திறாய்
வீட்டில் பண்கள் மிகவிசைக்கிறாய்
மேட்டி லோடியே ஓட்டைச் சரிக்கிறாய்.

(கோட்டிகள் பண்ணாதே)

ஓலைக் கூரையில் ஒதுங்கி நிற்கிறாய்
ஒருமழை வந்தால் ஒழுகச் செய்கிறாய்
வாலைக் காட்டியே வழியில் ஓடுறாய்
மற்ற இடமெல்லாம் சுத்தித் திரிகிறாய்.

(கோட்டிகள் பண்ணாதே)

ஆனைக் குட்டிபோல் அங்கிங்கு ஓடுறாய்
அடிக்கப் போனால் அஞ்சிப் பதுங்கிறாய்
பூனையைக் கண்டு பொறி கலங்கிறாய்
பொல்லாத பூனைக்குப் பின்னர் இரையாகிறாய்.

(கோட்டிகள் பண்ணாதே)

தேங்காய்ப் பாதியில் சித்திரம் கொத்துறாய்
திண்டு மூடினால் திறந்து வைக்கிறாய்
வாங்கும் சாமானை வாரி இழுக்கிறாய்
மண்ணினை மானிடர் கண்ணிலே போடுறாய்.
(கோட்டிகள் பண்ணாதே)

படுக்கும் மெத்தையில் பஞ்சை இழுக்கிறாய்
பாத விரல்நகம் பல்லால் கடிக்கிறாய்
அடுக்கும் கறியை அலக் கழிக்கிறாய்
அல்லும் எல்லும் இந்தப் பொல்லாங்கு செய்கிறாய்.
(கோட்டிகள் பண்ணாதே)

எச்சியைத் திண்டாக்கால் இல்லாத நோய்வரும்
எவர் திண்டாலும் ஈளைக் கசம்வரும்
நச்சு வீக்கம் நரம்புத் திமிர்வரும்
நாள் செண்டால் உயிர்மீட்டாத சாவுவரும்.
(கோட்டிகள் பண்ணாதே)

- நாட்டார் பாடல் -

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| கோட்டி | - | குழப்படி |
| பண் | - | இசை, இசைப்பாட்டு |
| அல் | - | இரவு, இருள் |
| எல்லு | - | பகல், சூரியன் |
| பொறிகலங்கல் | - | பயப்படுதல் |

## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. எலிகள் வீட்டில் செய்கின்ற குழப்படிகள் எவை?

2. ''தேங்காய்ப் பாதியில் சித்திரம் கொத்துகிறாய்'' என்பதன் மூலம் நீர் விளங்கிக் கொள்வதென்ன?

3. எலியைக் கவிஞர் எதற்கு உவமிக்கிறார்?

4. எலியால் எச்சில்படுத்தப்பட்ட உணவை உண்பதனால் ஏற்படும் நோய்கள் எவை?

5. பாட்டில் கையாளப்பட்ட பேச்சுவழக்குச் சொற்களை நியம வடிவில் தருக.

   அ) இளனி -

   ஆ) எச்சி -

   இ) செண்டால் -

   ஈ) திண்டால் -

6. மக்களை ஏமாற்றும் இயல்புடையது எலி என்ற கருத்தைத் தரும் பாடல் வரியைக் குறிப்பிடுக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

வீட்டில் எலியினால் விளையும் கேடுகள் தொடர்பான தகவல்களைத் திரட்டிக் கலந்துரையாடுங்கள்.

# உருவக அணி

நீலவானப் பொய்கை
சூரியப் பந்து
கோபத் தீ

மேலேயுள்ள தொடர்களை அவதானிப்போம். இங்கு வானம், சூரியன், கோபம் ஆகியவற்றை வர்ணிப்பதற்கு முறையே பொய்கை, பந்து, தீ என்பன பயன்படுத்தப்பட்டுள்ளன. இங்கு வானம், சூரியன், கோபம் என்பன உவமேயங்கள் ஆகும். பொய்கை, பந்து, தீ என்பன உவமானங்கள் ஆகும்.

வானம் பொய்கையாகக் கூறப்பட்டுள்ளது (வானம் ஆகிய பொய்கை)
சூரியன் பந்தாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (சூரியன் ஆகிய பந்து)
கோபம் தீ எனப்பட்டுள்ளது (கோபம் ஆகிய தீ)

இவ்வாறாக ஒன்றை இன்னொன்றாக உருவகித்துக் கூறுதலை உருவக அணி என்கிறோம்.

| |
|---|
| உவமானம் (வர்ணிக்க/விபரிக்கப்படவேண்டிய விடயம்) உவமேயம் (தெரிந்த பொருள்) ஆகிய இரண்டிற்கும் வேறுபாடு இல்லாமல் தோன்ற உவமேயத்தில் உவமானத்தை ஏற்றிக்கூறல் உருவகம் எனப்படும். |




**பின்வரும் பாடல்களில் இடம்பெற்றுள்ள உருவக அணிகளை இனங்கண்டு எழுதுக.**

1. மதியும் சூரியனும் என்ற இரு
        மாயப் பரிபூட்டி
   விதியாம் தேரினிலே காலதேவன்
        விரைந்து செல்லுகிறான்.

2. காலமாம் கற்பகத்தில் தோன்றி மலர்ந்தே இன்பம்
கமழும் மறுமலர்ச்சித் தேன் சொரிந்து
ஞாலமீது இருபதாம் நூற்றாண்டில் தமிழ்
நாட்டிற் புதுமை செய்த ஞானகவி

## அடுக்குத் தொடர்

ஏழை உழவன் வருந்தி வருந்தி உழைத்தான்.
மாசிப்பனியில் நனைந்தபடி நிற்கும் பெரிய பெரிய மரங்களைக் கண்டேன்.

மேற்குறிப்பிட்ட வாக்கியங்களில் இடம்பெறும் **வருந்தி வருந்தி**, **பெரிய பெரிய** முதலான தொடர்கள் எடுத்துக் கொண்ட பொருளை அழுத்தமாகச் சொல்லப் பயன்பட்டன. அத்துடன் இத்தொடர்களில் ஒரே சொல்லே அடுக்கி வருகின்றது. இதனையே அடுக்குத்தொடர் என்பர். அடுக்குத்தொடரைப் பிரித்தால் ஒரு சொல் தனித்து நின்றும் பொருள் தரும்.

அடுக்குத்தொடர்கள் சில கீழே தரப்படுகின்றன.

| | |
|---|---|
| அணிஅணி | உயரஉயர |
| ஏறியேறி | கரியகரிய |
| சிரித்துச்சிரித்து | சிறுகச்சிறுக |
| சுடச்சுட | சுற்றிச்சுற்றி |
| தேடித்தேடி | நடுங்கிநடுங்கி |




**1.** பொருத்தமான அடுக்கு மொழியைத் தெரிவு செய்து கோடிட்ட இடத்தை நிரப்பி வாக்கியங்களைப் பூரணப்படுத்துக.

1. மாலதி ................... புடைவையைக் கட்டி வந்தாள்.
(நீண்ட நீண்ட, வண்ண வண்ண, சிறிய சிறிய)

2. சீதாவின் கண்களில் இருந்து கண்ணீர்த்துளிகள் ............... சிந்தின.
(துளித்துளியாக, பாளம் பாளமாக, முத்து முத்தாக)

3. பாதகனிடம் அகப்பட்ட குழந்தை ............... என கத்தியது.
(ஐயோ ஐயோ, ஓடு ஓடு, வாழேன் வாழேன்)

4. இக்காலத்தில் பொருட்களின் விலை .................... செல்கின்றது.
(ஏறி ஏறி, விரைந்து விரைந்து, அடுத்து அடுத்து)

5. கிழக்குவானில் பரிதி ............. தோன்றியது.
(ஓடி ஓடி, மெல்ல மெல்ல, விடிய விடிய)

**2.** பின்வரும் அடுக்குத் தொடர்களை வாக்கியங்களில் வைத்து எழுதுக.

1. வழி வழி
2. மேலே மேலே
3. கற்றை கற்றை
4. பாடிப் பாடி
5. குமுறிக் குமுறி
6. கதறிக் கதறி
7. ஓட ஓட
8. ஆடி ஆடி
9. அழுதழுது
10. பெரிய பெரிய

# 17 நீரின்றி அமையாது உலகு

திருக்குறள் பெரும்பாலும் மெய்யறிவுச் சார்புடையது. கல்வி அறிவு சார்ந்த பூதப் பொருள்கள், அவை பற்றிய நிகழ்ச்சிகள்பற்றிப் பேசுவதை வள்ளுவர் தவிர்த்திருக்கிறார். ஆனால் ''வான் சிறப்பு'' மழை பற்றிப்பேசுகிறது. மழை இயற்பொருள் அமைப்பைச் (Physical System) சார்ந்ததே. அறிவியல் ஆய்வாளர் தம் முயற்சிகள் காரணமாக, பொறியியல் அளவுகள் காரணமாக, மழை பற்றிய நமது கல்வியறிவு (Knowledge) வளர்ந்துகொண்டே போகிறது. மேலும் வளரும். வள்ளுவர் காலச் சமுதாயத்திற்கு, மழை பற்றிய இன்றைய தெளிவின் ஒரு சிறுபகுதி மட்டுமே இருந்திருக்கும். வான் சிறப்பு என்ற தலைப்பில் வள்ளுவர் மழையின் இன்றியமையாமையைப் பற்றி மட்டுமே கூறுகிறார். அதன் நிகழ்வின் கூறுபாடுகள் பற்றிப் பேசவில்லை. மனித சமுதாய வாழ்விற்கு நீரின் தேவை இருக்கும் வரை, வள்ளுவரின் 'வான் சிறப்பு' ஏற்கப்படுவதாகவே இருக்கும்.

வான் சிறப்பு அதிகாரத்தில் வரும் பத்துக் குறள்களில் ஒன்று குறிப்பாக நமது கவனத்தைக் கவர்கிறது.

**நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்**
**வானின்றி அமையாது ஒழுக்கு**

என்பது வான் சிறப்பில் கடைசியாக வரும் குறள். இதற்கு உரை கூறவந்த பரிமேலழகர், ''எவ்வகை மேம்பட்டார்க்கும் நீரையின்றி உலகியல் அமையாதாயின், அந் நீர் இடையறாதொழுகும் ஒழுக்கும் வானையின்றியமையாது'' என்கிறார். இக்குறளுக்கு, ''நீரையின்றி அமையாது உலகாயின் எத்திறத்தார்க்கும் மழையையின்றி ஒழுக்கம் நிரம்பாது என உரைப்பாரும் உளர்'' என்றும் பரிமேலழகர் கூறுகிறார். பேராசிரியர் மு.வ. தமது உரையில் மேலே இரண்டாவதாகக் குறிப்பிட்டுள்ள பொருளையே கூறகிறார். பரிமேலழகர் உரையே முறையானதாகப்படுகிறது. இந்தக் குறளின் மூலம் 'மழையின்றி உலகில் நீர் இல்லை' என்ற கருத்துத் தெளிவாகக் காணப்படுகிறது.

மழையின்றி நீரில்லை என்பது பெரிய கண்டுபிடிப்பாகுமா? என்ற கேள்வி எழலாம். இன்று அறிவியல் துறையில் ஈடுஇணையின்றி விளங்கும் மேலைநாடுகளில் இதைப்பற்றி 17 ஆவது நூற்றாண்டுவரை நிலவி வந்த கருத்தை இங்கு கூறுவது பொருத்தமானதாகும். பொதுவாக உலகில் பல இடங்களில் பல உயிர்ஊற்றுகள்(Life Springs) காணப்படுகின்றன. எண்ணற்ற உயிர் நதிகள் (Perennial Rivers) ஓடுகின்றன. இவற்றில் வருடத்திற்கு 365 நாள்களிலும் நீருக்குப் பஞ்சம் இல்லை. மழை நாள்தோறும் பெய்யும் ஒன்று அன்று. எத்தனையோ நாடுகளில் வருடம் முழுவதுமாகச் சேர்ந்து ஒரு சில மாதங்கள் மட்டுமே மழை பெய்கிறது. நமது நாட்டின் நிலையும் அதுவே. பல மாதங்கள் வறண்டவையாகவே வந்து போகின்றன. அப்படி இருக்க, ஊற்றுகளிலும் நதிகளிலும் தொடர்ந்து தண்ணீர் எப்படி வருகிறது? என்ற கேள்வியை மேலை நாட்டுச் சிந்தனையாளர்கள் 2500 ஆண்டுகட்கு முன்பே எழுப்பினர். மேலும் அவர்கள் தங்களுடைய யூகத்தினால் தெரிந்துகொண்ட அளவில் மழையினால் வரும் நீரைவிட, வருடம் முழுவதும் ஓடும் நதி நீரும் வருடம் முழுவதும் ஓடும் ஊற்றின் நீரும் அளவில் அதிகம் என்று நம்பினார்கள். இந்த நம்பிக்கை 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை இருந்தது. இரண்டு வகையான தத்துவங்கள் மேலை நாடுகளில் நிலவி வந்தன.

கடலில் இருக்கும் நீர் நிலத்திற்கு அடியில் இருக்கும் குகைவழிகள் மூலமாக நிலத்திலிருந்து மலைப்பகுதிகளை அடைந்து அங்கு மலைகளின் அழுத்தம் காரணமாக ஊற்றாக வெளிவருகின்றது என்பது ஒரு நம்பிக்கை. இந்த நம்பிக்கையைப் பிளேட்டோவும் கொண்டிருந்தார். ஆனால் இது ஓர் ஐயத்திற்கு இடம் அளிக்கிறது. கடலில் இருக்கும் நீரே நிலத்தினடியில் குகைவழிகள் மூலம் மலைவரை சென்று அங்கிருந்து ஊற்று நீராக வருவதாயின் அந்த ஊற்று நீர் உப்பு நீராக இருக்க வேண்டும். ஊற்று நீர் உப்பு இல்லாதிருப்பது எப்படி? இந்தக் கேள்விக்குப் பலவிதமான காரணங்கள் கூறப்பட்டன. அவற்றுள் ஒன்று அரிஸ்டோட்டிலால் கூறப்பட்டதாகும். கடல் நீர் ஆவியாக மாறுகிறது. அந்த ஆவி மேகமாக வானில் மிதந்து நிலத்திற்கு வந்து மழையாகப் பொழிகிறது. இது எல்லோரும் அறிந்த ஒன்று. இதைப்போலவே ஆவியாக மாறும் நீரின் ஒரு பகுதி நிலத்தின் அடியில் இருக்கும் குகை வழிகள் மூலமாக மலையில் பாறைகள் வரை சென்று அங்கு மலைச் சரிவுகளில் ஊற்றாகவும், நதியின் ஆரம்ப இடமாகவும் அமைகிறது என்று சொன்னார். கி.மு. முதல்

நூற்றாண்டில் வாழ்ந்த லுக்ரெட்டியுஸ் (Lucretius) கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த பிளினி (pliny) போன்ற ரோமன் அறிஞர்களும் பிளேட்டோவின் விளக்கத்தினை ஏற்றுக்கொண்டனர். கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த செனகா (Seneca) அரிஸ்டோட்டிலின் தத்துவத்தை ஏற்றுக் கொண்டார். மத்தியகாலப் பகுதிவரை மேலைநாட்டுத் தத்துவ ஞானிகள் அனைவரும் ஊற்றுகள் அனைத்தும் கடலில் இருந்து நிலத்திற்கு அடியில் வரும் நீரின் மூலம் உருவாகின்றன என்று நம்பினர். மக்களுக்கும் அவ்வாறே கூறினர். ஓரளவிற்கு மேலை நாட்டு அறிஞர்களில் மழை ஒன்றே நீருக்குத் தோற்றுவாய் என்ற கருத்தை முதலில் உணர்ந்தவர் லியோனாடோ டாவின்ஞ்சி (Leonardo davinci - 1452 - 1519) என்றுதான் கூறவேண்டும். பிற்கால அறிஞர்களில் இக்கருத்தைக் கூறியவர்களில் குறிப்பிடத்தக்கவர் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த பாலிசி (Palissy) என்பவர் ஆவார். அவர் ஏழையாகப் பிறந்தவர். கிரேக்க, இலத்தீன் மொழிகளைக் கற்றவர் அல்லர். எனவே, அந்த இலக்கியங்களால் பாதிக்கப்படாது சுயமாகச் சிந்தித்தார். அவர் கீழ்க்கண்டவாறு எழுதினார்.

‘‘மண்ணும் வானமும் தவிர, நான் பார்க்கவும் படிக்கவும் எனக்கு நூல்கள் இல்லை. இவை இரண்டும் எல்லோருக்கும் கிடைக்கும் நூல்கள் ஆகும். …….. நான் ஊற்றுகள் எப்படி உருவாகின்றன என்பதைப் பற்றி நீண்ட காலம் சிந்தனையைச் செலுத்தினேன். இறுதியாக மழை ஒன்றுதான் ஊற்றுகளுக்கு அடிப்படை என்ற முடிவுக்கு வந்தேன்.’’

17ஆம் நூற்றாண்டில் பெரோலட் (Perrault) என்பவரும் எட்மே மாரியோட் (Edme Marriotte) என்பவரும் இந்தப் புதிருக்கு இறுதியான விடை கண்டவர் ஆவர். பெரோலட் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்தவர். சேய்ன் (Seine) நதியின் நீர்ப் பகுதியில் பெய்யும் மழையையும் அந்தப் பகுதியில் ஓடும் நீரையும் கணக்கிட்டார். அதன்படி பெய்யும் மழை நீர் நதியில் ஓடும் மொத்த நீரை விட ஆறு மடங்கு அதிகம் ஆகும் என்று தெளிந்தார். இதே போன்றதொரு சோதனையை இந்த நதியில் வேறு இடத்தில் மாரியோட் (Marriotte) என்பவரும் செய்தார். அவர்கள் வாழ்ந்தது 17ஆம் நூற்றாண்டு.

இந்தக் காலப்பகுதியில்தான் நீரின்றி அமையாது உலகு எனின், அந்த நீரும் மழையின்றி அமையாது என்பது உறுதியாக்கப்பட்டது. இதே கருத்தை 2000 ஆண்டுகளுக்கு முன்பே இவ்வளவு தெளிவாக வள்ளுவர் கூறியிருப்பது அந்தக் காலத் தமிழ் மக்களுடைய அறிவு நிலையைக்

காட்டுகிறது என்பதோடு வள்ளுவர் அன்றைய சூழ்நிலையில் வளர்ந்திருந்த கலைகள் அனைத்தையும் ஈடுபாட்டுடனும் தெளிவுடனும் அறிந்திருந்தார் என்பதையும் காட்டுகிறது. வான்சிறப்பு என்ற தலைப்பில் இயற்பொருள் அமைப்பில் (Physical System) கல்வி அறிவுத் (Knowledge) துறையைச் சேர்ந்த பொருள் பற்றிப் பேசுகிறார் என்றாலும் அறிவு வளர்ச்சியின் அடிப்படையில் மாற்றங்கட்கு உட்படாத நிலைத்த உண்மையையே கூறிச் சென்றிருக்கிறார். அவரது இந்த அணுகுமுறை நூல் முழுவதும் அவர் பேசும் எல்லாத் தலைப்புகளிலும் விரவி வருவதைப் பார்க்கலாம்.

**– வா. செ. குழந்தைசாமி**
'வாழும் வள்ளுவம்'

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| பூதப்பொருள் | - | சடப்பொருள் |
| விரவி | - | பரவலாக |
| அறிவயில் | - | விஞ்ஞானம் |

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. 'வான்சிறப்பு' என்னும் அதிகாரத்தில் வலியுறுத்தப்படும் கருத்து யாது?
2. ''நீரின்றி அமையாது...'' எனும் குறளுக்கு பரிமேலழகர் தரும் விளக்கத்தினை எழுதுக.
3. மழை எவ்வாறு உருவாகின்றது என்பதற்கு அரிஸ்டோட்டில் தரும் விளக்கத்தினைக் குறிப்பிடுக.
4. வள்ளுவரது சிறப்பினை இக்கட்டுரை எவ்வாறு வலியுறுத்திக் காட்டுகிறது?
5. பண்டைய காலத்து தமிழர்களின் அறிவுநிலை தொடர்பாக கட்டுரை எடுத்துரைப்பது என்ன?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

''நீரின் முக்கியத்துவம்'' பற்றி கட்டுரை ஒன்று எழுதுங்கள்.

# சொற்புணர்ச்சி I

***கடல் + கரை → கடற்கரை***

**'கடல், கரை'** என்பன இருவேறு சொற்கள் ஆகும். அந்த இரு சொற்களும் இணைந்து **'கடற்கரை'** என்ற சொல் உருவாகியுள்ளது.

சொற்கள் பொருள் தரும் வகையில் ஒன்றோடு ஒன்று இணைந்து வருவதே ''சொற்புணர்ச்சி'' எனப்படும்.

தரம் 7 இல் சொற்புணர்ச்சிவகைகள் தொடர்பாகக் கற்ற விடயங்களினை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.



## பயிற்சி

**1.** பின்வரும் சொற்களைப் பொருள்மாறுபடாத வகையில் பிரித்து எழுதுவோம்.

1. கோப்பிப்பழம்
2. கிராமியக்கலாசாரம்
3. தாலாட்டுப்பாடல்
4. நீர்க்குமிழி
5. பாற்கடல்
6. அரசவை
7. நெருப்புக்கொள்ளி
8. குடியகல்வு
9. கற்பனைச்சுவை
10. தெய்வவழிபாடு
11. ஒழுங்கீனம்
12. அருஞ்செல்வம்
13. கடவுட்பக்தி
14. சிங்காசனம்
15. முரசொலி
16. பொற்காசு
17. தவச்சாலை
18. ஓலைச்சுவடி
19. மனக்கவலை
20. அறிவுத்துறை

**2.** பின்வரும் சொற்களைப் பொருள் தரத்தக்க வகையில் சேர்த்து எழுதுக.

1. மா + காய்
2. குளம் + கரை
3. பொன் + காப்பு
4. கல் + வீடு
5. முள் + செடி
6. நாடு + பற்று
7. பனை + ஓலை
8. நீலம் + வானம்
9. கடல் + அலை
10. அன்பு + உள்ளம்
11. மரம் + வேர்
12. வாழை + மடல்
13. ஆறு+ சுவை
14. மரம் + வேலி
15. பழம் +குலை
16. காய் + கனி
17. பால் + சோறு
18. முருங்கை + இலை
19. கலை + மகள்
20. தென்னை + சோலை

**3.** வினாக்கள் 1, 2 இல் இருந்து பொருத்தமான உதாரணங்களைத் தெரிவு செய்து கீழ்வரும் அட்டவணையினைப் பூர்த்தி செய்க.

| இயல்பு புணர்ச்சி | விகாரப்புணர்ச்சி | | |
|---|---|---|---|
| | தோன்றல் | திரிதல் | கெடுதல் |
| 1. | | | |
| 2. | | | |
| 3. | | | |
| 4. | | | |
| 5. | | | |

## விளம்பரம்

நாம் அன்றாட வாழ்வில் பத்திரிகைகள், தொலைக்காட்சி முதலியவற்றின் மூலம் பல விளம்பரங்களைப் பார்த்து வருகிறோமல்லவா? விளம்பரம் என்பது இன்று அதிக தொழில் வாய்ப்புக்களைப் பெற்றுக்கொடுக்கும் ஒரு தனித்துறையாக வளர்ந்துள்ளது. எனவே விளம்பரம் தொடர்பான அறிவைப்பெற்று, விளம்பரம் எழுதுவதற்கான எமது திறனை வளர்த்துக் கொள்வது அவசியமாகிறது.

தரம்7 இல் விளம்பரம் எழுதுவது தொடர்பாகக் கற்றுள்ளோமல்லவா? அவற்றை நினைவுபடுத்திக் கொள்வோம். விளம்பரம் எளிமையான தாகவும் கவர்ச்சிமிக்கதாகவும் இருக்கும். எனவே விளம்பரம் எழுதப் படுகின்ற மொழியும் அத்தன்மையுடையதாக இருத்தல் அவசியமாகும்.

## பயிற்சி

பின்வரும் நோக்கங்களுக்குப் பொருத்தமான விளம்பரங்களை எழுதுக.

★உங்கள் பாடசாலைத் தமிழ்மன்றம் வெளியிடும் ஆண்டுமலரை விற்பனை செய்வதற்காக அறிமுகப்படுத்தல்.

★உங்களின் கிராம சனசமூக நிலையம் நடாத்தவுள்ள சுயதொழில் ஊக்குவிப்பு கைவினைக் கண்காட்சியை காண்பதற்கும் விற்பனைக்கு வைக்கப்படும் பொருள்களை வாங்குவதற்கும் மக்களை அழைத்தல்.

★சந்தையில் புதிதாக அறிமுகமாகும் பழரசத்தினை வாங்குவதற்கு மக்களைத் தூண்டுதல்.

★ சலவை இயந்திரத்தின் விற்பனையை அதிகரித்தல்.

# 18 குமணன் நாடகம்

**உறுப்பினர்**

குமணன் : முதிரம் என்ற நாட்டு மன்னன்.

இளங்குமணன் :குமணனுடைய தம்பி

பெருந்தலைச் சாத்தனார், பெருஞ்சித்திரனார்: புலவர்கள்
மந்திரி, பிரதானிகள், செம்பியன், காரி, பெருமாள், வானதி, முள்ளி முதலிய ஊர்மக்கள், வழிப்போக்கன், வள்ளுவன் முதலியோர்.

## காட்சி 1

(களம் : குமணனது அவைக் களம். (குமணன், மந்திரி பிரதானிகளுடன் வீற்றிருக்கிறான். பரிசிலர் வந்து பரிசில் பெற்றுச் செல்கின்றனர். இளங்குமணன் வருகின்றான்.)

உறுப்பினர் : குமணன், மந்திரி பிரதானிகள், புலவர்கள், இளங்குமணன்)

குமணன் : தம்பி, வாடிய முகத்துடன் நீ இங்கு வரக் காரணம் என்ன?

இளங்குமணன்: அண்ணா, நம் நாட்டைப் பற்றிய கவலை; உங்களால் நடைபெற்றுக்கொண்டு இருக்கும் ஒழுங்கீனங்களைப் பற்றிய கவலை; உங்களுடன் அவைகளைப் பற்றிப் பேசவே வந்திருக்கின்றேன்.

குமணன் : தம்பி, நீ நினைத்து வந்த அனைத்தையும் மறைக்காமற் சொல்லு. நாட்டின் துயர் எனது துயர்; மக்கள் துன்பம் எனது துன்பம்; எல்லாவற்றுக்கும் மேலால் உனது கவலை எனது பெருங்கவலை.

இளங்குமணன்: அண்ணா, நீர் நம் நாட்டின் செல்வமனைத்தையும் வீணாகச் செலவு செய்கின்றீர். இந்தப் புலவர்களால் நம் நாட்டுக்கு என்ன பயன்? பொருள் வளங்குன்றினால் நமது படைவளமும் குன்றும். அப்போது பகைவர் இலகுவாக நம்மைத் தாக்கி வெற்றி பெறுவர். 'ஈகை பெரிது; ஈகை சிறந்தது' என்று தமிழ்ப் புலவர்களைவிட வேறு யார் கூறுகிறார்கள்? ஈகையாளனையும் ஈகையின் சிறப்பையும் பற்றி வானளாவப் புகழ்ந்து கூறுவதேன்? ஈகையாலேயே தம் வாழ்வு செழிக்குமென்பது அவர்களுக்கு நன்கு தெரியும். அண்ணா, நீர் செலவிடுவதெல்லாம் எமது முன்னோர் தேடிக் குவித்த அருஞ் செல்வம். அதனை நீர் இவ்வாறு வீணாக்குதல் எவ்வாறு பொருந்துமென்பதைச் சிறிதாவது சிந்தித்துப் பார்த்தீரா?

குமணன்: தம்பி, மிக அவசரப்பட்டு ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டாய்.

இளங்குமணன்: இல்லை, அண்ணா இல்லை. நெடுநாள்களாகக் கண்டு, கேட்டு, ஆராய்ந்து, தெளிந்து, தேறிய பின்புதான் நான் உங்களிடம் வந்திருக்கிறேன். இனி நான் யோசிப்பதற்கு ஒன்றும் இல்லை. நீர்தான் இவற்றைச் சிந்தித்து உடனே ஒரு முடிவுக்கு வரல் வேண்டும். உமது செயலின் விளைவு உம்மோடு மட்டும் நின்றுவிடாது. எங்கள் பரம்பரை முழுவதையுமே துன்பத்துள் ஆழ்த்துவதாகும். ஈதலைப்போன்று ஒரு மன்னவனுக்குத் தீமை தரவல்ல கெட்ட குணம் வேறு ஒன்றுமில்லை. நீர் எமது நாட்டையும் எமது குடிமக்களையும் எமது வம்சத் தையும் மறந்து இப்படிச் செய்தல் சரியன்று. முறைப்படி செய்ய உம்மால் முடியாவிட்டால் இராச்சியத்தை என்னிடம் தந்து விட்டு, நீர் கானகம் செல்வதுதான் சரி. இல்லையேல் நாட்டுக்காகப் போரினை மேற்கொண்டு நமது உடன் பிறப்பு முறையினையும் நான் தியாகம் பண்ணவேண்டியவனாவேன்.

குமணன்: தம்பி, வேண்டியதில்லை. நமக்குள்ளே போரா? அது நமது எதிரிகளுக்கு நகைப்பைக் கொடுக்குஞ் செயலாகும். கவலைப்படாதே. இராச்சியத்தை உனக்குத் தந்துவிட்டு நான் கானகம் செல்கின்றேன். அஃதிருக்க, நீ ஈகையை இகழ்ந்தாய், தமிழ்ப்புலவர்களை மிகவும் அவமதித்துப் பேசினாய். நிலையில்லாத செல்வத்தை மிகவும் போற்றினாய். உனது அறியாமைக்கு நான் மிகவும் வருந்துகின்றேன். ஈகை இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தைத் தருவது. மின்னலையும் நீர்க்குமிழியையும் போல நிலையில்லாததாகிய செல்வம் நம்மிடத்தில் வந்துவிட்டால் அதனை மற்றவர்களுக்கும் ஈந்து நிலையுடையதாகிய அறத்தைத் தேடிக் கொள்ளுதலே அறிவுடைய செயலாகும். நாம் பொருளும் புகழும் அதிகாரமும் படைத்த மன்னவர்கள் தாம். ஆனால், கற்று வல்ல புலவர்கள், தாம் செல்லுந் தேயமெல்லாம் சிறப்புப் பெறுகின்றார்கள். நாம் வாழவென்றே நமக்கு அறிவுரை கூறி, நாட்டை நல்வழிப்படுத்தும் கல்விச் செல்வர்களாகிய தமிழ்ப் புலவர்களைக் குறைவாக எண்ணாதே. இளங்குமணா, இதோ இந்த மணிமுடியை உனக்கே நான் சூட்டுகின்றேன் (தன் தலையி லிருந்து முடியைக் கழற்றித் தம்பியின் தலையி ற் சூட்டிச் செங்கோலையும் வாளையும் அவன் கையிற் கொடுக்கிறான்) அரசே, நீ நீடூழி வாழ்வாயாக! அன்பு, கொடை என்பவற்றை ஒருபோதும் கை நெகிழ விடாதே. அமைச்சர்களுடைய ஆலோசனைகளைத் தட்டாதே. கடவுட் பக்தி உன்னிடம் என்றும் இருப்பதாக! அப்படியானால் குறையொன்றுமே வராது. இவ்விராச்சிய பாரத்தை என்னிடமிருந்து பெற்றுக்கொண்டு, மேலான தாகிய துறவற வாழ்வை எனக்குத் தந்த உன்னை, எனது சற்குரு என்றே நான் மதிக்கின்றேன். இப்போதே தவம் செய்தற்காகக் காட்டிற்குப் போகின்றேன். நீ பல்லாண்டு வாழ்வாயாக!

(குமணன் வெளியேறுகின்றான். சபையிலிருந்தோர் எல்லோரும் துயரந் தாங்காது, தாமும் அவன் பின்னே செல்கின்றனர்)

# காட்சி 2

(களம்: முதிரநகர்ப்புறத்து வீதியொன்றின் அருகேயுள்ள ஓர் ஆலமரத்தடி.

உறுப்பினர்: காரி, முள்ளி, பெருமாள், செம்பியன் பொன்னி, வானதி, வள்ளுவன் முதலான ஊர்மக்கள் சிலர்)

பெருமாள்: கேட்டீர்களா சம்பவத்தை! கண்ணிலுமினிய நம் குமண வள்ளலை அந்தப் பாவி காட்டுக்குத்தான் துரத்தினான். அவரை அங்கேயாவது வாழவிடக் கூடாதா? கேட்ட உடனே மணிமுடியைத் தனக்குத் தந்துவிட்டு அவர் காட்டுக்குச் சென்றதிலே ஏதோ சூது இருக்கிறதாம். ஆனபடியால், குமணனைக் கொன்றுவிட வேண்டுமாம். அப்பொழுதுதான், தன் நிம்மதியக வழ ல மம் . இவ்வறு இன்று அரசவையிலே புலம்பினானாம் அந்தப் பாவி இளங்குமணன்.

செம்பியன்: ஐயோ! மந்திரிமார் அதனைத் தடுக்கவில்லையா?



காரி: (செம்பியனைப் பார்த்து) யார் பேசுவார்கள்? வீடு கொளுத்துகிற இராசாவுக்கு நெருப்புக்கொள்ளி எடுத்துக் கொடுக்கும் மந்திரிகள் அவர்கள். மந்திரிகளா? அவர்கள் சரியான மந்திகள் தான்.

பெருமாள்: அப்படிச் சொல்லாதே! எதிர்த்துப் பேசுதல் என்ற பேச்சுக்கே அங்கே இடமில்லை. மன்னன் இட்டது சட்டம். மந்திரிமார் அவனை எதிர்த்து எதுவும் பேசக்கூடாது.

வானதி: இந்த ஆண்களே கோழைகள்தான். நான் சமைத்துப் போடப் போட நன்றாகத் தின்று, சும்மா கொழுத்துப் போயிருக் கிறார்கள். அரி இருந்து ஆண்ட சிங்காசனத்தில் இந்தக் குள்ள நரி வந்து குந்திக்கொண்டது. எங்கள் குமண வள்ளலையா கொல்லப் போகிறான்!

காரி: இளங்குமணனுக்கு எதிராக நாம் ஓர் உள்நாட்டுக் கலகத்தை ஆரம்பிப்போமா?

முள்ளி: வேண்டாம். இப்படிப் பேசுதல், நம் குமண வள்ளலுக்குப் பிடிக்காது. இளங்குமணனுக்கு எதிர்பேசாது நாம் வாழ்வது தானாம் தமக்கு நாம் செய்யக்கூடிய கைம்மாறென்று அவர் காட்டுக்குப் போனவன்றே நம்மிடம் சொன்னாரல்லவா! அது தெரியாமலா நாங்கள் சும்மா இருக்கின்றோம்?

பெருமாள்: அதோ கேளுங்கள். நான் அரசவையிலே கேட்டுவந்த அந்தக் கொடிய செய்தியை. வள்ளுவனுடைய முரசொலி கூறுகின்றது.

வள்ளுவன்: (தண்டோராப் போட்டு நிறுத்தி) கேளுங்கள் மகா சனங்களே! இளங்குமண மகாராசா உங்களுக்கு ஒரு கோடி பொற்காசு பரிசு தருகிறார். குமணனது தலையை வெட்டிக் கொணர்ந்து கொடுப்போருக்கு அந்தப் பரிசு கிடைக்கும்.

(டும்! டும்! டும்! - முரசொலி)

# காட்சி 3

(களம் : காட்டு வழி மற்றும் காட்டில் குமணனது தவச்சாலை)

உறுப்பினர்: பெருஞ்சித்திரனார், பெருந்தலைச்சாத்தனார் என்ற புலவர்கள், ஒரு வழிப்போக்கன், குமண வள்ளல்)

பெருஞ்சித்திரனார்: (காட்டு வழியே வந்துகொண்டிருக்கும் பெருந்தலைச் சாத்தனாரை நோக்கி) நண்பரே, எங்கே இந்தப் பக்கம்? ஏன் மிக வாட்டத்துடன் காணப்படுகின்றீர்?

பெருந்தலைச்சாத்தனார்: புலவர்களுக்கு ஏன் வாட்டம் உண்டாகிற தென்பதை நீங்கள் அறிவீர்களா? புலவர்களுக்கு வறுமை உரித்தன்றோ?

பெருஞ்சித்திரனார்: இதற்கேன் கவலை? முதிர நாட்டுக் குமணனுடைய பெயரை நீர் இதுவரையும் கேள்விப்பட்டதில்லையா? அவனை நீர் காணவேண்டியதுதான்; உடனே, உமது வறுமை வெயிலவனைக் கண்ட பனிபோல நீங்கும். தயவுசெய்து அங்கே போம். இதுவே வழி, நான் சென்று வருகின்றேன்.

பெருந்தலைச்சாத்தனார்: சென்று வாரும் (நின்று சிந்தித்தபடி ஒரு பாடலை ஓலையில் எழுதுகின்றார்) குமணனைக் காண முதிரநகர் செல்வேன் (வழிப்போக்கன் ஒருவனை இடையிற் கண்டு) அப்பா, குமண மகாராசாவுடைய இராசதானிக்கு அதிக தூரம் போக வேண்டுமா?

வழிப்போக்கன்: (அவரை உற்றுப் பார்த்து) நீர் ஒரு புலவரா? ஊருக்குப் புதியவர்போலத் தெரிகின்றது. குமணவள்ளல் இப்பொழுது இராசதானியில் இல்லை. அவர் மனைவி மக்களுடன் காட்டிலே இருக்கிறார்.

பெருந்தலைச்சாத்தனார்: ஆ! அவருக்கு ஏன் அக்கதி நேர்ந்தது? பகை அரசர்கள் அவரது நாட்டைக் கைப்பற்றி விட்டார்களா? போரிலே தோற்றுவிட்டாரா?

வழிப்போக்கன்: இல்லை, இல்லை. குமண அரசரது தம்பி இளங்குமணன் என்னும் பாதகனால் அக்கதி நேர்ந்தது. குமண அரசர் புலவர்களுக்குப் பொருளைக் கொடுப்பதைப் பொறாத இளங்குமணனது கொடுமையால் அவர் இராச்சியத்தை அவனுக்குக் கொடுத்துவிட்டுக் காட்டுக்குப் போய் விட்டார்.

பெருந்தலைச்சாத்தனார்: அப்படியா? (தனக்குள்) புலவர்களை ஆதரித்த அப்பெருமகனை நான் பார்க்கவேண்டும். (போகிறார்)

(குமணனது தவச்சாலை)

குமணன்: (புலவரைக் கண்டதும் எழுந்து வணங்கி) கவிஞர் பெருமானே வருதீர்! உம்மை இங்கே கண்டது எனது புண்ணியமேயாகும். இப்படி அமருவீராக.

பெருந்தலைச்சாத்தனார்: (குமணனுக்குப் பக்கத்தில் அமர்ந்தபடியே) புலவர்தம் மிடி அகற்றும் புரவலனே, நீ வாழி! நீடூழி வாழி! நின்னைக் கண்டு என் துயர்தீர்க்க வந்தேன். உனது பெருமையையும் வள்ளன்மையையும் கேள்வியுற்று என் வறுமையை நீக்க வந்தேன்.

(குமணன் புலவரது கையிலிருந்து ஓலைச் சுவடியை வாங்கி) ''அடுப்பிலே நெருப்பு மூட்டி எத்தனையோ நாள்கள். சாம்பலுக்குப் பதிலாகக் காளான் தான் அடுப்பிற் பூத்துக் கிடக்கின்றது. பச்சிளங் குழந்தை பாலில்லாத தாயிடம் பாலைச் சுவைத்துப் பார்த்துவிட்டு முகத்தைப் பார்க்கிறது. அந்தப் பரிதாபக் காட்சியைக் காணச் சகிக்காத என் மனைவி என் முகத்தைப் பார்க்கிறாள். நான், நின் முகத்தைப் பார்க்க வந்தேன்'' (படிக்கிறான்)

குமணன்: (படித்துவிட்டு) ஆ! எத்தகைய கொடிய வறுமை! இவ்வறுமை நீங்க, நான் அரசனாயிருந்த காலத்தில் நீர்வந்தீரில்லையே! (சிறிது யோசிக்கிறான்) ஆயினும் என்ன? (தன் உடைவாளை எடுத்துப் புலவரிடம் நீட்டி) இதோ! என் தலையை வெட்டி எடுத்துக் கொண்டுபோய் எனது தம்பியிடம் கொடும். கோடி பொன் அதற்குப் பரிசாகத் தருவதாய் அவன் பறை சாற்றியிருக்கின்றான். மறுக்காமற் செய்யும். உமது வறுமை

நீங்கும். எனக்குப் புகழும் புண்ணியமும் உண்டாகும். என் தம்பியின் மனக்கவலையும் நீங்கும் (என்று கூறிக்கொண்டு தலை குனிகின்றான்).

பெருந்தலைச்சாத்தனார்: அப்படியா செய்தி? இப்போது தான் எனக்கு விளங்குகின்றது. சரி வாளைத் தா! (வாளை வாங்கிக்கொண்டு சிறிது யோசிக்கின்றார்) குமணா! எழுந்திரு! இனி, உன் தலை என்னுடையது. நீ கூறியது உண்மைதானா என்று யான் அறிந்து வரும்வரை இத்தலையைப் பாதுகாத்துத் தருதல் உன் கடமையாகும். தலை பத்திரம். நான் சென்று வருகின்றேன்.

(பெருந்தலைச்சாத்தனார் சிற்பியர் சாலை சென்று குமணனுடைய தலை போன்ற ஒன்றைச் செய்து, சீலையால் மூடிக்கொண்டு இளங்குமணனை நோக்கிச் செல்கின்றார்)

## காட்சி 4

(களம் : இளங்குமணனது அவை

உறுப்பினர்: இளங்குமணன், மந்திரிமார், சேவகன், பெருந்தலைச் சாத்தனார்)

இளங்குமணன்: அமைச்சர்களே, சேனைத் தலைவரே, பிரதானிகளே, அண்ணனுடைய தலையைக் கொய்து வருவோர்க்குக் கோடி பொன் தருவதாக நான் பறை அறைவித்துப் பன்னெடு நாளாயினவே. இதுவரையும் ஏன் யாரும் முன்வரவில்லை? குமண அண்ணன், ஒருவர் கண்ணிலும் படாமல் மறைந்து வாழ்கின்றானா? அல்லது எனது பணத்துக்கு மதிப்பு இல்லையா?

இளங்குமணனின் வாயிற்காவலன்: (அரசனை அடைந்து) அரசே வாழ்க! யாரோ ஒருவர் குமணனது தலையுடன் வாசலில் நிற்கிறார். தங்களைக் காணவேண்டுமாம்.

இளங்குமணன்: ஆ. அப்படியா? உள்ளே வரச்சொல்.

பெருந்தலைச்சாத்தனார்: (விரைந்து உள்ளே புகுந்து) இளங்குமண வள்ளலே, நீ நீடூழி வாழ்க! இதோ யான் குமணனது தலையை வெட்டிக்கொண்டு வந்திருக்கின்றேன். கோடி பொன்னையும் கொடு. பசியால் எனது மனைவி மக்கள் துடி துடிக்கின்றனர். நான் உடனே போகவேண்டும். (மூடியிருந்த சீலையைச் சிறிது நீக்கித் தலையைக் காண்பிக்கிறார்).

இளங்குமணன்: ஐயோ! அண்ணா, என்ன கொடுமையைச் செய்தேன்! நான் பாவி! (முகத்தில் அறைந்துகொண்டு மயங்கி நிலத்தில் வீழ்கின்றான்).

மற்றெல்லோரும்: ஆ, குமணவள்ளலே! உனக்கு இக்கதியா நேர வேண்டும். (முகத்தை மறைத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுகின்றனர்)

சேவகன்: (புலவரைப் பார்த்து) பிசாசு பிடித்தவனே! உனக்கேன் இவ்வளவு பணத்தாசை? எங்கள் கண்ணான மன்னனைக் காசுக்காகக் கொன்று விட்டாயே! பாதகா! ஐயோ! ஏந்தலே! ஐயோ (அழுகிறான்)

பெருந்தலைச்சாத்தனார்: அரசே! பொறுக்கவேண்டும். எனக்குரிய பொன்னைத் தந்து, என்னை முதலில் அனுப்பி வையும்.

இளங்குமணன்: ஐயா! என் அண்ணனைக் கொல்லத் தூண்டிய அந்தக் கோடி பொன்னும் அதோ, இருக்கின்றது (சுட்டிக் காட்டிக் கொண்டே) அஃது உமதுகையைச் சேருமுன், நான் என் அண்ணனிருக்கும் இடத்தைச் சேரவேண்டும்.ஐயோ! அண்ணா! என்னை மன்னித்து, உன்னுடன் என்னையுஞ் சேர்த்துக்கொள்வாயா? (உடைவாளை எடுத்துத் தன் தலையை வெட்ட ஓங்குகின்றான். புலவர் பாய்ந்து அவன் கையைப் பிடித்துத் தடுக்கிறார்).

பெருந்தலைச்சாத்தனார்: அரசே, உனது பரம்பரைக் குணத்துக்கு மாறாக எப்படி நீ உன் அண்ணனைக் காட்டுக்கனுப்பினாய்? அவனை எப்படிக் கொல்லத் துணிந்தாய் என்று அப்போதே நான் சந்தேகப்பட்டேன். இளங்குமணா, இரத்தத் துடிப்பு என்பது இதுதானென்பதை நீ காட்டி விட்டாய். கெட்ட கூட்டத்தால் நீ புத்தி தடுமாறி இராச்சிய மோகங்கொண்டாய். அதனால் உனக்கு என்றும் அழியாத களங்கத்தையே தேடி வைக்கவுந் துணிந்துவிட்டாய். இப்போது உன் அண்ணனது வெட்டுண்ட தலையைக் கண்டதும் அங்கமெல்லாம் வாயாக அழுது துடிக்கின்றாய். உன் தலையைத் துணித்து வீழ்த்த, நீ ஓங்கிய வாள் இது வரை நீ, உனக்கும் உன் அண்ணனுக்கும் உனது பரம்பரைக்கும் இழைத்த களங்கம் அனைத்தையும் வெட்டி வீழ்த்திவிட்டது. இளங்குமணா, கவலைப்படாதே. (அவனது கண்ணீரைத் துடைத்து, கைவாளையும் பறித்து) கேள். புலவர்களையும் கலைஞர்களையும் நீ இகழ்ந்தாய். அவர்கள் நினைத்தால் இறந்து போனவர்களும் எழுந்து வருவார்கள்.

இளங்குமணன்: அப்படியா! புலவர் பெருமானே, என் அண்ணனை எழுப்பித் தரவல்லீரா! அவரை மீண்டும் நான் காண முடியுமா? அவரை அரியணை ஏற்றி மகிழ்தல் கூடுமா? குமண வள்ளலைக் கண்டு இந்நாட்டு மக்கள் பழையபடி மகிழ்ச்சி அடைவதை நான் காண முடியுமா?

பெருந்தலைச்சாத்தனார்: ஆம்! முடியும்! இந்தத் தலையை மீண்டும் பார். (சீலையை நீக்கிக் காட்டி) அழாதே! உற்றுப் பார்! உன் அண்ணனாரது அன்புக்குரிய மகுடத்தியாகி என்னும் சிற்பி, ஈழத்து மாந்தை நகரைச்சேர்ந்த ஒரு கலைஞன் செய்த கைபுனை வடிவம் இது. கலைஞனது கைபட்டதும் இஃது உயிருள்ள மனிதனது வெட்டுண்ட தலையைப்போலக் காட்சி தருகிறது. இத்தலை, புலவனான என் கைபட்டதும் உன் உள்ளத்தில் உணர்ச்சியைத் தூண்டியது, உனது உண்மை

அன்பையும் எழுப்பித் துடிக்கச் செய்கின்றது. ஈகை வள்ளலாகிய குமணனைக் கொல்ல யாருக்கு உள்ளம் ஒருப்படும்! ஈகையின் சிறப்பை இதிலிருந்தே உணர்ந்து கொள்வாயல்லவா! வா உன் அண்ணனைச் சென்று காண்போம். அவனைக் கொண்டுவந்து அரியணை ஏற்றுவோம். உன் கண்ணீரால் அவன் கால்களைக் கழுவி, உன்னைப் புனிதப்படுத்திக் கொள். (அனைவரும் காட்டுக்குச் சென்று குமணனைக் காண்கின்றனர்).



## காட்சி 5

(களம் : காடு, குமணனது தவச்சாலை

உறுப்பினர் : குமணன், பெருந்தலைச்சாத்தனார், இளங்குமணன், மந்திரி, பிரதானிகள், பொதுமக்கள்)

இளங்குமணன்: (ஓடிப்போய் குமணனது காலில் வீழ்ந்து) அண்ணா, என்னை மன்னித்தருளல் வேண்டும். அண்ணா, என்னை மன்னித்து ஆட்கொள்ளல் வேண்டும்.

குமணன்: (புலவரைப் பார்த்து) ஐயா, சாத்தனாரே! இதெல்லாம் என்ன! ஏன் இவர்களை இங்கே அழைத்து வந்தீர்!

புலவர்: அரசே, நான் இவர்களை அழைத்து வரவில்லை. இவர்கள்தான் என்னை இங்கே அழைத்து வந்தார்கள். இப்போது உம்மையுந் தம்மோடு வரும்படி அழைக் கிறார்கள்.

குமணன் : எங்கே?

இளங்குமணன்: அண்ணா, நாட்டிற்குச் செல்ல அழைக்கின்றோம். மீண்டும் அரசராக வருமாறு, உம்மை அழைக்கின்றோம். அண்ணலே, அறியாமையால் யான் செய்த பிழை யனைத்தையும் மன்னித்து என்னைப் பழையபடி தம்பியாக ஏற்று அரண்மனைக்கு எழுந்தருளுங்கள்.

குமணன்: தம்பி, எல்லாவற்றுள்ளும் உயர்ந்ததாகிய தவ வாழ்வை எனக்குத் தந்த என்னுடைய சற்குருவான நீ, ஒரு பிழையுமே எனக்குச் செய்யவில்லை. உலக பாரத்தை ஏற்குமாறு கேட்டு, இப்பொழுது என்னைத் துன்புறுத்துகிறாய். தம்பி, ஏன் இந்தக் கொடுமை?

(அனைவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு ஒன்றும் பேசமுடியாது நிற்கின்றனர்.)

புலவர்: குமணா. உனது தலையை நீ எனக்குத் தந்துவிட்டாய் அல்லவா? அதற்கு முடிசூட்டி உன்னை மன்னவனாகக் காண விரும்புகின்றேன். (இளங்குமணன் தனது முடியை எடுத்துப் புலவரிடம் கொடுக்கின்றான். புலவர், மணி மகுடத்தைக் குமணனுடைய தலையிற் சூட்டுகின்றார்.)

அனைவரும்: மன்னாதி மன்னன் குமண மகாராசா வாழ்க! பெருந்தலைச் சாத்தனார் புகழ் வாழ்க! இளங்குமண இளவரசர் என்றென்றும் வாழ்க!

(எல்லோரும் முதிரநகர் செல்கின்றனர்).

## அரும்பதங்கள்

| | | |
|---|---|---|
| தண்ணளி | - | இரக்கம், கிருபை |
| கானகம் | - | காடு |
| அரி | - | சிங்கம் |
| மிடி | - | வறுமை |
| வள்ளண்மை | - | ஈகை |
| மகுடம் | - | முடி |

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. குமண மன்னனின் சிறந்த குணங்கள் எவை?
2. குமண மன்னன் இளங்குமணனிடம் ஆட்சியை ஒப்படைக்க காரணம் என்ன?
3. பெருந்தலைச்சாத்தனாருடைய வறுமையைப் போக்க குமணமன்னன் கூறிய வழி யாது?
4. ஈகையின் சிறப்புப் பற்றிய குமணனது கருத்துகளை எழுதுக.
5. ''வீடு கொளுத்துகிற இராசாவுக்கு நெருப்புக்கொள்ளி எடுத்துக் கொடுக்கும் மந்திரிகள்'' என்ற தொடரால் உணர்த்தப்படுவதனை விபரிக்குக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

மேற்படி நாடகத்தை மேடை நாடகமாக நடியுங்கள்.

# இணைமொழிகள்

நாம் பொதுச்சொத்துக்களை கண்ணுங்கருத்துமாய் பாதுகாத்தல் வேண்டும்.

திருடன் கையுங் களவுமாய் அகப்பட்டுக் கொண்டான்.

மேற்குறிப்பிட்ட வாக்கியங்களில் இடம்பெறும் **கண்ணுங் கருத்துமாய், கையுங்களவுமாய்** முதலான தொடர்கள் ஓசையொழுங்கில் அமைந்த தொடர்கள் ஆகும். பொருட் செறிவைப் புலப்படுத்தும் வகையில் ஓசை யொழுங்கில் அமைந்த இரு சொற்கள் இணைந்து வருமாயின் அதனை இணைமொழிகள் என அழைப்பர்.

உற்றார் உறவினர்கள் இல்லாத மக்களை ஊர் மதிப்பதில்லை.

அத்தரை கரடுமுரடாகக் காணப்பட்டது.

**உற்றார் உறவினர், கரடு முரடு** என்பன ஒரு பொருள் குறித்த சொற்கள் இணைந்த இணைமொழிகள் (ஒரு பொருள் இணைமொழிகள்) ஆகும்.

ஆனந்தன் அல்லும் பகலும் மாடாய் உழைத்தான்.
ஏற்றமும் இறக்கமும் எல்லோர் வாழ்விலும் உண்டு.

**அல்லும் பகலும், ஏற்றமும் இறக்கமும்** என்பன மாறுபட்ட பொருள் குறித்து வந்த சொற்கள் இணைந்த இணைமொழிகள் (எதிர்ப்பொருள் இணைமொழிகள்) ஆகும்.

## பயிற்சி

**1.** பின்வரும் இணைமொழிகளை ஒரு பொருள் இணைமொழிகளாகவும் எதிர்ப் பொருள் இணைமொழிகளாகவும் வேறுபடுத்தி எழுதுக.

ஏழை எளியவர், பாவபுண்ணியம், விருப்பு வெறுப்பு, ஒட்டு உறவு, இன்னார் இனியார், ஒளிப்பு மறைப்பு, மேடு பள்ளம், ஆறித்தேறி, வற்றிவரண்டு, பாவபுண்ணியம்

**2.**வாக்கியத்தில் உள்ள இணைமொழிகளுக்குப் பொருத்தமான பொருளைத் தெரிவு செய்க

1.அவர் வேலையில் **குற்றம் குறை** காணமுடியாது.
( தவறுகள், ஒழுங்கீனம், அழுக்காறு )

2.சின்னவன் **மூச்சுப்பேச்சு** இல்லாமல் மயங்கிக் கிடந்தான்.
( சத்தம், அசைவாட்டம், மௌனம் )

3.தாய் தன் பிள்ளைகளுடன் **கொஞ்சிக் குலாவி**னார்.
( மகிழ்ச்சி, அணைத்தல், துன்பம் )

4.அந்தகன் **தட்டுத் தடுமாறி** நடந்து சென்றான்.
( துன்புற்று, மெலிந்து, சிரமப்பட்டு )

5.ஆசிரியர் தன் வேலையில் **கண்ணுங் கருத்துமாய்** இருந்தார்.
( கவனமாய், கவலையாய், ஒழுங்கீனமாய் )

6.நண்பனது துன்பத்தில் **கூடமாட** நின்று உதவினாள்.
( மகிழ்ந்து, ஒன்றிணைந்து, தள்ளி நின்று )

7.சினத்தினால் மன்னன் பகையரசனை **கண்ட துண்டமாக** வெட்டினான்.
( சிறிது சிறிதாக, பெரிது பெரிதாக, பல துண்டுகளாக )

8.செல்வந்தன் பொன்னைக் **கட்டிக் காத்தான்.**
( பாதுகாத்தல், பரிபாலித்தல், பராமரித்தல் )

9.முதல்வர் தொண்டனைப் **போற்றிப் புகழ்ந்தார்.**
( பாராட்டினார், தூற்றினார், பேசினார் )

10.தன் இழிவான செயலால் **கொஞ்சநஞ்சமிருந்த** மதிப்பும் போனது.
( பெரியளவு, சிறிதளவு, நல்லது )

# அறிக்கை எழுதுதல்

திரட்டப்பட்ட தரவுகளை ஒழுங்குமுறையாகத் தொகுத்து முன்வைப்பது அறிக்கை எனப்படுகின்றது. மாணவர்களின் பாடசாலை வாழ்க்கையிலும் பிற்கால வாழ்க்கையிலும் அறிக்கைகள் எழுதுவதற்குப் பல சந்தர்ப்பங்கள் உண்டாகலாம். ஆதலால் பாடசாலையிற் கற்கும் காலத்திலேயே மாணவர்கள் முறையாக அறிக்கை எழுதுவற்குப் பயிற்சி பெறுதல் வேண்டும்.

## அறிக்கை எழுதுவதற்கான படிமுறைகள்

★ தரவு திரட்டுதலும் குறிப்பெடுத்தலும்
★ குறிப்புக்களை மீளவும் பரிசீலித்தல்
★ திரட்டிய தரவுகளை சட்டகமாக ஒழுங்குபடுத்தல்
★ அறிக்கை எழுதுதல்
★ மீளவாசித்து, செப்பமிட்டு, மீள எழுதுதல்

## அறிக்கையின் அமைப்பு

அறிக்கை பின்வரும் உறுப்புக்களைக் கொண்டிருக்கும்.

★ தலைப்பு
★விளிப்பு
★ முன்னுரை
★ உடல் / விடயம்
★ முடிவுரை
★ ஒப்பம், பதவி முதலியன
★ திகதி

# மாதிரி அறிக்கை

## கலை இலக்கிய மன்றத்தின் வருடாந்த கலை இலக்கிய விழா

தலைவர் அவர்களே! பொறுப்பாசிரியர் அவர்களே! மன்ற உறுப்பினர்களே!

புசல்லாவை மகளிர் உயர்தரப் பாடசாலையின் கலை இலக்கிய மன்றம் வருடாந்தம் கலை இலக்கிய விழாவினை நடாத்தி வருகின்றது. மாணவர்கள் மத்தியில் கலை, இலக்கியம் சார்ந்த திறன்களை மேம்படுத்தும் வகையில், அவர்தம் ஆற்றல்களை வெளிப்படுத்தும் சந்தர்ப்பத்தை வழங்கும் முகமாகவும் தமிழுணர்வை ஏற்படுத்தும் வண்ணமாகவும் விழா நடாத்தப்படுகிறது. அவ்வகையில் இவ்வாண்டும் எமது மன்றம் கலை இலக்கிய விழாவினைச் சிறப்புற நடாத்தியது.

எமது மன்றத்தின் இவ்வாண்டுக்கான கலை இலக்கிய விழா 2016ஆம் ஆண்டு மே மாதம் 25ஆம் திகதி புதன்கிழமை நடைபெற்றது. எமது மன்றத்தின் தலைவர் செல்வி சு. நிரோசா தலைமையில் மு.ப. 9 மணிக்கு ஆரம்பமாகிய விழாவில் பிரதமவிருந்தினராக எழுத்தாளர் திரு.வே. காசிநாதன் அவர்களும் சிறப்பு விருந்தினராக ‘குறிஞ்சிமலர்’ பத்திரிகையின் ஆசிரியர் திருமதி கு. பத்மகுமாரி அவர்களும் கலந்து சிறப்பித்தனர். எமது கல்லூரியின் அதிபர், ஆசிரியர்கள், மாணவர்கள், பெற்றோர்கள், பழைய மாணவர்கள் அனைவரும் விழாவில் கலந்து கொண்டு விழாவை மெருகேற்றினர்.

மங்கல விளக்கேற்றலோடு விழா ஆரம்பமானது. மங்கல விளக்கினை எமது கல்லூரியின் நலன் விரும்பிகளான திரு. அ. வாசுதேவன், திருமதி வா. கௌரிப்பிரியா ஆகியோர் ஏற்றிவைத்தனர். இறைவணக்கமும் தமிழ்மொழி வாழ்த்தும் கல்லூரி மாணவிகளால் பாடப்பட்டன. மன்றத்தின் உபதலைவர் செல்வி க. வாசுகி வரவேற்புரையினை நிகழ்த்தினார். மாணவிகள் வரவேற்புநடனம் ஆடினர். தொடர்ந்து மாணவர்களின் பல்வகைப்பட்ட கலைநிகழ்ச்சிகள் பார்ப்போர் வியக்கும் வண்ணம் மேடையேறின. இசையரங்கு, கிராமிய நடனம், விவாத அரங்கு, வில்லுப்பாட்டு, கவிதாநிகழ்வு என்பன மேடையேறி அவையோரின் பாராட்டைப் பெற்றன. விசேடமாக ‘பிறைசூடாப் பித்தன்’ என்னும் நாடகம் கல்லூரியின் உயர்தர மாணவர்களால் மேடையேற்றப்பட்டு அனைவரதும் கவனத்தை ஈர்த்தது.

கல்லூரியின் அதிபர் திரு. அ. சுப்பிரமணியம் அவர்கள் விழாவில் உரையாற்றும்பொழுது மாணவர்கள் வெளிப்படுத்திய திறமைகளைப் பாராட்டியதோடு பாடசாலைக் காலத்தில் மாணவர்கள் தமது பல்துறைத் திறமைகளையும் வளர்க்கவேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்தினார். பிரதம விருந்தினர் தமது உரையில் மாணவர்களிடையே வாசிப்புப் பழக்கம் அருகிவருவதாகவும் வாசிப்பு அதிகரிக்கும்போதே கற்பனையாற்றல், படைப்பாற்றல் முதலியன விருத்திகாணும் எனவும் குறிப்பிட்டார். மாணவர்களால் நடாத்தப்பட்ட நிகழ்ச்சிகள் தரமானவையாக அமைந்திருப்பதாகவும் அவர் பாராட்டினார். சிறப்பு விருந்தினர் எமது கல்லூரியின் கடந்தகால சாதனைகளை நினைவூட்டி இனிவரும் காலங்களிலும் சகல துறைகளிலும் கல்லூரி பிரகாசிக்க வேண்டும் எனத் தமது விருப்பை வெளியிட்டார். மன்றத்தினால் நடாத்தப்பட்ட போட்டிகளில் வெற்றிபெற்றோருக்கான பரிசில்களை சிறப்பு விருந்தினரும் பிரதம விருந்தினரும் வழங்கிச்சிறப்பித்தனர். நன்றியுரை மன்றச் செயலாளர் செல்வி கு. சித்திராபானுவால் நிகழ்த்தப்பட்டது. கல்லூரி மாணவிகள் கல்லூரி கீதம் பாடியதைத் தொடர்ந்து பி.ப 12.45 மணிக்கு விழா நிறைவடைந்தது.

கலை இலக்கிய விழாவினை சிறப்புற நடாத்துவதில் பொருளாதார பலம் தந்தவர்கள் எமது அனுசரணையாளர்களே ஆவர். விழாவிற்கான அனுசரணைகளை புசல்லாவை முத்து ஜுவலரி நிறுவனத்தினரும் எமது கல்லூரியின் பழைய மாணவர்களான திரு. மா. கண்ணதாசன், திரு. வி. சாரங்கபாணி ஆகியோரும் வழங்கி உதவினார்கள். இவர்களுக்கு எமது மனமார்ந்த நன்றிகள். மேற்படி விழாவிற்காக முப்பத்தாறாயிரத்து எழுநூற்றி நாற்பத்தினான்கு ரூபா செலவிடப்பட்டது. விழா சிறக்க ஒத்துழைத்த கல்லூரி அதிபர், ஆசிரியர்கள், மாணவர்கள் மற்றும் மன்ற உறுப்பினர்களுக்கு நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வருடத்திற்கான கலை இலக்கிய விழா வெகு சிறப்பாகவும் பயன் மிக்கதாகவும் நிறைவேறியது. எமது கலை இலக்கிய மன்றத்தின் பிரதான செயற்பாடாக கலை இலக்கிய விழா அமைவதனால் இவ்வாண்டும் விழாவினைச் சிறப்புற நடாத்த எமது செயற்குழு அக்கறையோடு பெருமுயற்சியெடுத்துச் செயற்பட்டது. அதன் விளைவாக விழா சிறப்புற அமைந்ததில் நாங்கள் பெருமகிழ்ச்சியடைகின்றோம். கலை, இலக்கிய

ஆற்றலை மாணவரிடையே வளர்ப்பதில் எமது மன்றம் தொடர்ந்தும் அக்கறையோடு செயற்படும்.

03.06.2016

கு. சித்திராபானு
செயலாளர்
கலை இலக்கிய மன்றம்



## பயிற்சி

நான்கு குழுக்களாக இயங்கி, பின்வரும் விடயங்களில் ஒவ்வொன்றைத் தெரிவுசெய்து பொருத்தமான அறிக்கை தயாரியுங்கள்.

★ தங்களின் வகுப்பு மாணவர் மன்றத்தின் வாராந்தக் கூட்ட அறிக்கை.

★ நீங்கள் சென்றுவந்த கல்விச்சுற்றுலா தொடர்பான அறிக்கை.

★ உங்களது பாடசாலை விஞ்ஞான மன்றம் நடாத்திய விஞ்ஞானக் கண்காட்சி தொடர்பான அறிக்கை.

★ வானொலியில் கேட்டு அல்லது தொலைக்காட்சியில் பார்த்து இரசித்த நிகழ்ச்சியொன்று பற்றிய அறிக்கை.

# 19 தேனீயும் குளவியும்

தேனீயரே தேனீயரே - அன்பு
திரியாத தம்பியரே
யானொன்று கூறிடுவேன் - அதை
இன்பமுடன் கேட்டிடுவீர்.

பொன்னை வென்ற நின்னிறமும் - நல்ல
புள்ளிகளு முள்ளவனும்
என்னையிந்த மானிடர்கள் - கொல்ல
எண்ணுவதே னிங்குரைப்பாய்.

உருவத்தில் நீ யொவ்வுவையோ - என்னை
யுடல்வளத்தில் ஒவ்வுவையோ
பருமைதனில் ஒவ்வுவையோ - என்னைப்
பார்க்க அவர் கூசுவதேன்.

குளவியரே குளவியரே - எங்கள்
குலத்தினிலே மூத்தவரே
தெளிவுதருந் தூயவுடல் - கொண்ட
செல்வனாரே கேட்டிடுவீர்.

கூடுகட்டுந் தொழிலாலும் - மற்றக்
குறிகுணங்கள் தம்மாலும்
நாடிலெம்மிற் பேதமில்லை - என்னை
நல்லோ னெனுங் காரணங்கேள்.

கொட்டுதலில் நின்போலும் - யான்
கொடியோனு மல்ல கண்டாய்
பட்டப்பகல் தோறு மலர் - நறும்
பனித்தேன் யான் சேர்த்திடுவேன்.

யான்சேர்க்கும் தேனையெல்லாம் - அவர்
இன்பமா யெடுத்திடுவார்
தேன்சேர்க்கு மாசையன்றோ - என்னைத்
தினமுமவர் போற்றுவது.

**- மு. நல்லதம்பி**
‘ இளைஞர் விருந்து’

## அரும்பதங்கள்

ஒவ்வுவையோ - ஒப்பாவாயோ

பேதம் - வேறுபாடு

பனித்தேன் - இனிமையான தேன்

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. தேனீக்கும் குளவிக்கும் இடையேயான ஒற்றுமை, வேற்றுமைகள் எவை ?
2. ‘‘நன்மை செய்யாத போதிலும், தீமையாவது செய்யாது இரு!’’ என்பதனை இப்பாடலைக் கொண்டு விளக்குக.
3. புற அழகை வைத்து எவரும் நட்புப் பாராட்டுவதில்லை என்பதற்கு இப்பாடல் எவ்வாறு உதாரணமாகின்றது ?
4. தேனீ மக்களால் போற்றப்படுவதற்கான காரணம் யாது ?
5. கொட்டுதல், தேன்சேர்த்தல் எனும் சொற்களின் விளக்கத்தினை எழுதுக.

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

தேனீயும் குளவியும் என்ற பாடல்கள் தரும் பொருளை அடிப்படையாகக் கொண்டு உரையாடல் ஒன்றை எழுதுங்கள்.

# சொற்புணர்ச்சி II

**வாழை + மரம் → வாழைமரம்**

மேலே நாங்கள் அவதானித்த சொற்புணர்ச்சியில் வாழை என்ற சொல்லுடன் மரம் என்ற சொல் புணர்ந்து வாழைமரம் என்ற சொல் உருவாகியுள்ளது. இங்கு முதலில் உள்ள சொல் (வாழை) நிலைமொழி எனப்படும். இரண்டாவதாக உள்ள சொல் (மரம்) வருமொழி எனப்படும்.

சொற்புணர்ச்சியில் நிலைமொழியும் வருமொழியும் ஆகிய இரண்டு சொற்கள் தொடர்புபட்டிருந்தாலும் அச்சொற்களிலுள்ள இரண்டு எழுத்துக்களே நேரடியாகத் தொடர்புபடுகின்றன.

**வாழை + மரம் → வாழைமரம்**

↓ ↓

(ழ் + ஐ) + (ம் + அ)

நிலைமொழியின் இறுதி/ஈற்றெழுத்து நிலைமொழி ஈறு எனப்படும். மேலே நிலைமொழி ஈறாக '**ஐ**' உள்ளது.

வருமொழியின் முதல் எழுத்து வருமொழி முதல் எனப்படும். மேலே வருமொழி முதலாக '**ம்**' உள்ளது.

புணர்ச்சியில் நிலைமொழி ஈறும் வருமொழி முதலுமே நேரடியாகத் தொடர்புபடுகின்றன.

நிலைமொழி ஈற்றிலும் வருமொழி முதலிலும் இடம்பெறும் எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்டு சொற்புணர்ச்சியைப் பாகுபடுத்தலாம்.

**பலா + இலை → பலாவிலை**

↓ ↓

(ல்+ஆ)+ இ

இங்கு நிலைமொழி ஈற்றிலும் வருமொழி முதலிலும் உயிர் எழுத்துக்கள் இடம்பெறுகின்றன. இது ''உயிர்முன் உயிர் புணர்தல்'' எனப்படும்.

இவ்விதம் சொற்புணர்ச்சிகள் நான்கு வகைப்படும். அவையாவன;

**உயிர்முன் உயிர் புணர்தல்**

**உயிர்முன் மெய் புணர்தல்**

**மெய் முன் உயிர் புணர்தல்**

**மெய் முன் மெய் புணர்தல்**




**உயிர்முன் உயிர் புணர்தல்**

பூ + இதழ் → பூவிதழ்

மணி + ஓசை → மணியோசை

மேலேயுள்ள இரண்டு புணர்ச்சிகளிலும், நிலைமொழியீற்றிலும் வருமொழி முதலிலும் உயிர் எழுத்துக்களே இடம்பெற்றுள்ளன. புணர்ச்சியின் போது யாது நிகழ்ந்துள்ளது என அவதானிப்போம்.




இங்கு '**வ்**' எனும் மெய்யெழுத்துத் தோன்றி வருமொழிமுதலான 'இ' எனும் உயிர் எழுத்துடன் இணைந்து 'வி' எனும் உயிர்மெய்யெழுத்தாகியுள்ளது.




இங்கு '**ய்**' எனும் மெய்யெழுத்துத் தோன்றி வருமொழி முதலான 'ஓ' எனும் உயிர் எழுத்துடன் இணைந்து, 'யோ' எனும் உயிர் மெய்யெழுத்தாகி யுள்ளது.

மேற்கண்ட உதாரணங்களிலிருந்து நிலைமொழியீற்றிலும் வருமொழி முதலிலும் உயிரெழுத்து வரும் சந்தர்ப்பங்களில் புணர்ச்சியின்போது மெய்யெழுத்துத் தோன்றுவதனை விளங்கிக்கொள்வோம்.

உயிர்முன் உயிர் புணரும் சந்தர்ப்பங்களில் மெய்யெழுத்துத் தோன்றி புணர்ச்சி இடம்பெறும். இவ்வாறு தோன்றும் மெய்யெழுத்து 'உடம்படு மெய்' எனப்படும்.

நிலைமொழியீற்றில் இ,ஈ,ஐ ஆகிய உயிரெழுத்துக்கள் வரின், உடம்படு மெய்யாக யகர மெய் (ய்) தோன்றும்.

நிலைமொழியீற்றில் அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ ஆகிய உயிரெழுத்துக்கள் வரின் உடம்படுமெய்யாக வகரமெய் (வ்) தோன்றும்.

நிலைமொழியீற்றில் ஏ எனும் உயிரெழுத்துவரின் உடம்படுமெய்யாக யகரமெய் (ய்) அல்லது வகரமெய் (வ்) தோன்றும்.

## பயிற்சி

பின்வரும் சொற்களைப் புணர்த்தி எழுதுவதோடு, புணர்ச்சியில் தோன்றும் உடம்படுமெய்யினையும் எழுதுக.

1. விலா + எலும்பு
2. பல + உயிர்
3. பனி + இரவு
4. கோ + இல்
5. கலை + இன்பம்
6. தே + ஆரம்
7. அரிசி + இல்லை
8. பூ + அழகு
9. தீ + எரிந்தது
10. திரு + அடி

## உவமைத்தொடர்

உவமையணிக்கான உவமானங்களை உள்ளடக்கிய தொடர்களே உவமைத் தொடர்கள் எனப்படுகின்றன. கூறவந்த விடயத்தினைத் தெளிவாகக் கூற இத்தொடர்கள் உதவுகின்றன. சில உவமைத்தொடர்கள் கீழே தரப்படுகின்றன.

★ அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல
★ இலவு காத்த கிளி போல
★ குடத்துள் வைத்த விளக்குப் போல
★ கொழுகொம்பற்ற கொடி போல
★ தொட்டனைத் தூறும் மணற்கேணி போல
★ நகமும் சதையும் போல
★ பசுமரத்தாணி போல
★ மீகாமன் இல்லாத மரக்கலம் போல
★ விளக்கொடு விளையாடும் விட்டில் போல
★ வேலி பயிரை மேய்ந்தாற் போல

### பயிற்சி

பின்வரும் உவமைத் தொடர்களை பொருத்தமாக வாக்கியங்களில் வைத்து எழுதுக.

1. அக்கினியிற் பட்ட மெழுகு போல
2. அத்தி பூத்தாற் போல
3. ஆகாயத்திற் கோட்டை கட்டுவது போல
4. உட்சுவரிருக்க புறச்சுவர் கோலஞ்செய்வது போல
5. கன்றைப் பிரிந்து கதறும் பசுவைப் போல
6. நடுவூரில் நல்ல மரம் பழுத்ததைப் போல
7. பொன்னின் குடத்திற்குப் பொட்டிட்டது போல
8. ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாமை போல
9. ஒளியைக் கண்ட இருள் போல
10. உலக்கை தேய்ந்து உளிப்பிடியானதைப் போல

# 20 அடக்கம் உடைமை

## (திருக்குறள்)

அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

**பொருள்:** *அடக்கம் ஒருவனை உயர்த்தித் தேவருள் சேர்க்கும்; அடக்கம் இல்லாதிருத்தல், பொல்லாத இருள்போன்ற தீய வாழ்க்கையில்செலுத்திவிடும்.*

காக்க பொருளா அடக்கத்தை; ஆக்கம்
அதனின் ஊஉங்கு இல்லை உயிர்க்கு.

**பொருள்:** *அடக்கத்தை உறுதிப் பொருளாகக்கொண்டு போற்றிக்காக்க வேண்டும். அந்த அடக்கத்தைவிட மேம்பட்ட செல்வம் உயிர்க்கு இல்லை.*

செறிவு அறிந்து சீர்மை பயக்கும் அறிவு அறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின்.

**பொருள்:** *நிறைவான அறிவுத் தெளிவுடன் நல்வழியில் அடங்கி ஒழுகப் பெற்றால், அந்த அடக்கம் நல்லோரால் அறியப்பட்டு மேன்மை பயக்கும்.*

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

**பொருள்:** *தன் நிலையிலிருந்து மாறுபடாமல் அடங்கி ஒழுகுவோனுடைய உயர்வு, மலையின் உயர்வைவிட மிகவும் பெரிதாகும்.*

எல்லார்க்கும் நன்றுஆம் பணிதல்; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

**பொருள்:** *பணிவுடையராக ஒழுகுதல் பொதுவாக எல்லோர்க்கும் நல்லதாகும்; அவர்களுள் சிறப்பாகச் செல்வர்க்கே மற்றொரு செல்வம் போன்றதாகும்.*

ஒருமையுள் ஆமைபோல் ஐந்து அடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து.

**பொருள்:** ஒரு பிறப்பில், ஆமைபோல் ஐம்பொறிகளையும் அடக்கியாள வல்லவனானால், அஃது அவனுக்குப் பல பிறப்புக்களிலும் காப்பாகும் சிறப்பு உடையது.

யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

**பொருள்:** காக்க வேண்டியவற்றுள் எவற்றைக் காக்காவிட்டாலும் நாவையாவது காக்கவேண்டும்; காக்கத் தவறினால் சொற் குற்றத்தில் அகப்பட்டுத் துன்புறுவர்.

ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றுஆகா தாகி விடும்.

**பொருள்:** தீய சொற்களின் பொருளால் விளையும் தீமை ஒன்றாயினும் ஒருவனிடம் உண்டானால், அதனால் மற்ற அறங்களாலும் நன்மை விளையாமல் போகும்.

தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு.

**பொருள்:** தீயினால் சுட்ட புண்ணின் அடையாளம் புறத்தே இருந்தாலும் உள்ளே ஆறிவிடும்; ஆனால் நாவினால் தீய சொல் கூறிச் சுடும் வடு, என்றும் ஆறாது.

கதம்காத்துக் கற்றுஅடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

**பொருள்:** சினம் தோன்றாமல் காத்து, கல்வி கற்று, அடக்கமுடையவனாக இருக்க வல்லவனை அடைவதற்குரிய காலத்தை, அவனுடைய வழியில் சென்று, அறம் பார்த்திருக்கும்.

## அரும்பதங்கள்

அமரர் - தேவர்

செறிவு - நிறைவு

சீர்மை - சிறப்பு, செம்மை

ஏமாப்பு - காவல், மிகு களிப்பு

கதம் - கோபம், சினம்

இழுக்கு - குற்றம்

செவ்வி - அடைவதற்கு ஏற்ற சமயம்

வடு - தழும்பு

### கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. உயர்வானதொரு பொருள் என அடக்கத்தைக் கருதுவதற்கான காரணம் யாது?
2. ‘‘ நிலையில் திரியாது அடங்குதல்’’ என்பதை விளக்குக.
3. ‘‘பணிதல் என்பது இயலாமையின் ஒரு பண்பல்ல’’ என்பதை விளக்கி எழுதுக.
4. உரையாடலின் போது கவனக் குறைவாகக் கையாளப்படும் வார்த்தைகள் எத்தகைய கெடுதிகளை உண்டாக்கும் என்பதனை ‘‘அடக்கமுடைமை’’ அதிகாரத்தின் 7,8,9 வது குறள்கள் கொண்டு விளக்குக.
5. எத்தகைய பண்பைக் கொண்டிருப்பவர் அறவாழ்வுக்கு உரியவராய்ப் போற்றப்படுவார் என வள்ளுவர் குறிப்பிடுகிறார்?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

‘அடக்கம் உடைமை’ அதிகாரத்தில் உள்ள குறள்களை மனனம் செய்து பாவோதல் முறையில் ஓதிக் காட்டுங்கள்.

# நிறுத்தக்குறிகள்

ஒரு விடயத்தினைத் தெளிவாகவும் அழுத்தமாகவும் வாசகர் புரிந்து கொள்ளும் வண்ணமாகவும் எழுதுவதற்கு நிறுத்தக்குறிகள் பெரிதும் உதவும், தர® 6,7 என்பவற்றில் நாம் கற்றுள்ள

| | |
|---|---|
| **முற்றுப்புள்ளி** | ( . ) |
| **காற்புள்ளி** | ( , ) |
| **முக்காற்புள்ளி** | ( : ) |
| **வினாக்குறி** | ( ? ) |
| **மெய்ப்பாட்டுக் குறி** | ( ! ) |
| **மேற்கோட்குறி** | (‘‘..’’) |
| **அடைப்புக்குறி** | (    ) |

ஆகிய நிறுத்தக்குறிகளை நினைவுபடுத்திக் கொள்வோம்.

கீழ்வரும் பந்தியினை வாசித்து, அதில் நிறுத்தக்குறிகள் பயன்படுத்தப் பட்டிருக்கும் முறையினை அவதானியுங்கள்.

மாதிரியின் வீட்டிலே, கண்ணகி அன்போடு ஆக்கி அளித்த உணவை உண்டு மகிழ்ச்சியோடு இருந்த கோவலன் கண்ணகியை நோக்கி, ‘‘நான் நினது சிலம்பினொன்றைக் கொண்டு சென்று விற்று வருவேன், யான் வருந்துணையும் கவலையுறாதிருப்பாயாக’’ என்று கூறி மதுரை நகரை நோக்கிச் சென்றான். மதுரை வீதியிலே பொற்கொல்லன் ஒருவனைக் கோவலன் சந்தித்து, ‘‘அரசன் தேவி பூணுவதற்குரியதொரு சிலம்பினை உன்னால் விலை மதிக்க முடியுமா?’’ என வினவினான். அப்பொற்கொல்லன், முன்பு அரசன் தேவியின் சிலம்பைத் திருடியவன் ஆதலால் கோவலன் மேல் அக்குற்றத்தைச் சுமத்தினான். அரசனும் ஆராயாது கட்டளையிட காவலனொருவன் தன் வாளினால் கோவலனை வெட்டி வீழ்த்தினான். ஐயகோ! அவலம் நேர்ந்ததே. அதேவேளையில் ஆயர் சேரியிலிருந்த கண்ணகி, பல தீய உற்பாதங்கள் (தீய அறிகுறிகள்) நிகழ்ந்ததைக் கண்டு கலங்கினாள்.

## பயிற்சி

பின்வரும் பந்தியில் பொருத்தமான இடங்களில் உரிய நிறுத்தக்குறிகளை இடுங்கள்.

துருவாச முனிவர் ஏராளமான சீடர்கள் புடைசூழ பாண்டவர்களின் இருப்பிடம் தேடி விருந்தாளியாகப் போனார் அவர் போன நேரம் பாஞ்சாலி உணவு உண்டு அட்சய பாத்திரத்தை அலம்பி வைத்திருந்தாள் துருவாச முனிவர் தருமரிடம் தாம் வந்ததைச் சொல்லிவிட்டுச் சீடர்களுடன் குளிக்கப் போனார் அடடா இவ்வளவு பேருக்கு எவ்வாறு உணவளிப்பது என தருமர் கலங்கினார் ஏனையவர்களிடம் ஆலோசனை கேட்டார் அப்போது சகாதேவன் அண்ணா எல்லாக் கஷ்டங்களிலிருந்தும் அவ்வப்போது நம்மைக் காப்பாற்றிய கண்ணனை நம்புவதுதான் இதற்குவழி என்றான்.

## வரவேற்புரை

உங்களது பாடசாலையில் இடம்பெற்ற விழாக்களில் நீங்கள் பங்கு பற்றி இருக்கின்றீர்களல்லவா? அந்த விழாக்களில் வரவேற்புரை நிகழ்த்தப்படுவதனை நீங்கள் செவிமடுத்திருத்தல் கூடும். ஒருவேளை வரவேற்புரையாற்றும் வாய்ப்பு உங்களுக்கும் கிடைத்திருக்கலாம். அவ்வாறான சந்தர்ப்பங்களில் வரவேற்புரையில் என்னென்ன கூறப்படுகின்றன என அவதானித்திருக்கின்றீர்களா?

★ விழாக்கள், கூட்டங்கள் முதலான நிகழ்வுகளில் வந்திருப்போரை வரவேற்கும் நோக்குடன் நிகழ்த்தப்படும் உரையே வரவேற்புரை யாகும்.

★ நோக்கத்திற்கு ஏற்றவாறு வரவேற்புரை சுருக்கமாக நிகழ்த்தப்படுதல் அவசியமானதாகும். தேவையற்ற விடயங்களை வரவேற்புரையில் பேசுதலைத் தவிர்க்க வேண்டும்.

★ வரவேற்புரையானது விளிப்பு, வரவேற்றல், முடிப்பு ஆகிய பகுதிகளை உள்ளடக்கியிருக்கும்.

- ★ விளிக்கும்போதும் வரவேற்கும்போதும் சமுகம் தந்திருப்போரின் வரிசையொழுங்கினைக் (முதன்மை ஒழுங்கினைக்) கவனத்தில் கொள்ளல் வேண்டும்.
- ★ உரையில் பயன்படுத்தும் சொற்கள் கனிவானவையாகவும் ஈர்ப்பு மிக்கவையாகவும் இருப்பது சிறப்பானதாகும்.

## மாதிரி வரவேற்புரை

*கல்லூரியின் வருடாந்த பரிசளிப்பு விழாவிற்குத் தலைமையேற்றிருக்கும் கல்லூரியின் அதிபர் அவர்களே, பிரதம விருந்தினராக வருகை தந்துள்ள கிழக்கிலங்கைப் பல்கலைக்கழக விஞ்ஞான பீடத்தின் பீடாதிபதி பேராசிரியர் வ. அருட்குமரன் தம்பதியினரே, நினைவுப்பேருரையினை நிகழ்த்த வந்திருக்கும் கல்லூரியின் பழைய மாணவரும் சட்டத்தரணியுமான திரு.மு. கருணாகரன் அவர்களே, கல்வியதிகாரிகளே, பெற்றோர்களே, பழைய மாணவர்களே, ஆசிரியர்களே, சக மாணவர்களே அனைவருக்கும் அன்பு வணக்கம்.*

*மாணவர்களின் திறமைகளுக்குப் பரிசளித்து ஊக்குவிக்கும் வருடாந்தப் பரிசளிப்பு விழாவில் எமது கல்லூரியின் அன்பான அழைப்பையேற்று பிரதம விருந்தினராகக் கலந்துகொண்டு சிறப்பிக்கின்ற கிழக்கிலங்கைப் பல்கலைக்கழக விஞ்ஞான பீடத்தின் பீடாதிபதி பேராசிரியர் வ. அருட்குமரன் அவர்களையும் பரிசளித்து மாணவர்களை மகிழ்விக்க வருகை தந்துள்ள திருமதி மீனலோஜினி அருட்குமரன் அம்மையார் அவர்களையும் வரவேற்பதில் நாம் பெருமகிழ்ச்சி யடைகின்றோம். தமது ஆளுமைமிக்க செயற்பாடுகளால் எமது நாட்டிற்குப் பெருமை சேர்க்கின்ற பேராசிரியர் அவர்கள் சிறந்த ஆசிரியராகவும் சிறந்த ஆய்வாளராகவும் விளங்குகின்றார். மாணவர்களாகிய எமக்கெல்லாம் நல்லதொரு முன்னுதாரணமாக விளங்குகின்ற பேராசிரியரின் வருகை எமது கல்லூரியைப் பெருமைப் படுத்துகின்றது. திருமதி மீனலோஜினி அருட்குமரன் அம்மையார் அவர்களின் கரங்களால் பரிசில்களைப் பெற, நாங்களெல்லோரும் ஆர்வமாக உள்ளோம். பல்வேறு வேலைப்பளுக்களுக்கு மத்தியிலும் எமக்காக வருகை தந்துள்ளீர்கள். உங்கள் இருவரையும் மிகுந்த நன்றியுடன், ''வருக வருக'' என வரவேற்கின்றோம்.*

எமது கல்லூரியைத் ஸ்தாபித்து நாமெல்லாம் கல்விபெற களமமைத்த கல்லூரியின் ஸ்தாபகரை நினைவுறுத்தி நினைவுப்பேருரையை நிகழ்த்த எமது கல்லூரியின் பழைய மாணவரும் புகழ்பெற்ற சட்டத்தரணியுமான திரு மு. கருணாகரன் அவர்கள் வருகை தந்துள்ளார்கள். சட்டத்துறையில் தனக்கென தனியிடத்தைப் பெற்றுள்ள திரு. மு. கருணாகரன் அவர்கள் சிறந்த பேச்சாளராகவும் விளங்குகின்றார். அது மட்டுமன்றி எமது கல்லூரியின் வளர்ச்சியில் அக்கறை கொண்டு பல்வேறு செயற்பாடுகளை முன்னெடுத்து வருபவர். திரு. மு. கருணாகரன் அவர்களின் உரையைக் கேட்கும் ஆவலோடு இருக்கின்றோம். இந்நிகழ்வில் கலந்து சிறப்பிக்கும் அனைவரையும் அன்போடு வரவேற்கின்றோம். விழாவில் கலந்து சிறப்பிக்க வந்துள்ள எமது கல்வி வலயத்தின் உதவிக் கல்விப்பணிப்பாளர் திரு.அ.மு. இஸ்மாயில் அவர்களையும் ஆசிரிய ஆலோசகர்களையும் மிகுந்த மகிழ்ச்சியோடு வரவேற்கின்றோம்.

பரிசளிப்பு விழாவினைக் கண்டுகளிக்க வருகை தந்துள்ள பெற்றோர்களையும் பழைய மாணவர்களையும் கல்லூரியின் நலன் விரும்பிகளையும் வரவேற்பதில் நாம் மிகுந்த மகிழ்ச்சியடைகின்றோம். மற்றும், விழாவில் கலந்துகொண்டுள்ள அனைவரையும் மிகுந்த அன்போடு வரவேற்கின்றோம்.

பரிசளிப்பு விழாவென்பது கல்லூரியின் மிகப் பிரதானமானதொரு விழாவாகும். மாணவர்களின் சாதனைகளைக் கௌரவித்து, உற்சாக மூட்டும் இந்த விழா உங்களது வருகையினால்தான் சிறப்படைகிறது; முழுமைபெறுகின்றது. தங்களது வருகையால் மாணவர்களாகிய நாம் மகிழ்ச்சியும் கௌரவமும் பெறுகின்றோம் என்பதனை நினைவுபடுத்தி உங்களனைவரையும் வருக வருகவென வரவேற்று விடைபெறுகின்றேன். நன்றி, வணக்கம்.

பயிற்சி

★ ஐந்து குழுக்களாகப் பிரிந்து கலந்துரையாடி பின்வரும் நிகழ்வுகளுக்குரிய வரவேற்புரைகளைத் தயாரியுங்கள்.

1. மாணவர் மன்றத்தின் மாதாந்தக் கூட்டம்.
2. கல்லூரியில் தமிழ்மன்றம் நடாத்தும் கலைவிழா.
3. கல்லூரியின் வருடாந்த இல்ல மெய்வல்லுனர் போட்டி.
4. கிராம சனசமூக நிலையம் நடாத்தும் நூலக வார நிகழ்வு.
5. கிராமத்தில் புதிய சந்தைக் கட்டடத்திற்கான அடிக்கல் நாட்டும் விழா.

★ குழுக்களில் ஒருவர் மேலே தயாரிக்கப்பட்ட வரவேற்புரையினை நிகழ்த்துங்கள்.

# 21 மலையக நாட்டார் பாடல்கள்

மக்களிடையே வழங்கி வருகின்ற வாய்மொழிப் பாடல்களே நாட்டார் பாடல்கள் எனப்படுகின்றன. இவை வாய்மொழிப் பாடல்கள், கிராமியப் பாடல்கள், மக்கள் கவிதைகள் எனப் பல பெயர்களில் அழைக்கப்பட்டு வருகின்றன. இயற்றியோர் யார் என்பதை அறிய முடியாதுள்ளமை இவற்றின் முக்கிய பண்பாகும்.

நாட்டார் பாடல்கள் பெரும்பாலும் கூட்டுவாழ்க்கை முறையைப் பிரதிபலிக்கின்றன. இவை பெரும்பாலும் சோகத்தை இசைத்தாலும் கூடவே நம்பிக்கையுணர்வினையும் வெளிப்படுத்துகின்றன. அந்த வகையில், மலையக நாட்டார் பாடல்கள் என்பது மலையக மக்களின் வாழ்வையும் உணர்வுகளையும் பிரதிபலித்து நிற்பனவாகும். அவை பல வடிவங்களில் காணப்படுகின்றன. தாலாட்டுப் பாடல்கள், கும்மிப் பாடல்கள், கோலாட்டப்பாடல்கள், ஒப்பாரிப்பாடல்கள், கதைப் பாடல்கள், விளையாட்டுப்பாடல்கள், தொழிற் பாடல்கள் எனப் பல வகைப்படும்.

தென்னிந்திய வழித்தோன்றல்களான மலையக மக்கள் உழைப்புக்கான உடலை மட்டும் சுமந்து வரவில்லை. உளத்தோடு நாட்டார் கலைகளையும் சுமந்து வந்தனர்.



தமிழகத்திலிருந்து இங்கு வரும்போது அவர்களின் மன உணர்வுகள் இவ்வாறு பாடல்களில் வெளிப்பட்டன:

**வாட அடிக்குதடி**
**வடகாத்து வீசுதடி**
**சென்னல் மணக்குதடி**
**நாம் சேர்ந்து வந்த கப்பலிலே**

இம்மக்கள் மலையகத்தில் குடியேறிய பின் தாயக நினைவுகள் அவர்களிடம் இவ்வாறு பிரவாகம் கொள்கின்றன:

**ஊரான ஊரிழந்தேன்**
**ஒத்தப்பனை தோப்பிழந்தேன்**
**பேரான கண்டியிலே**
**பெத்த தாயே நா மறந்தேன்**

புதிய கனவுகளோடும் எதிர்பார்ப்புகளோடும் வந்த மக்களிடம் புதிய இடம் குறித்த ஏமாற்றம் பின்வருமாறு வெளிப்பட்டது:

**கண்டி கண்டி எங்காதிங்க**
**கண்டி பேச்சு பேசாதீங்க**
**கண்டி படும் சீரழிவே**
**கண்டபேரு சொல்லுவாங்க.**

புதிய மண்ணில் பெற்ற அனுபவங்களுடன் தோட்டங்கள் உருவாக்கிய விதம் குறித்து பின்வரும் பாடல்கள் அவர்களிடம் பிறந்தன:

**கூனி அடிச்ச மல**
**கோப்பிக் கன்னு போட்ட மல**
**அண்ணன தோத்த மல**
**அந்தா தெரியுதடி**

மேலும் கோப்பி, ரப்பர், தேயிலை எனும் பயிர்களை இம்மலை வெளிகளில் உற்பத்தி செய்து அதன் பயனைத் தாங்கள் அனுபவிக்க முடியாத சோகத்தையும் இதன்போது அனுபவித்த துயரங்களையும் பின்வரும் பாடல்கள் மூலம் அவர்கள் விளக்குகின்றனர்.

**பழமும் எடுக்கவில்லை**
**பழைய சோறும் திங்கவில்லை**
**வீட்டுக்கு போகவில்லை**
**வேகுதையா என்மனசு**

**எண்ணிக் குழி வெட்டி**
**இடுப்பொடிஞ்சி நிக்கயில**

**'வெட்டு வெட்டு' எங்குறானே**
**வேலையத்த கங்காணி**

இவ்வாறு மலையக மக்கள் தம் மன உணர்வுகளை வெளிப்படுத்தும் மலையக நாட்டார் பாடல்கள் தொழிலை முன்னிலைப்படுத்தியே தமது வாழிடம், காதல்,சோகம், மகிழ்ச்சி, கூட்டுமுயற்சி என்பனவற்றை வெளிப்படுத்தி நிற்கின்றன.

## அரும்பதங்கள்

வடகாத்து - வடக்குதிசையில் இருந்து வீசும் காற்று

சென்னல் - செந்நெல்

எங்காதிங்க - என்று கூறாதீர்கள்

எங்குறானே - என்கின்றானே



## கிரகித்தற் பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நாட்டார் பாடல்கள் வேறு எப்பெயர்களால் அழைக்கப்படுகின்றன?
2. நாட்டார் பாடல்களின் தனித்துவமான பண்புகள் யாவை?
3. மலையகத்தில் குடியேறிய மக்களிடம் தாயக நினைவுகள் எவ்வாறு தோன்றுகின்றன?
4. தேயிலை தோட்ட தொழிலாளர்கள் அனுபவித்த துன்பங்களை எடுத்துக் கூறுக.
5. மலையக நாட்டார் பாடல்கள் எவற்றைப் பற்றிப் பாடப்பட்டுள்ளன?

## மொழித்திறன் விருத்திச் செயற்பாடு

குழுக்களாகச் செயற்பட்டு உங்கள் பிரதேசத்திற்குரியதான நாட்டார் பாடல்களைத் தொகுத்து சிறு நூல் ஒன்றை ஆக்குங்கள்.

### மரபுத்தொடர்கள்

வழமையான தமது பொருளை உணர்த்தாமல் குறிப்புப் பொருளை தொன்றுதொட்டு உணர்த்திவரும் சொற்றொடர்களை மரபுத்தொடர்கள் என்கிறோம். இங்கு சில மரபுத் தொடர்களும் அவையுணர்த்தும் பொருள்களும் தரப்படுகின்றன.

1. அக்கரைப்பச்சை - பொய்த்தோற்றம்
2. அடங்காப் பிடாரி - யாருக்கும் அடங்காதவன்
3. இரண்டகஞ் செய்தல் - கெடுதி நினைத்தல்
4. இழுத்தடித்தல் - அலைய வைத்தல்
5. ஒத்துப்பாடுதல் - சிந்தனையின்றி உடன்படுதல்
6. கங்கணங்கட்டடல் - தீவிரமாக முனைந்து நிற்றல்
7. கைகலத்தல் - சண்டைசெய்தல்
8. குதிரைக்கொம்பு - இல்லாத/நடக்காத ஒன்று
9. கொள்ளி சொருகுதல் - தீங்கு விளைவித்தல்
10. தலையெடுத்தல் - உயர்வடைதல்
11. பகற்கனவு - முடியாத ஒன்றை முடிப்பதாக நினைத்தல்
12. முகங்கடுத்தல் - சினத்தல்/வெறுத்தல்
13. வயிறு கழுவுதல் - சிரமப்பட்டு வாழ்க்கையை நடாத்துதல்
14. வாயைக் கட்டுதல் - சிக்கனமாயிருத்தல்
15. வெட்டிப்பேச்சு - வீண்பேச்சு

## பயிற்சி

பின்வரும் மரபுத்தொடர்களை அவை உணர்த்தும் பொருள் புலப்படுமாறு வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

1. ஆறப்போடுதல்
2. இடங்கொடுத்தல்
3. ஒட்டைவாயன்
4. உலைவைத்தல்
5. கசக்கிப்பிழிதல்
6. செவிமடுத்தல்
7. பூசி மெழுகுதல்
8. புண்படுத்தல்
9. வாய்காட்டடல்
10. வால்முளைத்தல்

## துண்டுப்பிரசுரம்

பல்வேறு நோக்கங்களுக்காக துண்டுப்பிரசுரங்கள் வெளியிடப்படு கின்றன. நீங்கள் பல துண்டப்பிரசுரங்களைக் கண்டிருப்பீர்கள். துண்டுப் பிரசுரம் எழுதப்படுவதன் நோக்கம், துண்டுப் பிரசுரத்தின் பண்புகள், அதன் அமைப்பு என்பன தொடர்பில் தரம் 7 இல் கற்றவற்றை நினைவுபடுத்திக்கொள்வோம்.

துண்டுப்பிரசுரங்கள் பொதுமக்களால் இலகுவில் புரிந்துகொள்ளப்பட வேண்டியவையாதலால், எளிமையானதும் தெளிவானதுமான மொழி நடையில் அவை எழுதப்படுதல் வேண்டும்.

## பயிற்சி

பின்வரும் தேவைகளுக்கு ஏற்றவகையில் துண்டுப் பிரசுரங்களை எழுதுக.

★ புவி வெப்பமடைதலைக் குறைக்கும் நோக்கில் மரநடுகையிலும் மரங்களைப் பேணிப்பாதுகாத்தலிலும் மக்களை ஈடுபாடு கொள்ளச் செய்தல்.

★ வேகமாக அதிகரித்து வரும் ஆரோக்கியமின்மை, நோய்கள் தொடர்பான பிரச்சினைகள், அவற்றை வெற்றிகொள்ள போஷாக்கான உணவுகளை உண்பது என்பன தொடர்பான விழிப்புணர்வை ஏற்படுத்தல்.

★ வாசிப்புப் பழக்கத்தின் அவசியம், வாசிப்புப் பழக்கத்தினை வளர்த்துக் கொள்ளும் வழிகள் என்பன தொடர்பாக மாணவர்களை அறிவுறுத்தல்.

★ கல்வியின் முக்கியத்துவம், கல்வியைப் பெறுவதற்கு பாடசாலைக்கு தவறாமல் வரவேண்டியதன் அவசியம் என்பன தொடர்பில் மாணவருக்கு அறிவூட்டடல்.